# கல்கி

வெள்ளி
விழா
பரிசுத்திட்டம்

முதல் பரிசு
நாவல்

அடுத்த
இதழில்
ஆரம்பமாகிறது



இலங்கையில்
35 சதம்

KALKI

31.7.1966 35
காசு

நினைவுத் திரையில்...



சென்னையில் கிரிக்கெட் விழா முடிந்து பல நாட்களாகின்றன. எனினும், மாணவர்கள் தெருவில் நடக்கும்போதும், வகுப்பு அறையிலும்கூட அமர்நாத் பந்தை ஓங்கி அடிப்பது போல், தாங்களும் செய்து பார்த்து மகிழ்கிறார்கள். அதே மாதிரி உபாத்தியாயர்களும் அமர்நாத் பந்தை ஆடும் தோரணையைப் பின்பற்றித் தாங்களும் பிரம்பைச் சுழற்றலாம் என்று அபிப்பிராயப்படுகிறார்கள் !

கல்கி ஏப்ரல் 1, 1945


# கல்கி

பராபவ, ஆடி 15 : ஜுலை 31


## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

விலை உயர்வு
நாணய வீழ்ச்சி
வரிகள்
அந்நியக் கடன்கள்
மீண்டும் நாங்களே வெற்றி பெறுவோம்!

பசையை மறுபடியும் குழாய்க்குள் செலுத்துவது எப்படி என்பதே பிரச்னை!
தேசபொருளாதாரம்
ரூபாயின் மதிப்புக் குறைப்பு
PK

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 25 ● இதழ் 53



# திரு காமராஜின் செப்படி வித்தை

சோஷலிஸம், ஜனநாயகம், மதச் சார்பின்மை, கூட்டுச் சேராமை ஆகியவை இந்தியா கடைப்பிடிக்கும் அஸ்திவாரக் கொள்கைகள் என்று பிரதமர் இந்திரா காந்தி அவர்கள் மாஸ்கோவில் பேசியிருக்கிறார். 'இருந்தாலும் நாங்கள் வெறும் சித்தாந்தங்களின் அடிமையாக இருக்க வில்லை' என்று தொடர்ந்து கூறியிருக்கிறார். ஆனால் இது உண்மை அல்ல என்பதை நாம் நன்கு அறிவோம். வெறும் சித்தாந்தப் பிடிவாதத்துக்காகத்தான் சோஷலிஸத்தையும், கூட்டுச் சேராமையையும் சர்க்கார் பிடித்துக் கொண்டிருக்கிறதே யொழிய, இவற்றால் எவ்வித நன்மையும் ஏற்பட வில்லை என்பதை நன்கு கண்டு விட்டோம்.

இனி 'மதச் சார்பின்மை' பற்றிக் கவனிக்கலாம். இந்திய ஆட்சியின் சாஸனகர்த்தர்கள், எல்லா மதங்களும் இங்கு ஒருபோல் மதிக்கப்படுமே யல்லாமல் எந்தத் தனி ஒரு மதத்துக்கும் விசேஷ அநுகூலம் தரப்படமாட்டாது என்ற கருத்திலேயே மதச் சார்பின்மையை அங்கமாக அமைத்தார்கள். ஆனால் ஆட்சியாளர்கள் இதை உள்ளூற ஒரு நாஸ்திக வழியாக்கிக் கொண்டிருப்பதைக் காண்கிறோம். ஆண்டவனைப் பற்றிக் காலஞ்சென்ற பிரதமர் நேரு அவர்களோ, அவரது புதல்வியாகிய இன்றையப் பிரதமர் இந்திரா அவர்களோ ஒரு போதும் குறிப்பிடுவதில்லை. ஆண்டவனை விலக்கி விட்டோம் என்பதை நுட்பமாகக் குறிப்பிட்டால் கம்யூனிஸ ருஷியா மகிழும் என்ற எண்ணத்திலேயே ஸ்ரீமதி இந்திரா அங்கு மதச் சார்பின்மை பற்றிக் கூறியிருக்கக் கூடும்.

அவர் குறிப்பிட்ட நாலாவது அடிப்படைக் கொள்கை 'ஜனநாயகம்' என்பதாகும். எதிர்க்கட்சிகளே இல்லாத ருஷியாவில், கம்யூனிஸக் கட்சிக்குள் ஓரளவு சுதந்திர வாதம் நடப்பதையே ஜனநாயகம் என்று மாயமாகக் காட்டி வருகிறார்கள். அதோடு ஒப்பிட்டால் இந்தியா ஜனநாயகத்தைப் பின்பற்றுகிறது என்று நம் பிரதமர் பெருமை பேசிக் கொண்டதில் வியப்பில்லை. எனினும், சுதந்திர உலகத்தின் கருத்துப்படி அமைந்த உண்மையான ஜனநாயகம் — ஆள்கிற கட்சியும், எதிர்க் கட்சிகளும் சம நிலையில் பணி புரியும் ஜனநாயகம் — நம் நாட்டில் நிச்சயமாக நிலவவில்லை. ஏககட்சி ஆட்சிதான் இங்கு நடைமுறையாகி விட்டது. சர்வாதிகார மனப்பான்மை நன்கு வேரூன்றி விட்டது.

ஃ ஃ ஃ

பிரதமர் இந்திரா காந்தியவர்கள் ருஷியாவில் கூறியுள்ள சித்தாந்தங்கள் எவ்வாறாயினும் இவற்றைப் பதினைந்தாண்டுகளுக்கு மேலாகத் தடையின்றிக் காரியாம்சத்தில் அமுலாக்கியதால் என்ன நடந்திருக்கிறது என்று பார்ப்போம்.

மூன்றும் திட்ட காலத்தில் வரிகளும் கடனும் போக 500 கோடி ரூபாய்க்குப் பற்றாக்குறை பட்ஜெட் போட வேண்டியிருக்குமென எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் உண்மையில் இது ஏறக்குறைய இரு மடங்காயிற்று. அதாவது தேசத்தில் பண வீக்கம் 60 சதவிகிதம் அதிகமாயிற்று. ஆனால் உற்பத்தியோ 18 சதம்தான் உயர்ந்தது. இது காரணமாக விலைவாசிகள் ஏறுமுகமாகவே இருந்துள்ளன.

விவசாயத் துறையில் முழு முயற்சியும் செலுத்தி உற்பத்தியை முன்னேற்றுவிடில் உள்நாட்டிலும் விலைகளைக் கட்டுப்படுத்த முடியாது; வெளிநாட்டுச் செலாவணியையும் சமன் செய்ய முடியாது; தேசிய

வருமானம் ஏழை மக்களுக்கு அதிகமாக விநியோகமாகும்படி செய்வதும் விவசாயத்தில் பெரு முயற்சி இல்லாவிடில் அசாத்தியமாகும்.

சென்ற பத்தாண்டுகளில் பிரிட்டனில் விலைவாசிகள் 27 சதமும், அமெரிக்காவிலும், மேற்கு ஜெர்மனியிலும் 10 சதமும் பாகிஸ்தானில் 18 சதமும், பர்மாவில் மூன்றரை சதமும், ஐக்கிய அரபுக் குடியரசில் 35 சதவிகிதமும் உயர்ந்திருக்க, இந்தியாவிலோ 77 சதம் உயர்ந்திருக்கின்றன.

இந்த உண்மைகளை நாம் எடுத்துக்காட்டுவது மட்டுமல்ல. இவற்றைக் காங்கிரஸின் மேலிடத்தாருக்கும், முதன் மந்திரிகளுக்கும் ஆலோசகர்கள் எடுத்துக் காட்டியிருப்பதாக ஜூலை 17ந் தேதி பி. டி. ஐ. அறிக்கை கூறுகிறது.

ஃ ஃ ஃ

இன்றைய சர்க்காரின் கொள்கைகள்— இந்திரா அம்மையார் பெருமிதத்துடன் எடுத்தோதிய கொள்கைகள் – படுதோல்வி அடைந்திருப்பதற்கு இதைவிட வேறு சான்று தேவை இல்லை. எனினும் காங்கிரஸ் அக்கிராசனர் திரு காமராஜ் அவர்களோ, ''நாங்களே நிச்சயமாகத் தேர்தலில் வெற்றி பெறுவோம்; எல்லா எதிர்க்கட்சிகளும் ஒன்று சேர்ந்தாலும் அவற்றைத் தோல்வியுறச் செய்வோம்'' என்று பறைசாற்றி வருகிறார். இதைச் சாகஸமான தன்னம்பிக்கை என்றுதான் சொல்ல வேண்டும். ஒருவர் தம்மைப் பற்றி உயர்வாக நினைத்து அப்படிப் பேசி வருவதாலேயே உயர்வு பெறலாம் என்று டாக்டர் கூ (Coue) என்பவர் ஒரு தத்துவத்தைக் கண்டுபிடித்தார். அந்தத் தத்துவத்திலே திரு காமராஜ் பூரணமாக அடைக்கலமாகி யிருக்கிறாரோ என்று தோன்றுகிறது. சர்க்காரின் பலத்த தோல்விக்குப் பின்னும் ஆளும் கட்சியின் வெற்றியில் அவர் இவ்வளவு நம்பிக்கை வைப்பது நமக்கு வேடிக்கையாக இருக்கிறது. காங்கிரஸின் கொள்கைத் தோல்விகளைச் சுட்டிக்காட்டும்போது அவர் அதற்குத் தக்க பதில் எதுவும் சொல்ல முடிவதில்லை. எனினும், 'நாங்களே வெல்வோம்' என்று மட்டும் விடாமல் கூறிவருகிறார். இதன் பொருள் என்ன? 'பணபலமும் அதிகார பலமும் எங்களிடமே இருப்பதால், அவற்றைத் துஷ்பிரயோகித்து நிச்சயமாக வெற்றி காண்போம்' என்கிறாரா? வெற்றி பெறுவதற்குக் கட்சிக்குத் தார்மிக உரிமை இல்லை; என்றாலும் பலம் இருக்கிறது என்பதே காமராஜரின் வெற்றித் தம்பட்டத்துக்கு அர்த்தம்.

ஆயினும் கடந்த பன்னிரண்டு ஆண்டுகளாக அகில உலகமும் உதவி புரிந்தபோதிலும், வரிகளின் மூலம் சர்க்கார் கஜானா நிரம்பி வழிந்த போதிலும், மக்களுக்கு வேண்டிய பொருள்களை நியாயமான விலைக்குக் கிடைக்கச் செய்யாத சர்க்காரை இனியும் மக்கள் சகிப்பார்களா என்பதே கேள்வி.

மக்களை வசியப் படுத்துவதற்காகவே, 'நாங்கள்தான் ஏழைகளின் இரட்சகர்கள்' என்ற கோஷத்தைக் காங்கிரஸார் எழுப்பி வருகின்றனர். ஏழைகளின் நிலையை உயர்த்த வேண்டும் என்பதை ஆதாரக் கொள்கையாகக் கொள்ளாத கட்சி எதுவுமே கிடையாது. ஆனால் அதை எப்படிச் செய்வது என்பதே பிரச்னை. காங்கிரஸ் அதிவிரைவில் ஏழைகளின் வாழ்நிலையை உயர்த்த, குறிப்பிட்ட ஒரு கொள்கை உதவுமென்று நம்பி அதைப் பின்பற்றுகிறது. எல்லாவற்றையும் சர்க்காரின் ஆதீனமாக்குவதே இக்கொள்கை. இக்கொள்கையின் தோல்வி விலைவாசி உயர்வாலும், வேலையின்மைப் பிரச்னையாலும் நாளுக்கு நாள் அழுத்தமாக நிரூபணமாகி வருகிறது. இதற்கு மாறாக, தனியாரிடம் தொழில்கள் இருந்தாலே செல்வம் விருத்தியாகும், உற்பத்தி பெருகி விலைகள் குறையும், மக்களுக்கு வேலை வாய்ப்பும் உயரும் என்று சுதந்திரக் கட்சி கூறுகிறது. சர்க்காரின் இடையறாத தலையீட்டாலும், அமித வரிகளாலும் தொழில்கள் நசித்து, மக்களின் வேலை வாய்ப்புக்களும் குறைகின்றன என்று அது எடுத்துக் காட்டுகிறது. விவசாயத் துறையிலும் இதே போல் தனி மனிதரின் ஊக்கத்துக்கு முழு இடமளித்தால்தான் விளைச்சல் பெருகி, பஞ்ச நிலை நீங்கும் என்று சுதந்திரக் கட்சி கூறுகிறது. இத்தனை ஆண்டுகள் காங்கிரஸ் கொள்கைகளுக்கு இடமளித்து, தோல்வியைக் கண்டுவிட்டதால், இனியேனும் மாற்றுக் கொள்கைக்கு ஒரு வாய்ப்புத் தரத்தான் வேண்டும். இதுவே வாக்காளர் முன்புள்ள முக்கியமான விஷயம். காங்கிரஸ் ஒன்றுதான் ஏழைகள் நலனை ஏகபோக்கியம் செய்து கொண்டிருக்கிறது என்ற கட்டுக் கதையை மக்கள் நம்பி மோசம் போகலாகாது.

ஃ ஃ ஃ

'பணபலமும், அதிகார பலமும் காங்கிரஸுக்கு உள்ளனவே! இவற்றின் துஷ்பிரயோகத்தைக் கருதித்தானே திரு காமராஜ், தாங்களே வெற்றிப்பெறப் போவதாக அடித்துக் கூறுகிறார்!' என்று வினவலாம். மக்களின் விவேகத்தை நம்புவோமாயின் இதற்காக நாம் அஞ்ச வேண்டியதில்லை. செப்படி வித்தைக்காரனின் தந்திரங்களை மக்கள் ரசித்துப் பார்ப்பதுண்டு. ஆனால் அது ஒரு வேடிக்கை என்ற அளவில் பொழுது போக்காகத்தான் பார்ப்பார்கள். வித்தைக்காரன் தனக்கு மகத்தான மந்திர சக்தி இருக்கிறதென்று கூறினால் யாரும் நம்பிவிட மாட்டார்கள். திரு காமராஜின் பேச்சுக்களையும் ஒரு வேடிக்கையாகச் சகித்துக் கொள்ளலாமேயன்றி, அவற்றில் சத்தியத்தின் சக்தி இருப்பதாக நம்புவதற்கில்லை. அப்படி நம் மக்கள் நம்பிவிட மாட்டார்கள் என்றே கருதுகிறோம். காங்கிரஸ் அக்கிராசனர் செப்படி வித்தை செய்யும் போதே, மதிப்புக் குறைந்த ரூபாயும் விலைவாசி உயர்வும் எதிரே நின்று பேய்ச் சிரிப்புச் சிரிக்கும். வித்தையைக் காணும் மக்கள் இந்தச் சிரிப்பையும் கேட்பார்கள்.

# அன்பார்ந்த நேயர்களுக்கு



கல்கி பத்திரிகையின் வெள்ளிவிழா நெருங்கி விட்டது. வாசக அன்பர்களிடமிருந்தும், அறிஞர் பெருமக்களிடமிருந்தும் நல்வாழ்த்துக்கள் தினம் வந்தவண்ணமிருக்கின்றன. அனைவருக்கும் பத்திரிகையின் ஸ்தாபகரான அமரர் 'கல்கி' அவர்களை நினைவில் கொண்டு உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

கடந்த இருபத்தைந்தாண்டுகளைத் திரும்பிப் பார்த்து அதில் கல்கி சாதித்திருப்பவை என்னென்ன என்று கணக்குப் போட்டுப் பெருமிதமுற நாம் நினைக்கவில்லை. இன்னும் தமிழ் இலக்கியத்திலும் தமிழ் வளர்ச்சியிலும் சாதிக்கப்பட வேண்டியவை நிரம்ப உள்ளன என்பதை மறவாமல், விநயத்துடன் இப்பணியில் தொடர்ந்து ஈடுபடவே விரும்புகிறோம். எனினும் தயக்கமின்றியும் நியாயமாகவும் நாம் பெருமிதமடையக்கூடிய ஓர் அம்சமும் உண்டு எனக் கருதுகிறோம். அது, 'கல்கி' என்ற மூன்றெழுத்துக்களை எப்படி ஒரு புனிதச் சொல்லாகப் போற்றி வந்தோமோ அதே போன்ற ஆர்வத்துடன் வேறு ஒரு மூன்றெழுத்துச் சொல்லையும் போற்றி வந்திருக்கிறோம் என்பதுதான். அம்மூன்றெழுத்துச் சொல் — தரம்.

கல்கியின் வெள்ளிவிழாவை முன்னிட்டுத் தயாராகி வரும் கல்கி வெள்ளிவிழா மலரிலும் தரத்துக்கே முதலிடம் அளித்திருக்கிறோம். தரமான இலக்கிய சிருஷ்டிகள் மலரை அலங்கரிக்கின்றன. தரமான கட்டுரைகள் மலரின் மதிப்பைப் பெருக்குகின்றன. தரமான வண்ண ஓவியங்கள் மலரைப் புரட்டுந்தோறும் மனத்தை மகிழ்விக்கின்றன.

ஆசாரிய சுவாமிகள், தலைவர் ராஜாஜி ஆகியோர் இந்த வெள்ளி விழா வைபவத்தை முன்னிட்டு வழங்கியுள்ள நல்லாசிகளைக் கல்கி புகும் இல்லங்களிலெல்லாம் இடர்கள் நீங்கி இன்பம் பொங்க அவர்கள் அருளிய ஆசிகளாகவே கருதுகிறோம்.

மலரில் இடம் பெற்றுள்ள கட்டுரைகள் பல்வேறு துறைகளையும் அணைத்துச் செல்கிற வகையில் அந்த அந்தத் துறையில் அறிஞர்களாய் விளங்கும் பலரால் எழுதப் பெற்றவை என்பது இம்மலரின் ஒரு தனிச் சிறப்பு.

சிறுகதைச் சிற்பிகளில் தலைசிறந்த பலர் இம்மலரில் தங்கள் சிருஷ்டிகளை வழங்குகிறார்கள்.

மூவண்ண, இருவண்ண ஓவியங்கள், ஹாஸ்யச் சித்திரங்கள் போன்ற அம்சங்கள் ஏராளம் இம்மலரிலே.

ஆகஸ்டு நான்காம் தேதியன்று நேயர்களின் கரங்களை அலங்கரிக்கப் போகின்ற இம்மலரின் அட்டைப்படம் ஓவியர் மணியத்தின் அற்புதமான கைவண்ணத்தால் சிறக்கிறது. கல்கி வெள்ளிவிழா மலரின் அட்டைப் படத்தில் சிருஷ்டிக் கடவுளாகிய பிரும்மா, கலாதேவியான சரஸ்வதி, கல்கியின் இஷ்ட தெய்வமான விநாயகர் ஆகிய மூவரும் அருள் பாலிப்பது பலவிதங்களிலும் பொருத்தமுடையது அல்லவா?

ஆசிரியர்

# சங்கீதத் திருப்பணி

சென்னை புரசைவாக்கத்தில் ஸ்ரீ ஸத்குரு சங்கீத சமாஜம் என்ற பெயரில் பேராசிரியர் சாம்பமூர்த்தி அவர்களின் தலைமையில் அன்பர்கள் ஸ்ரீ தியாகராஜ சுவாமிகளுக்குப் பல ஆண்டுகளாகத் தொண்டு புரிந்து வருகிறார்கள். பஜனைகளும் பிரசங்கங்களும் நடத்தித் தியாகராஜரின் கிருதிகளைப் பரப்பி வருகிறது சமாஜம். அவரது மறைவு நாளான பகுள பஞ்சமியன்று பிரதிமாதமும் ஆராதனை விழா நடக்கிறது. வருடாந்தர ஆராதனை நாளன்று சமாஜத்தின் ஆதரவில் இருபத்தி நான்கு மணி நேரமும் பல வித்துவான்கள் இடைவிடாமல், தியாகைய சுவாமிகளின் பாடல்களை, ஒருவர் பாடின பாடல்களை இன்னொருவர் பாடாமல் ஆலாபனமும் ஸ்வர வித்தியாசமுமின்றிப் பாடி வருவது குறிப்பிடத்தக்கது.

இவை யாவற்றுக்கும் சிகரம் போல் ஒரு பெரும் பணியை இப்போது சமாஜம் ஏற்றுக்கொண்டிருக்கிறது. ஸ்ரீ டி. எஸ். பார்த்தசாரதி அவர்களும், வித்துவான் ஸ்ரீ எஸ். ராமநாதன் அவர்களும் தியாகையரின் பாடல்களைப் பழுதறச் சேகரித்து, சோதித்து எளிய நடையில் அவற்றுக்குத் தமிழில் பொழிப்புரையும் எழுதிப் பிரசாரம் செய்து வரும் கைங்கரியம் சமாஜத்தைக் கவர்ந்தது.

செயல் துடிப்புள்ள நூலாசிரியர் இருவரும் இதுவரை சுமார் இருநூற்றைம்பது பாடல்களுக்குப் பொழிப்புரை எழுதியுள்ளனர். மேலும் ஐந்நூறு பாடல்களுக்கும் பொழிப்புரை வெகுசீக்கிரம் எழுதப்பட்டு சங்கீத சத்குருவின் அருளால் நூலும் விரைவில் வெளிவரும்.

இத்திட்டத்தை நல்ல முறையில் நிறைவேற்றுவதற்காகச் சங்கீத கலாநிதி முசிரி சுப்பிரமணிய அய்யர் அவர்கள் தலைமையில் ஒரு கமிட்டி அமைக்கப்பட்டுள்ளது. சங்கீத கலாநிதி செம்மங்குடி ஸ்ரீ ஸ்ரீநிவாசஅய்யர், ஸ்ரீ எஸ். பார்த்தசாரதி, ஸ்ரீ டி. எஸ். பார்த்தசாரதி, ஸ்ரீ ஆர். பார்த்தசாரதி, ஸ்ரீ எஸ். ராமநாதன் ஆகியோரும் கமிட்டியில் அங்கம் வகிக்கின்றனர். இத் திருப்பணி இனிது நிறைவேற 'ஏழிசையாயும் இசைப் பயனுயும்' உள்ள இறைவன் அருள்வானாக.

★

சர்க்காரில் எந்தப் பதவியும் வகிக்காத கட்சித் தலைவராகிய திரு காமராஜ் ருஷ்ய அரசாங்கத்தின் அழைப்பைப் பெற்று அந் நாட்டுக்குச் சென்றிருக்கிறார். தமிழக சர்க்காரில் மந்திரியாக உள்ள ஒருவரைத் தமக்குத் துணைவராக அழைத்துச் சென்றிருக்கிறார். இவை முறையா என்ற கேள்வி எழுகிறது.

ஒரு நாட்டிலுள்ள அரசியல் கட்சி இன்னொரு நாட்டிலுள்ள அரசியல் கட்சித் தலைவரை வரவேற்பதும், ஒரு நாட்டின் சர்க்கார் இன்னொரு நாட்டு சர்க்கார் தலைவரை வரவேற்பதுமே வழக்கம். ஒரு சர்க்கார் இன்னொரு நாட்டுக் கட்சித் தலைவரை அழைப்பது புதுமை. ருஷியாவில் சர்க்காருக்கு மேம்பட்டதாகக் கட்சியிருக்கலாம்; ஆயினும் இதை நம் சர்க்கார் நம் நாட்டு விஷயத்தில் ஒப்புக் கொள்வது முறையல்ல. இங்கு ஆளும் கட்சியையே அரசாங்கமாகக் குழப்பிக் கொள்வதைச் சாஸனம் அநுமதிக்கவில்லை.

பிரயாணச் செலவு போன்ற சிறிய விஷயம் குறித்து நான் பேசவில்லை. ஆளும் கட்சியைச் சர்க்காராகவே நினைக்கும் யதேச்சாதிகாரப் போக்குக்கு இடமளிப்பதும், இன்னொரு நாட்டுச் சர்க்கார் இவ்விஷயத்தில் செய்துள்ள குழப்பத்தை நாம் ஒப்புக் கொள்வதும் சரியா என்பதே என் கேள்வி. ஒரே கட்சியை ஆட்சிபீடத்தில் நிரந்தரமாக இருத்தி வைக்காத நம் சாஸனப்படி இது சட்ட விரோதமாகும். கட்சிக்கும் சர்க்காருக்குமுள்ள வித்தியாசத்தைப் பற்றி ருஷியாவுக்குக் கவலையில்லை. கட்சியையும் அரசாங்கத்தையும் ஒன்றுக்கும் தனது முறையை மற்ற தேசங்கள் அநுசரிக்க வேண்டும் என்றே அது விரும்பவும் கூடும். எனவே, அது அழைப்பு விடுப்பதைக் குறைகூறுவதற்கில்லை. நாம்தான் சாஸனத்தைக் காப்பதில் ஈடுபாடு காட்ட வேண்டும்.



இவ்விஷயத்தைப் பொது வாழ்வில் ஈடுபட்டவரோ, பத்திரிகை உலகமோ கவனிக்கவே இல்லை என்று தோன்றுகிறது.

★

வியட்நாம் விஷயமாக அமெரிக்காவுக்கு நமது சர்க்கார் புத்திமதி கூறியிருப்பதைப் பற்றித் 'தினமணி' பத்திரிகை விரிவாக ஒரு தலையங்கம் எழுதியிருக்கிறது. தமிழ்ப் பொது மக்களிடையே நல்ல செலாவணி பெற்றுள்ள இப்பத்திரிகை என்ன கூறுகிறதென்று பார்ப்போம். இன்று நமது தேசமுள்ள நிலையில் உள்நாட்டு விவகாரங்களை அபிவிருத்தி செய்வதிலேயே சர்க்கார் முனைப்புக் காட்ட வேண்டுமே அல்லாது, உலகத்தின் அரசாங்கங்களுக்கெல்லாம் 'என்ன செய்ய வேண்டும், என்ன செய்யக் கூடாது?' என்று புத்தி சொல்வதைக் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும் — என்று தினமணி அழுத்தமாகக் கூறியுள்ளது. என்றுமே நம்மிடம் அதிகார சக்தி அதிகம் இருந்ததில்லை; எனினும், மகாத்மா காந்தியாலும், ஓரளவுக்கு நேருஜியாலும் நமக்கு உலகத்தில் ஒரு தார்மிக சக்தி இருந்து வந்தது; ஆனால் அதையெல்லாம் இப்போது இழந்து விட்டபடியால் தாழ்மையுடன் வாயை அடக்கிக் கொண்டிருப்பதே நமது கொள்கையாக இருக்க வேண்டும்; மற்றவர்களுக்கு உபதேசிக்குமுன் நம் சொந்த விவகாரங்களை ஒழுங்கு செய்து கொள்ள வேண்டும் — என்ற இந்த உண்மைகளையும் 'தினமணி' எடுத்துக் கூறுகிறது.

★

சமீபத்தில் நடைபெற்ற வார்ஸா உடன்படிக்கை மகாநாட்டிலிருந்து, ருஷியாவுக்கு மற்ற 'உபகிரக' கம்யூனிஸ நாடுகளின் மீதிருந்த ஆதிக்கம் மிகவும் குறைந்துவிட்டதாகவும், கம்யூனிஸ உலகில் குழப்பம் ஏற்பட்டிருப்பதாகவும் தெரிகிறது. மொத்தத்தில் ருஷியாவின் அந்தஸ்து விழுந்து விட்டதாகப் பார்வையாளர்கள் கூறுகிறார்கள்.

★

யுகோஸ்லாவியாவில் மார்ஷல் டிடோ அவர்கள் தமது நீண்ட கால உதவியாளர் ரன்கோவிக்கைப் பதவியிலிருந்து நீக்கி இருக்கிறார். ஸ்டாலினைப் போலவே டிடோ தனித் தலைமை பெற இவ்வாறு செய்திருப்பதாகத் தோன்றக் கூடும். எனினும் ஆழ்ந்த அரசியல் ஞானமுள்ளவர்களோ ருஷியாவின் மேலாதிக்கத்தைத் தடுக்கவும், யுகோஸ்லாவியாவின் பொருளாதார வளர்ச்சியைக் காக்கவுமே டிடோ இவ்வாறு செய்ததாகக் கருதுகிறார்கள். டிடோவை உலகத்தில் மிகவும் குறிப்பிட வேண்டிய ராஜநீதி வல்லுநர் எனக் கூறலாம். ஸ்டாலினையே எதிர்த்தவர் அவர். யுகோஸ்லாவியாவில் கம்யூனிஸத்தை உடும்புப்பிடியாகக் கொள்ளாமல், 'தளர்த்தி' ஆட்சி புரிபவர். லாப நோக்கத்துக்கு இடம் தந்து பொருளாதாரத்தைச் சீர்ப்படுத்தி வருபவர். யுகோஸ்லாவியாவில் தனி மனித சுதந்திரங்கள் உண்மையாகவே மதிக்கப்படுவதையும் இங்கு குறிப்பிட வேண்டும்.

★

''இனி வரி விதிக்க இடமில்லை'', ''பெருமளவில் ஆட் குறைப்புச் செய்யலாகாது'', ''செலவுகளைக் குறைக்குமாறு மத்திய, ராஜ்ய சர்க்கார்களுக்குப் பிரதமர் கோரிக்கை'' — என்றெல்லாம் கடந்த சில நாட்களாகப் பத்திரிகைத் தலைப்புக்கள் காண்கின்றன. சர்க்கார் செலவைக் குறைப்ப

தற்காகச் சர்க்கார் நிறுவனங்களில் ஆட்குறைப்பு ஓரளவு அவசியமாகி விட்டதாக நாம் தெரிந்து கொள்கிறோம்.

வேலை நீக்கம் பெற்றவர்கள் அதன்பின் என்ன செய்வார்கள்? தனியார் தொழிலகங்களில் வேலைக்கு அமருவதே இயற்கையில் எதிர்பார்க்கக் கூடியது. அவ்வாறு இவர்களுக்கு இடமளிக்கும் வகையில் லாபகரமாக நாட்டில் தொழில்கள் நடந்தாலே பிரச்னையைத் தீர்க்க முடியும். வரி குறைந்தால்தான் தனியார் தொழிலில் இத்தகைய வாய்ப்பு ஏற்படும். ஆனால் சோஷலிஸமும் வரிக் குறைப்பும் ஒன்றுக்கொன்று முரணானவை. ஆகவே, சர்க்காரின் சோஷலிஸத் திட்டத்தையே விட்டு, மக்களின் உத்தியோக வாய்ப்புப் பெறுவதற்கு அநுகூலமான புதிய திட்டத்தை வகுக்க வேண்டும். அதாவது சர்க்காரின் தொழிற் கொள்கையே மாற வேண்டும்!. அதுவும் விரைவில் மாறினாலே, ஆட்குறைப்பினால் ஏற்படும் அவதியைத் தவிர்க்க முடியும்.

★

இந்தியாவின் 48 கோடி மக்களுடைய அபிப்பிராயத்துக்கு உலகில் ஒரு பலம் உண்டு. அமெரிக்காவும், ருஷியாவும் இந்திய மக்களின் ஆதரவைப் பெறப் பலவிதத்தில் பிரசாரங்கள் செய்து வந்த போதிலும், இப்போது அமெரிக்கா ருஷியாவுக்கு மிகவும் பின்தங்கி விட்டது என்று அஞ்சுகிறேன். கவர்ச்சிகரமாக அச்சிட்ட பிரசாரப் புத்தகங்களை ருஷியா வெள்ளமாக இந்தியாவின் எல்லா மொழிகளிலும் வெளியிட்டு வருகின்றது. கம்யூனிஸ்டுகளே சமாதானத்துக்கும் நாகரிகத்துக்கும் தனிப் பிரதிநிதிகள் என்று எண்ணச் செய்வதே இவற்றின் நோக்கம். அமெரிக்கர் சார்பில் பேசுபவர் இந்தியாவில் எவரும் இல்லை எனலாம். காங்கிரஸின் ஆட்சியை அமெரிக்க தூதர்கள் பாராட்டிப் பேசுவதால் மட்டும் பெரிதாக எதுவும் அடைந்துவிட முடியாது. அமெரிக்காவிடமிருந்து கோடிக்கணக்கான டாலர் கடன் பெறுகிறோம் என்பது உண்மை. எனினும், அமெரிக்கா வியட்நாமில் மிருகத்தனமாகப் போரிடுவதாக எழுப்பப்படும் பிரசாரத்துக்குத் தடையில்லை. அமெரிக்கா விழித்துக் கொள்ள வேண்டும்.

★

முதன்மந்திரிகள் பாதுகாப்புச் சட்டத்தையே பந்தோபஸ்துச் சட்டம் (Security Act) என்ற பெயரில் கொண்டு வர ஆசைப்படுகிறார்கள். அவர்கள் யாவரும் காங்கிரஸ் கட்சியின் ஏஜெண்டுகளே. அரசியல் சாஸனத்தின் கீழ் பெற்ற அதிகாரங்களுடன் அவர்கள் கட்சி ஏஜெண்டுகளாகக் காரியம் செய்கிறார்கள். சாஸனத்தை நிறைவேற்றுவதற்கு ஆள்கிற கட்சி ஒரு கருவியாக இருப்பதற்குப் பதில், சாஸனமும் சர்க்காரும் நிர்வாகமும் ஆள்கிற கட்சியின் நலனுக்குதவும் கருவிகளாக அநீதமான முறையில் பயனாகின்றன. யுத்தம் ஏதும் இல்லாதபோது, மக்களிடமிருந்து பந்தோபஸ்து பெறுவதற்காகச் சட்ட மூலம் தனி அதிகாரம் கோருவது சர்க்காருடைய தோல்வியைப் பகிரங்கப்படுத்துவதே யாகும். குருட்டுத்தனமான பதவிப் பற்று கொண்டவர்களால் இதைக் காண முடியவில்லை. மக்கள் அதிருப்தி கொண்டு கிளர்ச்சி செய்யக் கூடும் என்ற நிலையைச் சர்க்கார் எதிர்பார்ப்பதால்தானே பந்தோபஸ்துக் கேட்கிறார்கள்? இதிலிருந்து, ஜனநாயக முறையில் காங்கிரஸ் கட்சி ஆட்சி புரியாது; அப்படி ஆட்சி நடத்த அதனால் முடியாது என்று தெளிவாகிறது. காங்கிரஸ் ஆட்சி தனது போக்கினால் மக்களிடையே வருத்தத்தையும், ஆசாபங்கத்தையும் ஏற்படுத்தி வருகிறது. இவர்களை ஆட்சிபீடத்திலிருந்து மக்கள் விவகாரங்களைத் தொடர்ந்து நிர்வகிப்பதால் ஏற்படக்கூடிய கொந்தளிப்பை ஜனநாயகத்தால் தாங்க முடியாது.

# அடுத்த இதழ்

**கல்கி** வெள்ளி விழாவை யொட்டி வெளியாகும் அடுத்த வாரக் கல்கி, வழக்கமான விலைக்கே அதிக பக்கங்களுடன் விசேஷ இதழாக மலருகிறது. இந்த விசேஷ இதழில் நமது வெள்ளிவிழா நாவல் போட்டியில் ரூ. 10,000 முதல் பரிசு பெற்ற ஸ்ரீ உமா சந்திரனின் 'முள்ளும் மலரும்' என்ற நாவல் தொடங்குகிறது. வெள்ளிவிழாச் சிறுகதைப் போட்டியில் ரூ. 1000 முதல் பரிசு பெறும் 'லலிதா' என்ற சிறுகதையும் இந்த விசேஷ இதழிலேயே இடம் பெறும்.

''ஹர ஹர சங்கர'' என்ற தலைப்பில் ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகளின் திவ்ய சரித்திரத்தை இதே இதழிலிருந்து ஸ்ரீ ரா. கணபதி தொடர்ந்து எழுதி வரப்போகிறார். அவர் இதற்குமுன் கல்கியில் எழுதிய ''ஜய ஜய சங்கர'', ''அறிவுக்கனலே, அருட்புனலே'' ஆகிய வரலாற்றுத் தொடர்களைப் படித்து மனமகிழ்ச்சியும் உள்ளத் தூய்மையும் பெற்ற பலப் பலர் 'ஹர ஹர சங்கர' என்ற தொடரையும் ஆத்மார்த்தமான ஆவலுடன் எதிர்பார்ப்பார்கள்.

இதே விசேஷ இதழில் ஜெகசிற்பியன் எழுதிய 'அவன் வருவான்' என்ற குறுநாவலும் சிறப்புக் கதையாக விளங்குகிறது.

வேறு பல புதிய அம்சங்களும் அடுத்த இதழில் இடம் பெறுகின்றன.

படித்து ஆனந்திக்க நேயர்களை அழைக்கிறோம்.

# உலகப் புகழ்பெற்ற நாட்டிங்ஹாம் லேஸ் உங்கள் உடை அலமாரிக்கு என்றுமில்லாப் புத்தெழிலைத் தருகிறது!



## லீலா லேஸ்:

காண அழகான... அணிந்தால் பிரமிப்பூட்டும்... லீலா லேஸ் (பூத்தையல் இழை) - அசல் நாட்டிங்ஹாம் லேஸ் தற்போது பாரதத்திலேயே தயாரிக்கப் படுகிறது. பரபரப்பூட்டும் பலவித டிஸைன்கள், கவர்ச்சிகர வர்ண வகைகளில் தேர்ந்தெடுங்கள்-ஆடையணிகள், ஸ்கர்ட்டுகள் அல்லது எப்பொழுதாவது அணியும் ஆடைகளுக்கு. சோளிகள், ரவிக்கைகள் மற்றும் ஸல்வார் கமீஸ் ஆகியவற்றுடன்கூடிய உடை அலமாரியைக் கனவிலும் நினைக்க முடியாத குறைந்த விலையில் லேஸ் மயமாக்குங்கள். சிறந்த கடைகளில் விரைவில் லீலா லேஸைக் காணுங்கள்-எல்லாவற்றிற்குமே லீலா லேஸ் எனவிரும்பத் தொடங்குவீர்கள்!









ஆடைகளைத் தைத்தது: வேனிடி.

பிரமிப்பூட்டும் பொலிவு.

## லீலா லேஸ்:

லீலா ஸ்காட்டிஷ் லேஸ் ப்ரைவேட் லிமிடெட்,
அந்தேரி - குர்லா ரோட், பம்பாய்-59- AS

ஏஜெண்டுகள் : மாயா டெக்ஸ்டைல் ஹால், 69, சட்டன் பஜார், சென்னை-3.
தி க்ரீன் ஷாப், கமர்ஷியல் ஸ்ட்ரீட், பெங்களூர்.

ரா. கணபதி

எழுதும்

# ஹர ஹர சங்கர

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி
காமகோடி சங்கராசாரிய
ஸ்வாமிகளின்
திவ்விய சரிதம்

**ஆகஸ்ட் 7ந்தேதி**
**இதழில் ஆரம்பமாகிறது**



இதே விசேஷ இதழில்

**ரூ 1,000**
முதல் பரிசுச் சிறுகதை
மற்றும் பல புதிய அம்சங்கள்.

**கல்கி**
வெள்ளி விழா
பரிசுத் திட்டம்
**ரூ 10,000**
முதல் பரிசு நாவல்

இரண்டாவது, மூன்றாவது பரிசு பெற்ற
சிறுகதைகள் ஆகஸ்டு 14ந் இதழிலிருந்து
தொடர்ந்து வெளிவரும்.




# 12. ‘இல்லை’ என்னாத இயற்பகை

கடினமான விரதம் மேற்கொண்டு புலன்களை வென்றவர் திருநீலகண்டர். வீட்டிலேயே மனைவியை வைத்துக் கொண்டு ஆசையைத் துறந்தவர் அவர்; அதுவும் பிறர் அறியாமல் வாழ்ந்தார். இயற்பகை நாயனாரோ தமது மனைவியையே அடியாருக்குக் கொடுத்து விட்டார். பொன்னைக் கொடுப்பார்கள்; மண்ணைக் கொடுப்பார்கள்; பொருளைக் கொடுப்பார்கள். ஆனால் தாலி கட்டிய மனைவியை யாரும் கொடுக்க மாட்டார்கள். இயற்பகை நாயனாரோ மனைவியையே கொடுத்து விட்டார்.

இயற்பகை நாயனாரது கதை சற்றுச் சிரமமான கதை; உலகுக்குச் சிறிது மாறுபட்ட கதை; அநுபவத்துக்கு ஒத்து வராத கதை; இப்பொழுது இந்த உலகுக்குத் தேவையில்லாத கதை என்றுகூடத் தோன்றும். இக்கதையை அறிபவர்கள் இயற்பகை நாயனாரின் அன்பை மட்டும் எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதே தாத்பரியம். மயில் மாதிரி என்றால், மயிலின் அழகைத் தான் குறிக்குமேயன்றி, மயில் பறப்பதைக் குறிக்காது. கண்ணப்ப நாயனார் அன்பின் முதிர்ச்சி காரணமாகச் செருப்பணிந்த காலைச் சிவபெருமான் முடியில் வைக்கிறார். கொப்புளித்த நீரைத் துப்புகிறார். அவர் செய்தது போன்று நாமும் செய்யலாமா? அவர் கொண்டிருந்த அன்பைத்தானே நாம் எடுத்துக் கொள்ள வேண்டும்?

கங்கையின் மிக்க காவிரியினால் வளம் பெறுவது சோழ நாடு. காவிரி தனது இரு கரைகளிலும் பல சிவாலயங்களை உடையது. ''ஏழ்தலம் புகழ் காவேரி'' என்பது அருணகிரி நாதர் வாக்கு. பரம்பொருள் பல்வேறு வடிவம் தாங்கிப் பல்வேறு சமயங்களுக்கும் அருள் புரிவது போல், காவிரியும் பல்வேறு கால்களாகப் பிரிந்து பல்வளம் பெருக நிலவளம் செய்யும் தண்ணளியுடையது. இத் தெய்வமா நதி கடலோடு கலத்தலால் காவேரி சங்கமம் எனப் பெயர் பெற்ற விசேட தீர்த்தம் பொருந்தியது காவிரிப்பூம்பட்டினம். இதுவே சோழ நாட்டின் தலைநகரம்.

காவிரிப்பூம் பட்டினம் பட்டினப் பாலை என்று பாடல் பெற்ற நகரம். கண்ணகி, ஆதிரை போன்றவர்கள் வாழ்ந்த பெருநகரம். பூம்புகார் என்று அதற்குப் பேர் உண்டு. அந்நகரில் உள்ளவர்கள் தமக்கு வேண்டும் பொருள்களை நாடி, வேறு இடங்களுக்குப் புகார் என்று சொல்லலாம். சாயாவனம் என்னும் சிவாலயத்தைத் தன்னகத்தே கொண்ட திருப்பதி. அத் திருநகரத்திலே வணிகர் குலத்திலே அவதரித்தவர் இயற்பகையார்.

திருமுருக கிருபானந்த வாரியார்

அக்கு லப்பதிக் குடிமுதல் வணிகர்;
அளவில் செல்வத்து வளமையின் அமைந்தார்;
செக்கர் வெண்பிறைச் சடையவர் அடிமைத்
திறத்தின் மிக்கவர்; மறைச் சிலம் படியார்;
மிக்க சீரடி யார்கள்யா ரெனினும்
வேண்டும் யாவையும் இல்லையென் னாதே
இக்க டற்படி நிகழமுன் கொடுக்கும்
இயல்பின் நின்றவர்; உலகியற் பகையார்

இயற்பகையார் என்பதற்கு இரண்டு பொருள்கள். உலக இயலுக்குப் பகையானவர் என்பது ஒன்று; தனக்கு உரிமையில்லாத பொருள்களை யெல்லாம் ''என்னுடையது; என்னுடையது'' என்பது உலக இயல். அந்த உலக இயலுக்குப் பகையானவர். எனவே அருளியலுக்குப் பகையாகாதவர்.

இயற்பகையார் காவிரிப்பூம்பட்டினத்தில் வணிகர் குலத் தலைவர். தலைவருக்கு உரிய தகுதிகள் அவரிடம் உண்டு. சிவபெருமானுடைய திருவடியை எப்பொழுதும் நினைந்து உருகி அன்பு செய்பவர். அளவற்ற செல்வம் படைத்தவர். தான் நுகர வேண்டும் அல்லது பிறரை நுகர வைக்க வேண்டும். அதுவே செல்வத்தின் பயன். சிவபெருமான் திருவடியிலே இடையறாத அன்பு பூண்ட அவர், அரனடியார்கள் யாவராயினும் யாது கேட்பினும் இல்லையென்னாமல் ஈந்துவக்கும் இயல்புடையவர். இல்லறமாகிய நல்லறத்துள் நின்றவர். தமது உடம்பும், உயிரும், உறுபொருளும் எல்லாம் சிவனடியார்க்கே உரியது என்று அடிமைத் திறம் பூண்டு அருள் நெறியைக் கடைப்பிடித்து வாழ்ந்து வந்தார். அடியார்கள் கேட்பதைக் கொடுத்து அன்பு செய்து வந்தார்.

''அன்றே என்றன் ஆவியும் உடலும்
உடைமை யெல்லாமும்
குன்றேயனையாய் என்னையாட்
கொண்டபோதே கொண்டிலையோ?''

என்ற திருவாக்கினைப் பின்பற்றினார்.

இவருடைய அளவிடப்படாத அடிமைத் - திறத்தை உலகுக்கு உணர்த்த வேண்டும் என்று எண்ணினார் கைலாச நாதர்.

ஆயு நுண்பொரு ளாகியும் வெளியே
அம்ப லத்துள் நின்றாடுவார் உம்பர்
நாய கிக்குமக் தறியவோ? பிரியா
நங்கை தானறி யாமையோ? அறியோம்
தூய நீறுபொன் மேனியில் விளங்கத்
தூர்த்த வேடமும் தோன்றவே தியராய்
மாய வண்ணமே கொண்டுதம் தொண்டர்
மாறாத வண்ணமும் காட்டுவான் வந்தார்.

பெரியவர்கள் தங்கள் அநுபவத்தினாலும் ஆராய்ச்சியினாலும் அறிகின்ற நுண்பொருளாய் இருப்பவன் ஆண்டவன். அப்படிப்பட்டவர் காமுகன் வேடத்தில் வருகின்றாராம். தமது இடப்பாகத்தில் எழுந்தருளியுள்ள உமாதேவியார் சம்மதத்துடன் வருகிறாரா என்பது தெரியவில்லை என்று சேக்கிழார் சொல்லுகின்றார்.

தூர்த்த வேடம் என்றால் காமுகன் போன்ற சில குறிப்புகள். நெற்றியெல்லாம் நீறணிந்து, உடலில் அத்தர் பூசி, ஜவ்வாதுப் பொட்டை இட்டுக் கொண்டால் எதைக் குறிக்கும்? காமனை எரித்த கண்ணுதற் கடவுள் காமமுற்றவனைப் போல் காவிரிப்பூம்பட்டினத்தை அடைந்தார். வணிகர் வீதியில் விளங்கும் இயற்பகையாருடைய பொன் மாளிகையில் புகுந்தார்.

''தங்கள் வருகை குலம் செய்த புண்ணியம்'' என்று கூறி வலம் செய்து வணங்கினார் நாயனார். வந்தவருக்கு ஆசனம் தந்தார். அவருடைய திருவடியைப் பூசித்து மலரிட்டு அருச்சனை செய்தார். ''சுவாமி, என்ன வேண்டும்?'' என்று கேட்டார்.

உடனே சொல்லுகிற கதையா அது? கைம்மாற்று வாங்க வந்தவனே, ''பையன் அட்மிஷன் என்னவாயிற்று? வீட்டில் எல்லோரும் சௌக்கியமா?'' என்றெல்லாம் கேட்டுச் சில நேரம் கழித்துத்தானே பணம் கேட்கிறான்?

சுவாமி சொல்லுகிறார்: ''ஐயா, இயற்பகையாரே! அம்பலவாணருடைய அடியார்கள் எதனைக் கேட்டாலும் மறுக்காமல் தருவீர்களாமே!''

''ஏதோ என் கடமையைச் செய்கிறேன்'' என்றார் இயற்பகையார்.

''உன் வள்ளன்மையைக் கேள்வியுற்று நான் உன்னை நாடி வந்தேன். உன்னிடம் ஒன்று கேட்கப்போகிறேன்!''

''ஒன்று என்ன? ஆயிரம்கேளுங்கள்.''

''இல்லை என்று மறுக்காமல் கொடுப்பாயா?''

கேட்பவர் இவ்வளவு பீடிகை போட்டவுடன் நாமாயிருந்தால் எப்படியெல்லாம் எண்ணி யிருப்போம்? ஆனால் நாயனார் ''இல்லை என்று ஒரு நாளும் சொல்ல மாட்டேன்'' என்றார்.

''அப்பா! நான் ரொம்பப் பிரியமாய் ஒரு பொருளை விரும்பி வந்தேன்.''

''கேளுங்கள் சுவாமி!''

''நீ தருகிறேன் என்று ஒப்புக்கொண்டால் நான் கேட்கிறேன்.''

நாம் இயற்பகையாக இருந்தால் என்ன கேட்டாலும் தருகிறேன் என்றுதான் சொல்லி யிருப்போம். ஆனால் நாயனார் அப்படிச் சொல்ல வில்லை.

என்ன அவ்வுரை கேட்டியற் பகையார்
''யாதும் ஒன்றும்என் பக்கல் உண்டாகில்
அன்னதெம்பிரான் அடியவர் உடைமை;
ஐயம் இல்லை;நீர் அருள்செயும்'' என்ன
''மன்னு காதல்உம் மனைவியை வேண்டி
வந்த திங்''கென அங்கணர் எதிரே
சொன்னபோதினும் முன்னையின் மகிழ்ந்து
தூய தொண்டனார் தொழுதுரை
செய்வார்

நான் தருகிறேன் என்றால் அந்தப் பொருள் தன்னுடையது என்று எண்ணியதாக அர்த்தம். ஆகவே, இயற்பகையார் அப்படிச் சொல்லவில்லை. ''ஏதாவது ஒரு பொருள் என் பக்கத்தில் இருக்குமானால் அது ஈசனடியார்க்கே உரியது; அணுத் துணையும் ஐயம் இல்லை, அருள் புரிவீர்'' என்று கூறினார்.

''மன்னு காதல்உம் மனைவியை வேண்டி வந்தேன்'' என்றார் மறையவராக வந்த இறைவர். சேக்கிழார் ஆழ்ந்து பாடுகிறார். ''மனைவியைக் கொடு'' என்று கேட்கவில்லை. ஏன்? மனைவி என்றால் சில கணவன்மார்கள் விவாகரத்து செய்த மனைவியையும் குறிக்கும். கணவனிடம் கோபித்துக் கொண்டு தாய் விட்டுக்குச் சென்ற மனைவியையும் குறிக்கும். ஆனால் இவரது மனைவி அப்படிப்பட்டவர் அல்லர். ஒரு நாள், ஒரு விஞடிகூடக் கணவன் மனைவி மனஸ்தாபம் இல்லை. காதல் மனைவி; நிலைபெற்ற மனைவி. அந்த நிலைபெற்ற காதல் மனைவியைக் கொடு என்று கேட்டாராம் சுவாமி.

இச்சொல்லைக் கேட்கின்றவர் நாடி நரம்பெல்லாம் சூடேறும். ஆனால் நாயனார் என்ன செய்தார்? ''சொன்ன போதிலும் முன்னையின் மகிழ்ந்து தூய தொண்டனார் தொழுதுரை செய்தார்.'' முன்னையிலும் பன்மடங்கு மகிழ்ந்தார்; முகம் மலர்ந்தார். ஏன் முன்னையிலும் மகிழ்ந்தார்? 'நமக்குச் சொந்தமில்லாத பொருளைக் கேட்டிருந்தால் என் செய்வது? இவள் என் வாழ்க்கைத் துணைவி. ஆகவே, அடியார் கேட்டது கொடுக்கக் கூடிய பொருள்தான்' என்று அவர் காலில் விழுந்தாராம்.



''பெருமானே! மனைவி முன்பே என்னிடம் உள்ள பொருள்தான். இல்லாத பொருளைக் கேட்டு அடியேனை அவலப்படச் செய்யாமல் உள்ள பொருளையே கேட்டருளினீர். சிறியேன் செய்த தவமே தவம்'' என்று கூறி மனைவியாரிடம் கதுமெனச் சென்றார்.

'மனைவியைக் கேட்ட அடியவரைச் சிவனடியார் என்று கூறலாமோ? அது பிறன்மனை நயந்த பாதகம் ஆகாதோ? பிறன்மனை நயந்தவரை அடியார் எனக் கொள்வது எவ்வாறு பொருந்தும் ?' என்று கேள்வி எழும்.

எவரேனும் தாமாக விலாடத் திட்ட
திருநீறுஞ் சாதனமும் கண்டால் உள்கி
உவராதே அவரவரைக் கண்டபோது
வுகந்தடிமைத் திறநினைந்தங் குவந்து
நோக்கி

இவர்தேவர் அவர்தேவர் என்றுசொல்லி
இரண் டாட்டா தொழிந்தீசன் திறமே பேணிக்
கவராத தொழுமடியார் நெஞ்சினுள்ளே
கன்றுப்பூர் நடுதறியைக் காணலாமே.

என்ற திருவாக்கின்படி அடியவரைக் கண்டவுடன் அழலிலிட்ட மெழுகுபோல் உருகித் தம் வயமழிந்து நிற்கும் அன்பு மயமானவர் இயற்பகையார். அன்பு மிகுந்த போது ஆராய்ச்சிக்கு இடமேது?

கம்பாநதி பெருக்கெடுத்த போது இறைவருக்கு அதனால் ஊறு நேரும் என்று எண்ணிய உமையம்மையார் சிவலிங்கத் திருமேனியைத் தழுவினு ரன்றோ? கங்கையை முடித்த கண்ணு தற் கடவுளுக்கு இச்சிறு வெள்ளத்தால் ஊறு உண்டாகாது என்ற ஆராய்ச்சி அங்கே தலைப்படவில்லை. உலகங்கெட் கெல்லாம் ஒரு துணையாக உள்ள இறைவருக்குத் துணையில்லையே என்றும் பசி தாகம் இல்லாத பரம்பொருள் பசித்திருக்கின்றனரே என்றும் அன்பி னுல் உருகிய கண்ணப்பர் திறமும் இத் தன்மையதே.

மனைவியாரிடம் சென்ற இயற்பகை யார், ''பெண்மணி! இந்த அடியவ ருக்கு உன்னை நான் கொடுத்துவிட் டேன்'' என்ருர்.

இச்சொல்லைக் கேட்டதும் அம்மை யார் கலங்கினுர். அவருடைய மதி குழம்பியது. அடுத்த விநாடியில் மனம் தெளிந்தார். 'கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை' என்பதை உணர்ந் தார்; கணவரது கட்டளையை நிறை வேற்றுவதே தம் கடன் என முடிவு செய்து கொண்டார்.

''இன்று நீரெனக் கருள்செய்த திதுவேல்
என்னு யிர்க்கொரு நாத!நீர் உரைத்த
தொன்றை நான்செயும் அத்தனையல்லால்
உரிமை வேறுள தோஎனக்(கு)''என்று
தன்தனிப் பெருங் கணவரை வணங்கத்
தாழ்ந்து தொண்டனுர் தாமெதிர் வணங்கச்
சென்று மாதவன் சேவடி பணிந்து
திகைத்து நின்றனள் திருவினும் பெரியாள்.

''நீங்கள் கட்டளையிடுவதைச் செய்ய வேண்டியது என் கடமையாகும்'' என்று தம் கணவரிடம் கூறினுர்.

நாம் எல்லோரும் சிவபெருமானுக்கு மனைவிகள். சுவாமி பார்த்து என்ன சொல்கிருரோ அதை நாம் செய்ய வேண்டும். ''நன்றே செய்வாய். பிழை செய்வாய். நானே இதற்கு நாயகமே'' என்ருர் மாணிக்கவாசகப் பெருமான்.

அந்த மாதிரியாக இந்த அம்மை யார் சொல்கிருர்: ''தேவரீர் எனக்கு நாயகர். தாங்கள் பார்த்து, இதைச் செய் என்ருல் நான் செய்துதானே ஆக வேண்டும்? நீங்கள் சொல்வது சரியா என்று கேட்க எனக்கு உரிமை இல்லை.''

அம்மையார் கணவருரை வணங் கினுர். இயற்பகை நாயனுர் அந்த அம்மையார் காலில் விழுந்து எதிர் வணக்கம் செய்தார். ஏன்? அந்த விநாடியிலிருந்து அம்மையார் அவரது மனைவியார்அல்லர்; அடியாரின் மனைவி யாகி விட்டார். ஆகவேதான், நாயனுர் அந்த அம்மையாரை வணங்கினுர்.

திருவினும் மிக்க அம்மையார் பின்னர் மாதவரிடம் சென்ருர்; அவரை வணங்கித் திகைத்து நின்ருர். இயற்பகை நாயனுர் மிக்க மகிழ்ச்சி யுடன் அடியவரை வணங்கி, ''சுவாமி! நான் இன்னும் என்ன செய்ய வேண் டும்?'' என்று கேட்டார்.

''அப்பா! இப்போதுதான் பெரிய ஆபத்து இருக்கிறது. இம்மங்கையை நான் அழைத்துக் கொண்டு போனுல், உன் சுற்றத்தாரும், இவளுடைய சுற்றத்தாரும், நகரத்து மக்களும் என்னுடன் சண்டைக்கு வருவார்கள். ஆகவே, நீ எனக்கு ஓர் உதவி செய்ய வேண்டும். என்னுடன் அவர்கள் சண் டைக்கு வருவார்களாதலால் எனக்குஎவ் வித இடையூறும் ஏற்படாதவண்ணம், ஊரின் எல்லையைத் தாண்டிச் செல் கிறவரை நீ எனக்குத் துணையாக வர வேண்டும்'' என்ருர் அடியார்.

''சுவாமி! இதனை நீங்கள் சொல்வ தற்கு முன்பே நான் செய்திருக்க வேண்டும். நீங்கள் சொல்லுகின்ற வரை வாளாவிருந்து விட்டேன். மன் னிக்க வேண்டும்'' என்று கூறினுர் இயற்பகை. ''இதோ வருகிறேன்'' என்று முனிவரிடம் சொல்லி விட்டுத் தனியிடம் போய்ப் பொற்சரிகை ஆடை யும், பூங்கச்சும் புனைந்தார்; கையிலே வாளும் பலகையும் ஏந்திப் போர்க் கோலம் பூண்டு வந்து அடியவரைப் பணிந்தார்.

முன்னே அடியவர் சென்ருர். அவ ரைத் தொடர்ந்து அம்மையார் சென் ருர். இருவருக்கும் பின்னே நாயனுர் சென்ருர். வந்த அந்தணருக்கு இயற் பகை நாயனுர் மனைவியைத் தந்ததை யும், அடியவரும் அம்மையாரும் முன் செல்ல இவர் பின் செல்வதையும்

# எப்பொழுதும் புத்துணர்ச்சியுடன் இருங்கள் நாள்முழுவதும் சுறுசுறுப்பாக இயங்குவதற்கான புத்துணர்ச்சிக்கு

# புதிய கால்கேட் லோர்னே டால்க்

புதிய கால்கேட் லோர்னே டால்க்கின் புதுப்பிக்கும் நறுமணம் உங்களைக் குளுமையுடனும், புத்துணர்ச்சியுடனும் வைத்திருக்கிறது.... நாள் முழுவதும் அந்தத் துடிப்பான சுறுசுறுப்பைத் தருகிறது. இளமைத் துடிப்பும், சுறுசுறுப்பும், விளையாட்டுகளில் பிரியமுள்ளவர்கள் குறிப்பாக கால்கேட் லோர்னே டால்க் வியர்வையைத் துரிதமாக கிரகித்துக்கொண்டு தாங்கள், நாள் முழுவதும் உற்சாகமாக இருக்க உதவுவதை கண்டு அறிவார்கள்!

இது சிக்கனமானதும்கூட! உங்கள் குடும்பத்தினருக்கு கால்கேட் லோர்னே டால்க் ஐ வாங்குங்கள்—அது சுறுசுறுப்பான நவீன மக்களுக்கேற்ற புதியதொரு பரவசமூட்டும் நறுமணம் கொண்டது!








அறிந்த அம்மையாரது உறவினரும், இயற்பகையாரது சுற்றத்தாரும் சீறி னார்கள். ''என்னே இவன் மதி! இவ னுக்குப் பித்துப் பிடித்து விட்டது. இப்படிச் செய்தவர் எவரும் இல் லையே? இவன்தான் அறிவில்லாமல் தந்தாலும் நம் குலக்கொடியை ஒருவன் கொண்டு போவதா? நன்று; நன்று; பாவையையும் பழியையும் மீட்போம்'' என்று ஆர்த்து எழுந்தார்கள். வேல், வில், வாள், சரிகை முதலிய ஆயுதங் களை எடுத்துக் கொண்டு வாயுவேக மாகச் சென்று நகரத்தைக் கடந் தார்கள். ஆங்கே அவர்களை இருமருங் கும் வளைத்துக் கடலைப் போல் பொங் கித் தடுத்தார்கள். ''அறிதகனே! போகாதே நில்; எமது குலமகளை விட்டுப் பழியை நீக்கிச் செல்'' என்று கூவினார்கள்.

திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள் அஞ்சினவரைப் போல் அம்மையாரை நோக்கினார். ''ஆண்டவனே! அஞ்சா தீர்கள். இயற்பகை வெல்லும்'' என்றார் அம்மையார்.

''பெருந்தகையே! வருந்த வேண் டாம். இவர்களை யான் ஒருவனே உமது ஆசீர்வாதத்தால் வென்று நீக்கு வேன்'' என்று கூறிய நாயனார் மிக்க




# வெள்ளி விழாப் பரிசுத் திட்டம்

## போட்டி முடிவுகள்

### நாவல் போட்டி

இம்மே கண்ட நாவல்களை முறையே முதல் மூன்று பரிசுகளுக்கு உரியனவென்று ஏகமனத்துடன் பரிசீலனை செய்த நாங்கள் தீர்மானிக்கிறோம்.

**முதல் பரிசு (பத்தாயிரம் ரூபாய்)**
மூன்றும் மலரும் — ஸ்ரீ உமாசந்திரன், சென்னை-28

**இரண்டாம் பரிசு (ஏழாயிரத்தைந்நூறு ரூபாய்)**
கல்லுக்குள் ஈரம் — ஸ்ரீ ர. சு. நல்லபெருமாள், பாளையங்கோட்டை

**மூன்றும் பரிசு (ஐயாயிரம் ரூபாய்)**
மணக் கோலம் — ஸ்ரீ பி. வி. ராமகிருஷ்ணன், (பி.வி.ஆர்.) சென்னை-4

ஸெ. கரோஜினி
கி. வா. ஜகந்நாதன்
மீ. ப. சோமசுந்தரம்
சௌந்தரா கைலாசம்
சதாசிவம்

பஞ்சாயத்தார்

வீரத்துடன் நின்றார். அவருடைய விழிகளில் கனற்பொறிகள் சிந்தின.

நாயனார் நெஞ்சிலே ஐந்தெழுத்தை ஓதிக் கொண்டு கறங்குபோல் சுழன்று போர் செய்தார். நாற்றிசைகளிலும் பரந்து வந்தவர்களை எதிர்த்துத் தாக்கி வென்றார். கிளைஞரோடு வந்தவர்களில் ஓடியவரே உய்ந்தனர். எதிர்ப்பவர் எவருமின்றி நின்ற நாயனார் அடியவரை நோக்கி, ''இனி நீங்கள் அஞ்சாமல் செல்லலாம். இப்பூங்காவனம் கடக்கும் வரை உடன் வருவேன்'' என்றார்.

தொண்டர் பின்தொடர்ந்து வரச் சென்ற அண்டர்நாதன் சாய்க்காட்டின் அருகில் மேவினார். பின் தொடர்ந்து வந்த இயற்பகை நாயனாரை நோக்கி, ''அன்பனே! இனி நீ திரும்பலாம்'' என்று அருளினார். மறையவர் மலரடியைத் தலையாரக் கும்பிட்ட இயற்பகையார், ''அருள் பெற்றேன்'' என்று கூறித் திரும்பினார். எவ்வளவோ காலமாகப் பாலும் சுவையும் போல் வாழ்ந்த அந்த அம்மையாரைத் திரும்பியே பார்க்கவில்லை நாயனார்.

செயற்கருஞ் செய்கை செய்த தொண்டர் மீண்டு ஏகியதை மகிழ்ந்து நோக்கிய ஆண்டவர், ''பொய்தரும்

# சிறுகதைப்போட்டி

கீழ்க்கண்ட கதைகள் முதல், இரண்டு, மூன்றும் பரிசுகளுக்குத் தேர்ந்தெடுக்கப் பெற்றுள்ளன.

**முதல் பரிசு (ஆயிரம் ரூபாய்)**

ஸவிதா — ஸ்ரீமதி என். பத்மா, ஜகந்நாத் நகர், ராஞ்சி

**இரண்டாம் பரிசு (ஐந்நூறு ரூபாய்)**

பிரமை — ஸ்ரீ கு. வேங்கடரமணி, மருதூர், தஞ்சை ஜில்லா

**மூன்றும் பரிசுகள் (ஒவ்வொன்றுக்கும் நூறு ரூபாய்)**

| | |
|---|---|
| புது வெய்யில் | — ஸ்ரீ ம. இராஜாராம், சென்னை-21 |
| மனச் சந்நிதி | — ஸ்ரீமதி கோமகள், காந்தி நகர், சென்னை-20 |
| கனவு | — ஸ்ரீமதி சரோஜா ராமமூர்த்தி, சென்னை-16 |
| எங்கள் வீட்டு லக்ஷ்மி | — ஸ்ரீமதி எஸ். பத்மாவதி, சென்னை-34 |
| பயணம் முடிவதில்லை | — ஸ்ரீ எஸ். பெருமாள், சென்னை-4 |
| நாஸ்திகன் | — ஸ்ரீ பொன்னித் துறைவன், சென்னை-33 |
| ராமையா | — ஸ்ரீ மறைநாயகன், பூவைமா நகர், தஞ்சை |
| இருள் | — ஸ்ரீ மதுரிஷி, சேலம்-1 |
| அக்கினிப் பிரவேசம் | — ஸ்ரீமதி எஸ். லக்ஷ்மி சுப்பிரமணியம், சென்னை-4 |
| வீழ்ச்சி | — ஸ்ரீமதி ஸ்ரீப்ரியா, சிக்கந்திராபாத்-26 |

பி. எஸ். ராமையா
மு. அருணாசலம்
அ. ச. ஞானசம்பந்தன்
ஸ்ரீ. பேருமாள்
தா சிவம்

பஞ்சாமத்தரர்





சர்க்கஸ் மானேஜர்: ஏனய்யா கோமாளி வேஷத்தோடேயே வீட்டுக்குப் போறீங்க?

கோமாளி: என் மனைவி கோபமா இருக்கா. அவளைச் சிரிப்பு மூட்டத்தான்!

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

உள்ளம் இல்லான்; திரும்பிக்கூடப் பார்க்காமல் போகின்றான்'' என்று எண்ணி அன்பரை மீளவும் அழைத்தார்.

தொண்டரை எப்படி அழைத்தார் சுவாமி?

''இயற்பகை முனிவா ஓலம்!
ஈண்டுநீ வருவாய் ஓலம்!
அயர்ப்பிலா தானே ஓலம்!
அன்பனே ஓலம்! ஓலம்!
செயற்கருஞ் செய்கை செய்த
தீரனே ஓலம்!'' என்றான்
மயக்கறு மறையோ லிட்டு
மாலயன் தேட நின்றான்.

எப்படியிருக்கிறது பாட்டு? ஓல மிட்டவர் யார்? மயக்கறு மறை ஓலிட்டு மாலயன் தேட நின்றவர். அவரிடம் ஆயிரம் வேதங்களும் ஓலம் ஓலம் என்று முறையிடுகின்றன.

''ஓலமறைக ளறைகின்ற வொன்றது'' என்பார் அருணகிரிநாதர்.

அப்படிப்பட்ட இறைவருடைய ஓலத்தைக் கேட்ட இயற்பகையார், — ''ஐயனே! அடியேன் இதோ வந்தேன். இன்னமும் தங்களுக்குத் தடை செய்பவர் இருப்பாராயின் அவர்களையும் இவ்வாளுக்கு இரையாக்குவேன்'' என்று ஓடி வந்தார்.

மறையவர் மறைந்து விட்டார்.

மனைவி மட்டுமே அங்கு இருக்கக் கண்டார் நாயனார்.

சென்றவர் முனியைக் காணார்;
சேயிழை தன்னைக் கண்டார்,
பொன்றிகழ் குன்று வெள்ளிப்
பொருப்பின் மேற்பொலிந்ததென்னத
தன்துணை யுடனே வானில்
தலைவனை விடைமேற் கண்டார்;
நின்றிலர்; தொழுது வீழ்ந்தார்;
நிலத்தினின் றெழுந்தார் நேர்ந்தார்.

மறையவரைக் காணாது திகைத்த இயற்பகை நாயனார் நாற்றிசையும் நோக்கினார். ஆகாயத்தில் பார்த்தார். வானவெளியில் வெள்ளிமலை போன்ற விடைமேல் மரகதக் கொடியுடன் பவளக்குன்றென வந்தருளிய கண்ணுதற் கடவுளைக் கண்டார். ஆனந்த வெள்ளத்துள் அழுந்தி ஆடினார்; மாலயன் காணா மலரடிமேல் வீழ்ந்து வணங்கினார்.

''சொல்லுவ தறியேன் வாழி!
தோற்றிய தோற்றம் போற்றி
வல்லைவந் தருளி என்னை
வழிந்தொண்டு கொண்டாய் போற்றி!
எல்லையில் இன்ப வெள்ளம்
எனக்கருள் செய்தாய் போற்றி!
தில்லையம் பலத்து ளாடும்
சேவடி போற்றி'' என்ன.

''அன்பனே! உனது அளவற்ற அன்புக்கு மகிழ்ந்தோம். நீயும் உன் மனைவியும் நம்மோடு கைலாசத்துக்கு வருக'' என்று அருளிச் செய்தார் எம்பெருமான். வானவர் பூமழை பொழிந்தனர். திருவளர் சிறப்பின் மிக்க தொண்டரும், மருவிய தெய்வக் கற்பின் மங்கையும் எம்பிரானுடன் சென்று அருகில் எப்போதும் சிவலோகத்தில் கும்பிட்டு உறையும் பெருமை பெற்றனர். இயற்பகை நாயனார் வாளினால் மாண்டசுற்றவர்கள் சுவர்க்க உலகம் பெற்றனர்.

இவருடைய வரலாற்றை சமயக் கண் கொண்டு காண மாட்டாத சிலர், பலவாறு பேசி அல்லலுறுகின்றனர். அது இரத்தினப் பரீட்சை தெரியாத ஒருவன் இரத்தினத்தை மதிப்பிட வந்தது போலும். எல்லாம் வல்ல இறைவர் இவரை, ''செயற்கருஞ் செய்கை செய்த தீரனே'' என்று அழைப்பாரானால் இவருடைய பெருமை அளக்கற்பாற்றோ?

மனைவியைத் தந்தால் உலகம் நம்மைப் பழிக்குமே என்று இயற்பகை நாயனார் நாணினாரில்லை. உலகத்தை இவர் நோக்கவில்லை. யானை வாகனத்தைக் கண்ட ஒருவன் அது மரத்தினால் செய்யப்பட்டது என்று நோக்கும்போது யானை தோன்றுவதில்லை அல்லவா?

(தொடரும்)

# இளமேனியருக்கு இணங்கிய உறவு

# பியர்ஸ்...










## மென்மை கொஞ்சும் தூய கிளிசரின் சோப்

பச்சிள மேனிக்கும் இணங்கிய மென்மையுள்ளது பியர்ஸ். வறளவிடாமல் உங்கள் சருமத்தை இளங்கொழுந்து போல் புதுமையோடு போற்றுவது பியர்ஸ் சோப்பிலுள்ள கிளிசரின். தூய்மையானது பியர்ஸ்...மாணிக்கம் போல் படிகத் தன்மை படைத்தது. உங்கள் மேனிமீது இளமை கொஞ்சிடவே : பியர்ஸ்

**தன் தூய்மையைக் கண்கூடாக உணர்த்துவது பியர்ஸ்**




இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-PS. 15A-

## சொல்லுங்கள், பார்க்கலாம்!



1. நான் ஒரு டிரைவர். நான் ஓட்டிச் சென்று கொண்டிருந்த காரின் நிறம் கறுப்பு. அணிந்திருந்த ஆடையும் (யூனிபார்ம்) கறுப்பு. காரோ அறுபது மைல் வேகத்தில் சென்று கொண்டிருக்கிறது. தெரு விளக்குகள் எல்லாம் அணைந்து கிடக்கின்றன. காரிலும் விளக்கு இல்லை. அதோடு அன்று அமாவாசை நாள். இந்நேரம் ஒரு முஸ்லிம் பெண் காரின் முன்னே சாலையில் பாய்ந்து விடுகிறாள். அவள் அணிந்திருந்த ஆடையும் கறுப்பு கோஷா. இருந்தாலும் அவள் பாய்ந்ததைக் கண்டு, அவளுக்கு எந்த ஒரு சிறு காயமும் ஏற்படாத படி காரை நிறுத்தி விடுகிறேன். என்னால் அதை எப்படிச் செய்ய முடிந்தது?

2. ஒரு சொல்லைத் தமிழில் சொன்னால் ஆகாயத்தில் ஊர்வதையும், ஆங்கிலத்தில் சொன்னால் தரையில் ஊர்வதையும் குறிக்கும். அந்தச் சொல் எது?



3. பெண்கள் மிகக் குறைவாகப் பேசும் மாதம் எது?

பாசா—கலைக்குரல்.

விடைகள்: 44ம் பக்கம் பார்க்க.

## மரணத்துக்கு ஒரு விழா!

யார் யாரோ, எப்படி எப்படியோ, எதெதற்கெல்லாமோ விழாக் கொண்டாடுகிறார்கள். டைபோர்ட் உட்வார்டு என்பவர் ஐங்கேரி நாட்டில் புகழ்பெற்ற நாடக நடிகர். அவர் பிறந்த நாள் விழாக்கூடக் கொண்டாடியதில்லை. ஆனால் ஒரு விநோதமான விழாக் கொண்டாடியிருக்கிறார். இதுவரை இவர் பத்து நாடகங்களில் பிரமாதமாக நடித்து முடிவில் 'இறந்து' இருக்கிறார். சமீபத்தில் நடிகர் தமது பத்தாவது மரணத்தை விழாவாகக் கொண்டாடி யிருக்கிறார்.

ஒருதடவை கத்திச் சண்டையின் விளைவாய் உயிர் நீத்தார், பிறகு துப்பாக்கிக் குண்டால் மரணம், சீட்டாட்டத்தில் தோல்வியுற்றுத் தம்மைத் தாமே கைத் துப்பாக்கியால் சுட்டுக் கொண்டார். பின்னர் கடலில் குதித்து மூழ்கி இறந்தார். தூக்குக் கயிற்றில் தொங்கினார்; காதலி விஷமுள்ள லிப்ஸ்டிக்கை உதட்டில் பூசியிருக்க அதை முத்தமிட்டதன் விளைவாக ஒரு தடவை மரணம்; பிசாசினால் குத்தப்பட்டார்; தம்மைத் தாமே ஈட்டியால் குத்திக் கொண்டார்; மரண தண்டனை பெற்றதும் இவர் தலை சீவப்பட்டது; கடைசியாகக் கழுத்தை நெரித்துக் கொல்லப்பட்டார். பத்து நாடகங்களில் பத்து விதமாக இறந்தது ஒரு பெரிய சாதனை. அதனால்தான் இந்த விழாக் கொண்டாடுகிறேன் என்றாராம், உட்வார்டு.

—தகவல்: நோ

## விநோதத் தீர்ப்புகள்!

உலகின் பல பாகங்களிலுமுள்ள நீதி மன்றங்கள் அளித்த சுவையான தீர்ப்புகளைப் பாருங்கள்:

பிரான்ஸைச் சேர்ந்த ஒரு நீதிபதி ஒரு வழக்கில், "எந்த மனிதனுக்கும் தன் மனைவிக்கு வந்த கடிதத்தைப் படிக்க உரிமையில்லை" (காதல் கடிதமானாலும்கூட) என்று கூறினார்.

கலிபோர்னியாவைச் சேர்ந்த நீதிபதி ஒருவர் ஒரு வழக்கில், "இரண்டு வாரத்துக்குக் குற்றவாளி விருந்து சாப்பிடக் கூடாது" என்று உத்தரவிட்டார். காரணம், மேற்படி நபர் விருந்துக்கு நேரமாகிவிட்டதென்பதால் காரை வேகமாக ஓட்டி வந்தாராம்.

ஹவாய் தீவைச் சேர்ந்த நியாய ஸ்தலங்களில் யாரும் காலில் செருப்பின்றி உள்ளே நுழையக் கூடாது என்று உத்தரவிடப்பட்டுள்ளது.

விளக்குக் கம்பத்தில் யாரும் குதிரையைக் கட்டக் கூடாது என்றும் தாங்கள் வளர்த்து வந்த பொன்னிற மீன்களை யாரும் அநாதைகளாக்கிச் சென்றுவிடக் கூடாது என்றும் இங்கிலாந்திலுள்ள ஒரு நீதிமன்றம் சமீபத்தில் தீர்ப்பளித்தது.

ஆதாரம்: "வீக் என்டு"
தகவல்: சம்பத்குமார்

●

ஆப்பிரகாம் லிங்கன் ஜனாதிபதியாக இருந்தபோது அவரைப் பாராட்டிப் பேசவந்த ஒரு முதியவர் அவரிடம், "ஜனாதிபதியவர்களே, அமெரிக்கா இரண்டு பேரால்தான் காப்பாற்றப்படுகின்றது. அவர்கள் ஆப்பிரகாம் லிங்கனும், கடவுளும்" என்றார்.

அதற்கு ஆப்பிரகாம் லிங்கன், "நீங்கள் சொன்னதில் பாதி மட்டும் சரி" என்றார்.

ஆதாரம்: இனிய கலைகள்
தகவல்: மல்லிகா

## வியாதி வெளியேறியது !

மாவீரன் அலெக்ஸாண்டருக்கு ஆண்டிகோனஸ் லைக்ளாப் என்றொரு தளபதி இருந்தார். அவர் ஒரு நாள் தம் மகனுக்கு ஏதோ வியாதி என்று கேள்வியுற்று அவனைப் பார்ப்பதற்காகச் சென்றிருந்தார்.

மகன் இருந்த அறைக்குள் அவர் நுழையும் போது அழகிய பெண்ணொருத்தி உள்ளேயிருந்து வெளியே வந்து கொண்டிருந்தாள்.



தளபதி அறைக்குள் சென்று மகனைப் பார்த்தபோது அவன் வியாதி ஏதுமின்றி ஆரோக்கியமாய் இருப்பதைக் கண்டார்.

''அப்பா! என் காய்ச்சல் போய்விட்டது!'' என்று மகன் சொன்னான்.

தளபதிக்கு எரிச்சல் உண்டாகிவிட்டது. ''ஆமாம்; ஆமாம்; நான் உள்ளே நுழையும் போது அது வெளியே போனதை நானும் பார்த்தேன்!'' என்றார் அமைதியாக.

ஆதாரம் :

'மேதைகள் தமாஷ்' — புலி. வேந்தன்

## மாம்பழம் வேண்டுமென்றால்...?

புதுதில்லியில் உள்ள இந்திய விவசாய ஆராய்ச்சி நிலையத்தின் பழத் தோட்டத்தில், காய்த்துக் குலுங்கும் மாமரங்களும், கொய்யா மரங்களும் புதிய ஒட்டு முறையின் வெற்றிக்குச் சான்றாக விளங்குகின்றன. மரமெங்கும் காய்கள். இவற்றுள் சில மரங்கள் வளரத் தொடங்கி மூன்றாண்டுகள் தான் ஆகின்றன.

செடியை வளைத்துப் பதியம் போடும் பழைய முறையை விடப் புதிய முறை மிகவும் எளிதானது. புது முறையின் படி, ஒரு தெரிந்தெடுத்த ''தாய் மர''த்திலிருந்து கிளை ஒன்றை வெட்டி, பதியன் ஒன்றுடன் ஒட்டுக் கட்ட வேண்டும்.

பழைய முறையில் பதியன்களை ''தாய் மர''த்தின் அருகே கொண்டு செல்ல வேண்டியிருந்தது. மாமரம் மிகவும் உயரமாக இருந்தால், பதியன்களடங்கிய தொட்டியை ஒரு மேடை மீது வைத்து அவ்வப்போது தண்ணீர் ஊற்றிவர வேண்டியிருக்கும். புதிய முறையின் சிறப்பு அம்சம் என்னவென்றால், தாய் மரம் இல்லையென்றாலும், ஒட்டுக் கட்ட முடியும். தாய் மரத்தின் ஒட்டுக் கிளைகளைச் சேகரித்தால் மட்டும் போதும்.

மற்றொரு விதத்திலும் புது முறை, பழைய முறையை விட அதிக அநுகூலம் வாய்ந்ததாகும். வளைத்துப் பதியம் வைக்கும் முறையில், பாதி பதியங்கள்தான் வளரும். புதிய முறையில் சுமார் 80 சதவிகிதம் செடிகள் வளருகின்றன. அதோடு ஒரே தாய் மரத்திலிருந்து ஏராளமான ஒட்டுக் கிளைகளைப் பெற முடியும். வளைத்துப் பதியம் வைக்கும் முறையில் இது சாத்தியமல்ல.

புதிய முறையில் இரண்டுக்கு மேற்பட்ட ரகங்களை ஒரே பதியத்தில் ஒட்டுக் கட்டலாம். அதோடு இது சிக்கனமானது.

புதிய முறையின் வெற்றி, சரியான ரகக் கிளையைத் தெரிந்தெடுப்பதைப் பொறுத்திருக்கிறது. கிளை 3 மாதம் முதல் 6 மாதம் வரை வளர்ந்ததாக இருக்க வேண்டும். வட்ட வடிவமானதாக இருக்க வேண்டும். இரண்டரை முதல் 10 சென்டி மீட்டர்வரை நீளமிருக்க வேண்டும்.

## சிரிக்காதீர் — சிந்திப்பீர் !

தம் பேச்சைக் குறிப்பெடுக்கும் நிருபரிடம் தலைவர் கோரினார்: ''தயவு செய்து கடினமான சொற்களை அகற்றிப் புரியும்படி எழுதுங்கள் — நானே பத்திரிகையில் படித்து நான் என்ன பேசினேன் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டாமா?''

''இரண்டு வேலைக்கு ஆர்டர் வந்திருக்கிறது. — முதல் வேலை எனக்குப் பிடித்தது — ஆனால் சம்பளம் ஒழுங்காக வராது. இரண்டாவது சம்பளம் ஒழுங்காகக் கிடைக்கும். வேலை பிடிக்காதது.''

''உனக்குப் பிடித்த வேலையை நீ செய். பிடிக்காத வேலையை எனக்கு வாங்கிக் கொடு.'' - வா. கோ. பர.




ஆயிரம் புகழ்ந்தாலும், அலங்காரச் சொற்களால் போற்றினாலும் உங்கள் அழகுக்கு முழு மதிப்புத் தருவது போலாகிவிடாது. கருத்துடன் தேர்ந்தெடுத்த கலையான ஆடைகள் வேண்டும்; அவைதாம் உங்கள் இயற்கை எழிலுக்குப் பூரணப் பொலிவு, உங்கள் மேலான ரஸனைக்கு அத்தாட்சி. எந்தெந்த சமயத்திலும், எந்தெந்த மனநிலையிலும் எடுப்பான பொருத்தமுடன் 'இதோ' என்று உங்கள் வனப்பைச் சிறப்பிக்க இருக்கிறது ஒரு ரோஹித் சேலை.

**எப்பொழுதும் வண்ணாத்தி பூச்சிச் சின்னத்தைப் பார்த்து வாங்குங்கள்.**



## ஆர்ஜூ

சமீபத்தில் வெளிவரும் ஹிந்திப் படங்கள் அனைத்துக்கும் பகைப் புலனாக நின்று கை கொடுத்து உதவுபவை காஷ்மீரம், சிம்லா, நைநிதால் ஆகியவற்றின் இயற்கை வளம் நிறைந்த சூழ்நிலைகளாகும். சூழ்நிலையைத் தமக்குக் கைகொடுத்து உதவும்படி செய்திருக்கிறார் 'ஆர்ஜூ' படத்தைத் தயாரித்துள்ள ஸ்ரீராமானந்த சாகர்! வண்ணக்கலவையும், இயற்கைச் சூழ்நிலையும் அவருக்கு - அவர் ஆசைக்கு - ஏமாற்றமளிக்காமல் கை கொடுத்து உதவியிருக்கின்றன.

கதை, கதைக்கு ஒரு காதல், அந்தக் காதலுக்கு ஓர் எதிர்ப்பு. அல்லது போட்டி — இப்படிக் கதையை வளைய விடுவது சினிமாத் துறைக்குப் புதிதல்ல. இரண்டு நண்பர்கள் ஒரு பெண்ணின் மீது நாட்டம் கொண்டு, ஒருவர் தியாகியாவதும் பழைய அநுபவமே. இருந்தாலும் கதாசிரியர் சாகருக்குச் சிறந்த வசனங்கள் கைகொடுத்து உதவியதோடு கதைக்கும் ஒரு மெருகேற்றியிருக்கின்றன.

இடையிடையே வலிப்பு நடனங்களுக்கும் குறைவில்லை.

சாதனா தம் புன்னகையையே ஒரு நடிப்பாக்கிப் பரவசப் படுத்துகிறார். ராஜேந்திர குமார் பிற்பகுதியிலே உணர்ச்சியைக் கொட்டித் தமக்கும் நடிக்க வரும் என்பதைக் காட்டுகிறார். மஹ்மூது காதல் எக்ஸ்பர்ட்டாக வந்து ஜமாய்க்கிறார். அவர் பெண் வேடம் போடாத படங்கள் குறைவு. அதற்கு இந்தப் படமும் விதிவிலக்கல்ல. கதை விழுந்து எழுந்து உருண்டு புரண்டு நின்றாலும் தலைப்புக்கேற்பப் பார்ப்பவர்களின் மனத்திலே ஆசையைக் கிளறி விடத் தவறவில்லை.

## சினிமாக் கலைஞர்களுக்குப் பரிசு

சென்னை சினிமா ரசிகர்கள் சங்கம் ஆண்டு தோறும் ஒரு நல்ல காரியத்தைச் செய்து வருகிறது. தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய நான்கு மொழிகளிலிருந்தும் நடிக, நடிகையர்களைத் தேர்ந்தெடுத்துப் பரிசு வழங்குகிறது. சிறந்த படத்தைத் தயாரிக்கும் படாதிபதிக்கும் பரிசு உண்டு.

1965ம் ஆண்டின் சிறந்த நடிகராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட எம். ஜி. ராமச்சந்திரனுக்கு (''எங்க வீட்டுப் பிள்ளை''யில் நடித்ததற்காக) வெள்ளிப் பொம்மை பரிசளிக்கப்பட்டது. ''இதய கமல''த்தில் நடித்த கே. ஆர். விஜயா சென்ற ஆண்டின் சிறந்த நடிகையாகப் பரிசு பெற்றார்.

வேறு பல நட்சத்திரங்களும் பரிசு பெற்றனர். எழுத்தாளர்களுக்கு மகிழ்ச்சியூட்டும் விதத்தில் ''என்னதான் முடிவு?'' படத்தின் கதாசிரியரான ''மஹரிஷி''க்கு மேற்படி கதையின் சிறப்புக்காகப் பரிசளித்துக் கௌரவித்தனர்.

இவ்விழாவுக்குத் தலைமை தாங்கிப் பரிசளித்தவர் மத்திய சர்க்கார் அமைச்சர் ராஜபகதூர்.

15—7—66 அன்று நேரு ஸ்டேடியத்தில் நடைபெற்ற இவ்விழாவின் தொடக்கத்திலேயே மழை வந்து தன் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்ள முயன்று கூட்டத்தில் 'சலசலப்பை'யும் விழாவுக்கு ஒரு 'கலகலப்பை'யும் ஏற்படுத்தி விட்டது. இதன் காரணமாக ஹாலில் கூட்டம் பொங்கி வழிந்தது. நடிக, நடிகையர்களைப் பார்க்க வேண்டும் என்னும் ஆர்வத்தில் ரசிகப் பெருமக்கள் நெருக்கடியை உண்டாக்கவே போலீசாருக்கு வேலை அதிகரித்தது.

கடைசியாகப் பேசிய திரு எம். ஜி. ஆர். ''சினிமாக் கலையைப் பொறுத்தமட்டில் நடிகர்கள் மட்டும் முக்கியமானவர்கள் அல்ல. கதாசிரியர், டைரக்டர், எல்லோரும் சேர்ந்து உருவாக்குவதுதான் படம். சிறந்த நடிகன் என்கிற முத்திரை நிரந்தரமானதல்ல. யார் வேண்டுமானாலும் அந்த முத்திரையைப் பெறலாம். இவைகளை மனத்திற்கொண்டு கலைஞர்கள் அயராது உழைத்து முன்னணிக்கு வரப் பாடுபட வேண்டும்'' என்பன போன்ற நல்ல பல கருத்துக்களை ஆணித்தரமாக எடுத்துச் சொன்னார்.



# Zam-Buk

## ஜாம்-பக் சிறந்த மூலிகைக் களிம்பு






ஜாம்-பக், பாரதத்தின் உன்னதமான
மூலிகைக் களிம்பு. விரைவாகவும்,
பத்திரமாயும் குணப்படுத்த உதவுகிறது.

**காயங்களுக்கு**



**தீப்புண்களுக்கு**



**முகப் பருக்களுக்கு**



*சென்னை ராஜ்ய டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:*

மோதி & கம்பெனி, 214, கோவிந்தப்ப நாய்க் தெரு, தபால் பெட்டி நெ. 1902, சென்னை-1



# கல்யாண விருந்து

மகரம்

முகூர்த்தத்தின் போதும், ஊஞ்சல், மாலை மாற்றல், நலங்குகளின் போதும் நாதசுர வெள்ளத்தில் கூடியிருப்பவர் திக்குமுக்காடித் திளைப்பார்கள். ஆனால் விருந்துப் பிரியர்களோவென்றால் கல்யாணச் சாப்பாட்டை நிர்வகிக்க எந்த 'ஸெட்' வந்திருக்கிறது என்பதைக் கண்டு பிடிப்பதிலேயே முழுமூச்சோடு ஈடுபடுவார்கள்! ''இலையூர் ஏகாம்பரம் கோஷ்டியையா அமர்த்தியிருக்கிறார்கள்? டிலக்ஸ் எக்ஸ்பிரஸ் ட்ரெயின் வேகத்திலல்லவா அவர்கள் பரிமாறுவார்கள்? இவர்களைவிடத் தொன்னையூர் துரைசாமி கோஷ்டியை ஏற்பாடு செய்திருக்கலாமே!'' என்று அபிப்பிராயம் வழங்கத் தயங்க மாட்டார்கள்.

கல்யாணச் சாப்பாட்டில் முதல் பந்திச் சாப்பாட்டுக்கும் மூன்றாவது பந்திச் சாப்பாட்டுக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் என்பர் அனுபவசாலிகள். முதல் பந்தியில் பரிமாறப்படும் அத்தனை 'அயிட்டங்'களும் இரண்டாவது மூன்றாவது பந்திவரை நிரவப்படும் என்று சொல்லமுடியாது. முதல் பந்தியில் உருளைக்கிழங்குக் கறி இருந்த இடத்தில் இரண்டாவது பந்தியில் வள்ளிக் கிழங்குக் கறியும், மூன்றாவது பந்தியில் வாழைக்காய்க் கறியும் பரிமாறப்படலாம்! முதல் பந்தியில் சாப்பிட்டுவிட்டு 'ஹாய்'யாக வெற்றிலை பாக்குப் புகையிலைக் குழம்பைக் குதப்பிக் கொண்டிருக்கும் ஒருவர் இரண்டாவது பந்தியிலிருந்து எழுந்து வரும் நண்பரைப் பார்த்து, ''ஓய்! பாதாம்கீர் எப்படி? ஒண்ணாங் கிளாஸ் இல்லே!'' என்னும்போது இரண்டாவது பந்தியாளர், ''பாதாம்கீரா? பந்திக்கு வரவேயில்லையே!'' என்று பரிதாபமாகப் பதில் இறுக்கும் கட்டங்களும் உண்டு.

இந்த முதல் பந்தியின் முக்கியத்துவம் பற்றிக் கதை ஒன்றுண்டு. முதல் பந்தியில் இடத்துக்கு முண்டியடித்து முயன்றும் முறியடிக்கப்பட்ட ஒரு சாப்பாட்டுராமர், இரண்டாவது பந்திக்கு சீனியாரிட்டி உரிமை கொண்டாடி எப்படியோ நுழைந்து சாப்பிட்டும் விட்டார். கிணற்றடியில் க்யூவில் நின்று கை கழுவுவதைவிடத் தெருக்கோடித் தடாகத்துக்கே சென்றுவிடலாம் என்று தோன்றவே, தடாகத்தின் படிகளில் இறங்கி முழங்கால் மட்டுத் தண்ணீரில் நின்றவாறே கையைத் தண்ணீருக்குள் விட்டுத் துழாவினார். துழாவிய அவர் துழாவினார், துழாவினார், துழாவிக் கொண்டே யிருந்தார்! காரணம் அவர் கையில் பெரிதாக வண்ணாஞ்சால் போன்ற ஒரு வஸ்து தட்டுப்பட்டுக் கொண்டே யிருந்தது. ''ஆகா! முதல் பந்தியில் அமர்ந்து மூக்கு முட்டச் சாப்பிடக் கொடுத்து வைத்த அதிர்ஷ்டசாலியின் வயிறல்லவா இது!'' என்று ஆறிப் பறந்தவாறே உருவில் சிறிய தம் வயிறையும் பார்த்து ஏங்கினாராம்!

''அப்படித் தடாகத் தண்ணீருக்குள் தலைமறைவாகவும் வயிறு நிறைவாகவும் இருந்தவர் முதல் பந்தி வீரர் இல்லை; ஒரு சர்வ சாதாரண எருமை மாடுதான்'' என்று சொல்லிக் கதையை முடிப்பார்கள். அந்தக் காலத்து சஸ்பென்ஸ் கதை மன்னர்கள்!

சங்கோசிகள் கல்யாண ரிஸப்ஷனுக்குச் செல்வதாக இருந்தால் விருந்துச் சாப்பாட்டை இருந்து அனுபவிப்பதை மறந்து விட வேண்டியதுதான். கல்யாண மாப்பிள்ளைக்கோ, கல்யாணப் பெண்ணின் தகப்பனுக்கோ அவர் மிகவும் வேண்டியவராக இருந்தாலும் அகாலத்தில் வீடு திரும்பிக் கல்யாண வீட்டில் சாப்பிடாமல் வந்த அவலத்தை மனைவியிடம் சொல்ல வெட்கப்பட்டுப் பட்டினியாகப் படுத்துக் கொள்ள வேண்டியதுதான்! இல்லை, பாதி ராத்திரியில் அடுப்படியை உருட்ட வேண்டியதுதான்! முதல் பந்தி எப்போது தயாராகும் என்பது மூக்கில் வேர்க்கும் விருந்தாளிகள் நடுவில் எப்போதும் பின் தங்கிய வகுப்பினர் இந்த சங்கோசிகள்!

இந்தப் பந்திக்கு முந்தும் பந்துக்கள் ஓசைப்படாமல் நழுவி முதல் பந்தியில் இடம் பிடிக்கும் அழகே தனி. ரிஸப்ஷன் கச்சேரி செய்யும் வித்வான் தோடி ராகத்தை ஆலாபனம் செய்யத் தொடங்கியிருப்பார். முதல் பந்தி நபரிடம் அவருடைய வேறொரு நண்பர் வந்து, ''டேய் கண்டு! சாப்பிடப் போகச்சே என்னையும் கூப்பிடடா!'' என்பார். ''தோடின்னா நூறு மைலானாலும் ஓடிப் போய்க் கேட்பேன். செவிக்குணவில்லாத போதுதானே வயிற்றுக்கு ஈய வேண்டும்'' என்று குறள் காட்டிய வழியில் அவர் நிற்பதைக் கண்டு நண்பர் கல்யாணத்துக்கு வந்துள்ளவர்களைப் பராக்குப் பார்க்கக் கிளம்பி விடுவார். பாடகர் தோடியை விஸ்தாரமாக ஆலாபனம் செய்து ஐயர்வாள் கீர்த்தனை ஒன்றை அற்புதமாகப் பாடி முடித்ததும் தோடி நண்பர் இருந்த இடத்தைத்



தேடிப் போய் அவர் காணுததைக் கண்டு தவிப்பார். ஒன்றிரண்டு நிமிஷங்களில் மேல் துண்டில் கையைத் துடைத்தவாறே நண்பர் சாப்பாட்டுப் பகுதியிலிருந்து வருவதைக் கண்டு திடுக்கிடுவார்.

வேறு சிலர் எவ்வளவு பலவந்தப்படுத்தினுலும் கல்யாண விருந்தில் கலந்துகொள்ள மாட்டார்கள். 'நான் வெளியில் சாப்பிடுவதில்லை' என்பார் ஓர் ஆசார சீலர். ''டாக்டர் உத்தரவு'' என்பார் ஒரு டயாபிடீஸ் காரர். ''மனைவி கோபித்துக்கொள்ளுவாள். சாப்பிட வீட்டுக்குப் போயாக வேண்டும்'' என்பார் மனைவி கிழித்த கோட்டைத் தாண்டாத ஒரு 'கோழி கொத்திய கொழுனன்!' ''இன்னொரு கல்யாணத்துக்குப் போக வேண்டும். அங்கே சாப்பிடாவிட்டால் விட மாட்டார்கள்'' என்று சற்று ரஸக் குறைவாகச் சொல்லிவிட்டுப் போகிறவர்களும் உண்டு.

அப்படிச் சென்றவரில் ஒருவர், அந்த இன்னொரு வீட்டில் சரியாகச் சாப்பிடச் சொல்லாத காரணத்தால் சாப்பிடாமல் வீடு திரும்பியதும், முதல் கல்யாண வீட்டார் தன்னைச் சாப்பிடும்படி சரியாக உபசரிக்கவில்லை என்று அவர்களைப் பாவம், அநாவசியமாகக் குறை கூறிக் கொண்டிருப்பதும் எனக்குத் தெரியும்.

இந்தத் தாழ்வு மனப் பிராந்தியாளர்களும் கல்யாணப் பந்திக்கு லாயக்கில்லாதவர்கள்! ''நாம் மண மக்களுக்கு யாதொரு பரிசும் கொடுக்காமல், கைவீசம்மா கைவீசு!'' என்று பந்தலுக்குள் நுழைந்ததனுல்தான் நம்மைச் சாப்பிட யாரும் கூப்பிடவில்லையே' என்று சங்கடப்படுவார்கள்.

ஒரு சமயம் கல்யாணப் பந்தியில் எப்படியோ தலைவாழை இலைகளுக்கு நடுவில் ஓர் இரட்டை மட்டை இலையும் கலந்திருந்தது. அந்த இலை எனக்கு வந்து சேர்ந்தது! தாழ்வு மனப்பிராந்தியாளர் யாருக்காவது அப்படி நேர்ந்திருந்தால் 'நூறு பேர்களுக்குத் தலைவாழை இலையைப் போட்டுவிட்டு எனக்கு மாத்திரம் மட்டை இலை போட்டு மட்டம் தட்டியது ஏனோ?' என்று சங்கட சாகரத்தில் மூழ்கிவிடுவார்கள். இவர்களுக்கு அந்த நிமிஷம் முதல் தங்களுக்குப் பிரத்தியேகமாக அநீதி இழைக்கப்படுவது போலத் தோன்றிக் கொண்டேயிருக்கும். இவர்கள் இலையில் வைக்கப்பட்ட லட்டோ மைசூர்ப் பாகோ மற்றவர்களுக்குக் கிடைத்ததைவிடச் சின்னதாகவே படும். போதும் போதாததற்கு இவர்களுக்குப் போடப்பட்ட தொன்னை வேறு கிழிசலாக அமையும்!

இவ்வாறெல்லாம் விநோதமும் வேடிக்கையுமாக நடைபெறும் கல்யாண விருந்து களைப் பற்றி இனி கட்டுரை எழுதிப் படித்து ஆனந்திப்பதுடன் திருப்தி அடைய வேண்டியதுதான். இந்த ரேஷன் காலத்தில் யார் கல்யாண விருந்துக்கு அழைக்கிறார்கள்?

முகூர்த்தம்கூடக் குறிப்பிடாமல் 'மாலை ஐந்து மணி முதல் ஏழரை மணி வரை நடக்கும் ரிஸப்ஷனுக்கு வந்து போகவும்' என்பதாக அழைப்பிதழ் அனுப்பி வைத்து ஒரு கிளாஸ் எலுமிச்சம்பழ சர்பத் கொடுப்பதுடன் தப்பித்துக் கொள்ளுகிறார்களே!

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆




## ஒரு புளியமரத்தின் கதை

ஒரு குறிப்பிட்ட பிராந்தியத் தமிழைத் தங்கள் சிருஷ்டிகளில் உயிர்த் துடிப்புடன் பிரயோகித்து வெற்றி கண்டுள்ளனர் சிலர். 'ஒரு புளியமரத்தின் கதை' என்ற நாவலில் திரு சுந்தர ராமசாமி குமரி மாவட்டத் தமிழின் வேகத்தையும், வனப்பையும் கையாண்டு அமோக வெற்றி ஈட்டியுள்ளார். 35 வயதில் முடித்த நாவலின் பாணி, வளர்ச்சி, நிறைவு ஆகியவற்றைவிட 28 வயதில் அவர் தொடங்கிய நாவலின் அழகும், வீரியமும், உஷ்ணமும், பாத்திரப் படைப்பின் அழுத்தமும் மிகத் தீர்க்கமாக அமைந்துள்ளன. முதற் பகுதியிலேயே நாவலின் உச்ச கட்டம் கொதுவேறி விடுகிறது. புளிய மரத்தை வெட்டிச் சாய்க்க கொப்பளான் கோடாலியை உயர்த்திய கணத்தில் தாமோதர ஆசான் தோன்றி உரையாடும் காட்சி — நாடக பாணி, சொற்களின் கூத்தொடுப்பு, மொழியின் துடிப்பு முதலியவற்றால், வாசகனின் குருதியை உறைய வைக்கிறது. கண் முன்னர் அந்தச் சூழலும் காட்சியின் ஆன்மாவும் அசைகின்றன. அதுவே உச்சகட்டம்.

பிற்பகுதியில் தாமோதர ஆசானின் ஞானக் கனவுகளையும் யதார்த்த ரீதியான ஜீவியத்தின் கோட்பாடுகளையும் காவிய ரசம் ததும்ப வர்ணிக்கப் போகிறார் என்று ஏக்கம் மீதூறக் காத்துக் கிடக்கும் நமக்கு ஆசானின் தலைமறைவு அதிர்ச்சியைத் தருகிறது. ஒரு மாயக் கன்னியின் ரத்த வெறி மிகுந்த சுவாசம் போல் செல்லாயியின் சோகக் கதை நெஞ்சைப் பிழிகிறது.

பி. எஸ். சுப்பையா, பரப்பாடி.

---

பிரசுரம்: தமிழ்ப் புத்தக நிலையம், திருவல்லிக்கேணி, சென்னை—5.

சென்னை திருவல்லிக்கேணி தொகுதி சுதந்திரக் கட்சி செயலாளரும், ராம் சாய் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் பாகஸ்தருமான திரு கே. எஸ். நரசிம்மராகவன் அவர்களின் சகோதரர் திரு கே. எஸ். வேங்கடராகவன் அவர்களுக்கும் சௌபாக்கியவதி கமலாவுக்கும் 11-7-66 அன்று சென்னையில் வெகு விமரிசையாக விவாஹம் நடைபெற்றது. சென்னை மேயர் உள்ளிட்ட கட்சிப் பிரமுகர்களும் வியாபாரிகளும் திருமணத்துக்குத் திரளாக வந்து மணமக்களை ஆசீர்வதித்தனர்.




கார் பாலுவை மோதித் தள்ளி விட்டு மறைந்த பிறகு சிங்காரம் அருகிலிருந்த டெலிபோன் பூத்துக்கு ஓடினான்.
ரொம்ப அவசரம். உடனே ஆம்புலன்ஸ் வண்டியை அனுப்பி வைக்கவும்...


அன்றிரவின் கடைசி ஜாமத்தில் ஆஸ்பத்திரியில்
எதையும் இப்போது சொல்வதற்கில்லை. உங்கள் நண்பர் இன்னும் நினைவு திரும்பாமலேயே...


பாலு படுகாயமடைந்தது போலீஸ் இலாகாவிலுள்ள எல்லோருக்கும் அதிர்ச்சியையும் ஆவேசத்தையும் கொடுத்தது. எல்லோரும் முழுமூச்சுடன் வேட்டையில் ஈடுபட்டனர். இரண்டாவது இரவு...
ஒரு கார் சொந்தக்காரர் பேசுகிறார்...


எப்படியும் இன்று அந்தக் கூட்டத்தைப் பிடித்து விட வேண்டும். டெலிபோன் தகவல்படி அந்தக் கார் இதற்குள் வெகுதூரம் போயிருக்க முடியாது....


சிங்காரத்தின் நம்பிக்கை வீண் போகவில்லை...
ஆஹா! அதோ... அதுவேதான்! திருட்டுப்பட்ட காரின் எந்திரம் ஓடிக்கொண்டிருக்கிறதே! உள்ளே ஆள் இருக்கிறார்களா? யாரோ வரவை எதிர்பார்த்து, அவர்கள் வந்ததும் கிளம்பத் தயாராகக் காரை ஸ்டார்ட் செய்து வைத்துக்கொண்டு காத்திருக்கிறான் பயல்!


சிங்காரம் சட்டென்று ஒரு முடிவுக்கு வந்தான்.
என்னப்பா, மத்தவங்களெல்லாம் எங்கே? போன காரியம் எப்படி?
காரியம் சக்சஸ்! அவங்களெல்லாம் பின்னாலே வந்துட்டிருக்காங்க.


என் பாலுவைப் படுகாயப் படுத்திய பயலே!...
வாங்கிக் கொள்..



# யாத்திரை

ஏ.எஸ்.ராகவன்

நாணா புறப்பட்டுச் சென்ற பிறகும் கமலா போனை விட்டு நகராமல் அதன் கிழேயே காத்துக் கிடந்தாள். இரண்டு மணி நேரம் ஆகியும் ஜெகுவைப் பற்றிய தகவல் எதுவும் நாணாவிடமிருந்து வராததால் பயம் பற்றிக் கொண்டது அவளை. ஆபத்து நாணாவையும் துணைக்கு அழைத்துக் கொண்டதோ என்ற பதறலானாள்.

நல்ல வேளையாக போன் ஒலித்தது. ஆவலோடு எடுத்தாள். நாணா பேசுவதற்குப் பதிலாக லட்சுமி அம்மாள் பேசினாள். பேசவில்லை, விசாரித்தாள். ''ஏம்மா கமலா. குழந்தை அங்கே வந்தானா ?''

கமலாவின் பயம் பீதியாகி விட்டது. ''நாணா அங்கேயும் வரவில்லையா, அத்தை ?'' என்றாள்.

''இல்லையம்மா. மத்தியானம் சாப்பிடக்கூட இல்லை அவன். ஜெகுவோடு புறப்பட்டுப் போனவன்தான், ஒரு தகவலும் இல்லை. போலீஸ் வேறே இதோடு இரண்டு தடவை தேடி விட்டுப் போய் விட்டது.'' லட்சுமி அம்மாள் மிகுந்த கவலையோடு செய்தியை விவரித்தாள்.

போலீஸ் தேடுவானேன்? கமலா நடுநடுங்கியே விட்டாள். ''அத்தை, எனக்கு ஒன்றுமே புரியவில்லையே !'' என்றாள்.

''பயப்படாதே. அவனைத் தாயார் காப்பாற்றுவாள்'' என்று தைரியம் சொன்னாள் லட்சுமி அம்மாள்.

''இரண்டு மணி நேரத்துக்கு முன்னாலே நாணா இங்கே வந்திருந்தான் அத்தை. பாருக்குட்டியின் வீட்டுக்குப் போனான். நான்தான் அனுப்பினேன் அவனை. அத்தை, நானே ஆபத்தில் சிக்க வைத்து விட்டேனா அவனை !''

''அசடே, ஆபத்து எதுவும் அவனுக்கு வராது....ஜெகு பட்டணம் போகப் போவதாகக் கொஞ்ச நேரத்துக்கு முன்னாலே போன் செய்தான். ஒருவேளை அவனை வழி அனுப்பக் குழந்தையும் போயிருக்கிறானோ, என்னவோ !''

''பட்டணத்திலே என்ன ஜோலியாம்?'' என்று கேட்டாள் கமலா. ஜெகு லட்சுமி அம்மாளிடம் தனது பயத்தின் நோக்கத்தைச் சொல்லியிருந்தால் சற்றே தைரியம் அடையலாமல்லவா என்கிற எண்ணத்தில்.

லட்சுமி அம்மாளோ சிரித்தாள். ''ஜோலி வேறே வேண்டுமோ அவனுக்கு? ஜாலி தான் '' என்றாள்.

அந்தச் சிரிப்பு கமலாவை வதைத்தது. எனினும் அதுவே ஆபத்து எதுவுமில்லை என்று உணர்த்துவது போலவும் இருந்தது. இல்லாவிட்டால் அவ்வளவு விச்ராந்தியாக லட்சுமி அம்மாள் சிரிப்பாளா !

''அத்தை, யாரையாவது அனுப்பி நாணாவையும் ஜெகுவையும் தேடச் சொல்லுங்கள். அவசரம், அத்தை.''

எதிர்ப்புறம் பதில் இல்லை. லட்சுமி அம்மாள் போனை வைத்து விட்டாள் என்பது தெரிந்தது. ஆனாலும் கமலா வைக்காமல் பைத்தியம் பிடித்தவள் போல் உட்கார்ந்திருந்தாள். பேச வேண்டியவை நிறைய இருந்தன போலத் தோன்றிற்று. பேசா விட்டால் தீரவும் தீராது. ''ஜெகு, நீங்கள் எங்கே இருக்கிறீர்கள்? எங்கே

போய் விட்டீர்கள்? கமலா உங்களுக்காகத் தவிப்பது தெரியவில்லையா? ஐயோ, ஜெகு, உங்களுக்கு வெறுத்ததெல்லாம் பாலாயிற்றே. பாருக்குட்டி கோஷ்டியோடு ஏன் சேர்ந்தீர்கள்? யாரை நம்புவது, யாரை நம்பக் கூடாது என்பதே தெரியவில்லையே உங்களுக்கு?'' என்று அவள் புலம்பிக் கொண்டே கிடந்தாள்.

போன் கனத்தது. நெஞ்சு கனத்தது. கமலா எழுந்து ஜன்னலருகே போய் நின்றாள். தெருவை அர்த்தமின்றிப் பார்த்தாள். திடீரென்று அங்கே அவள் எதிரே ஜெகு வந்து நிற்க மாட்டானா? நின்றால் அவனை ஓர் அறைக்குள் தள்ளிப் பூட்டி விட்டுத்தான் வேறு வேலை பார்ப்பாள். அவன் காலுக்கு விலங்கு போடுவாள். வாய்க்குப் பூட்டுப் போடுவாள். கமலாவை விட்டு இனிமேல் எங்கும் அவன் போகக் கூடாது; போகவே கூடாது.

அவள் பொறுமைக்காரிதான். எந்த அன்பும் முழுதாகத் தனக்கே வேண்டுமென்று நினைப்பவள்தான். அதைப் பகிர்ந்து கொடுக்க அவளால் முடியாது.

மீண்டும் போன் ஒலித்தது. இம்முறையாவது நாணு பேசுவானென்று ஓடி வந்தாள் கமலா. 'ஜெகுவைக் கண்டு பிடித்துவிட்டேன். அவன் பட்டணம் போகவில்லை' என்று சொல்ல மாட்டானா? ஆனால் லட்சுமி அம்மாள்தான் பேசினாள். பேசவில்லை, அழுதாள். ''அடியம்மா, உன் சந்தேகம் நிஜமாகப் போயிற்றடி. நாணு மேலே போலீசுக்குச் சந்தேகமாம். அவனைப் பிடித்து ஜெயிலிலே போட்டு விடுவார்களாம். ஏண்டியம்மா, தப்புக் காரியத்துக்கெல்லாம் போகிறவனா குழந்தை? நீயே சொல்லு!''

கமலா திகைத்து விட்டாள். நாணுவைச் சிறையில் தள்ளுவார்களா? ஏன்?

''நாயர் கதை கதையாகச் சொல்கிறார்'' என்றாள் லட்சுமி அம்மாள்.

அந்தக் கதைகளையெல்லாம் கேட்கக் கமலாவுக்குப் பொறுமை இல்லை. அதற்கு நேரமும் இல்லை. 'ப்ளூமவுண்டன் எக்ஸ்பிரஸ்'ல் ஜெகுவைப் பட்டணம் போகாமல் நிறுத்திவிட வேண்டும் என்பதே இப்போது அவளுடைய கவலை எல்லாம். ''அத்தை, நேரத்தை வீணாக்காமல் யாரையாவது அனுப்பி அவர்களைத் தேடச் சொல்லுங்களேன். ரயிலுக்கு நேரம் ஆகிவிட்டதே!'' என்று கூறினாள்.




''ரயிலுக்கா? நீ என்னடியம்மா சொல்றே?''

''ஆமாம், அத்தை. ப்ளூமவுண்டனில்தான் புறப்படுவதாக ஃபோன் வந்தது.''

ஜெகு புறப்படும் வண்டியைக் கமலா சொல்லவே, நாணுதான் அந்த வண்டியில் புறப்படுகிறான் போலுமென்று லட்சுமி அம்மாள் எண்ணிக் கொண்டுவிட்டாள். போலீசுக்குப் பயந்து அவன் ஊரைவிட்டே ஓடுவதாகத் தோன்றிற்று அவளுக்கு. ஓடிப் போகிற அளவுக்கு விஷயம் வளர்ந்து விட்டதா என்கிற கவலையோடு, ''எனக்கு எதுவும் புரியவில்லை, கமலா.... நான் என்னடம்மா, செய்வேன்? இந்த நேரம் பார்த்து மாமாவும் வீட்டில் இல்லை. யாரோ ஒரு புலவர் வந்தாரென்று புறப்பட்டுப் போனார். இலக்கிய விசாரம் என்றால் அவருக்கு நாள்கணக்குக்கூடத் தெரியாது. யாரை அனுப்பி எங்கே தேடச் சொல்வது?'' என்றாள்.

கமலா பறந்தாள். ''அவசரம், அத்தை. ரயிலுக்கு நேரம் ஆகிவிட்டது.''

''பார்த்தாயா, என் புத்தி மழுங்கித்தான் விட்டது, கமலா. குழந்தையோட அப்பா இங்கேதான் இருக்கிறார். அவரை அனுப்புகிறேன். நீ கவலைப்படாதே.''

போனை வைத்து விட்டாள் லட்சுமி அம்மாள். எதிரே சுந்தரமே நிற்பதைக் கண்டதும் அவளுக்கு அழுகையே



''சிப் ஜட்ஜ் வீட்டிலே நம்ப முனியம்மா கண்டெடுத்த வைர மோதிரத்தை, விலைக்குத் தருகிறேன் என்கிறாள். விலை இருநூறு ரூபாதான் சொல்கிறாள். வாங்கலாமா, பாருங்கள்!''

வந்து விட்டது. இவ்வளவு நேரமும் அங்கேயே நின்று அவள் பேசியதை யெல்லாம் அவர் கேட்டுக் கொண்டுதான் இருந்தாரா!

''இதையெல்லாம் என்னிடம் ஏன் அம்மா நீங்கள் சொல்ல வில்லை?'' என்று கேட்டார்.

''எனக்கே இப்போதுதான் தெரியும்'' என்று மூக்கைச் சிந்தினாள் அவள். ''என் நெஞ்சு பதைக்கிறது! உடனே போங்களேன். போய்க் குழந்தையை அழைத்து வாருங்கள். அவன் ஊரை விட்டே ஓடிவிட முடிவு செய்து விட்டான். ஏண்டா குழந்தை. நானெல்லாம் உனக்கு வேண்டாதவளாகி விட்டேனா? ஒரு வார்த்தை என்னிடம் சொல்லி விட்டுப் போகக் கூடாதா?.... சௌந்தரவல்லித் தாயாரே, குழந்தையை என்ன செய்யப் போகிறாயம்மா?'' என்று புலம்பினாள்.

சுந்தரத்துக்கு இறக்கை முளைத்துவிட்டாற் போலிருந்தது. ஒரே பாய்ச்சலில் வாசலுக்கு வந்தார். ரயில் நிலையத்தை நோக்கி ஓடினார். மூச்சு நின்றுவிடும் போலிருந்தது. நெஞ்சு அப்படிப் படபடத்தது. நாணு ஊரை விட்டே ஓடுகிறான்! அவனா ஓடுகிறான்? அவருடைய நிழல் அல்லவா அவனை விரட்டுகிறது? இந்தத் தடவையாவது அவனைக் காணலாமென்று ஆசைப்பட்டாரல்லவா, அதற்கு விதி அவரை நன்றாகத் தண்டிக்கிறது. விதியை ஏமாற்ற முடியுமா அவரால்? இரண்டு தடவை வந்தும் அவனைக் காண முடியாமற் போயிற்றே. மூன்றாவது முறை அவர் வரலாமா? வரக் கூடாது என்பதல்லவா முன் இரண்டு முறைகள் மூலம் விதி விடுத்த எச்சரிக்கை?

சுந்தரம் ரயில் நிலையத்தை அடைந்த போது, வண்டி பிளாட்பாரத்துக்குள் நுழைந்து கொண்டிருந்தது.

லட்சுமி அம்மாளிடம் பேசிய பிறகு கமலாவுக்கு இருப்புக் கொள்ளவில்லை. ஜெகுவைக் காப்பாற்ற அவளேதான் போயாக வேண்டுமென்று தோன்றிற்று. நாணுவால் சாதிக்க முடியாததை யெல்லாம் அவனுடைய தந்தை முடித்து வைப்பார் என்று நம்பலாமா? எனவே, அவளும் புறப்பட்டு விட்டாள்.

நாணு, கமலா, சுந்தரம் மூவரும் ரயில் நிலையத்துக்கு ஓரிரு நிமிடங்கள் முன் பின்னாகப் போய்ச் சேர்ந்தார்கள். நாணு பரிசோதகரால் நிறுத்தி வைக்கப்பட்டு விட்டான். கமலா ஜெகுவைத் தேடுவதில் ஈடுபட்டிருந்ததால் சுந்தரத்தைக் கவனிக்கவில்லை. சுந்தரமோ தமது மகனின் உருவை, தமது நெஞ்சின் ஓவியத்தை எங்கு காண்பதென்று புரியாமல் ஓடி வந்தார். பிளாட்பாரத்தில் ரோஹிணியும் பாருக்குட்டியும் நிற்பது தெரிந்ததும் அவருக்குத் தெம்பு உண்டாயிற்று. அவர்களை நோக்கிச் சென்ற சமயம் குஞ்சுராமன் வண்டியிலிருந்து இறங்கினான்.

''அதோ.... குஞ்சு!.... வந்து விட்டீர்களா, குஞ்சு? எங்கே போயிருந்தீர்கள்? ஏன் என்னிடம் சொல்லவே இல்லை?.... உக்கும்'' என்று கொஞ்சினாள் பாருக்குட்டி.

குஞ்சுராமனுக்கே அவளுடைய பரிவு நிறைவைத் தந்ததோ, என்னவோ, அவன் விழித்தான்.

''என்ன அப்படிப் பார்க்கிறீர்கள் குஞ்சு? இது யார் என்று தெரியவில்லையா?...நாராயணனுடை அப்பா!'' என்றாள் அவள் சுந்தரத்தைக் காட்டி.

குஞ்சுராமன் சுற்றுமுற்றும் பார்த்தான். அவனுடைய முகம் கறுத்தது. உடல் பதறி விட்டது. போலீஸ் படை தன்னை அணுகுவதைக் கண்டதும் தன் கையிலிருந்த பெட்டியைச் சுந்தரத்திடம் நீட்டியவாறே, ''இதைக் கொஞ்சம் பிடியுங்கள்.... வண்டியிலே என் மேல் துண்டு விட்டுப் போச்சு'' என்று கூறினான்.

ஒரு சூதும் அறியாமல் சுந்தரம் அதைக் கையில் வாங்கினார். பாருக்குட்டியின் கணவனுக்கு ஏதோ இந்தச் சிறு உதவியாவது செய்ய முடிந்ததே என்கிற மகிழ்ச்சி அவருக்கு.

''ஜெகுவை எங்கே காணோம், ரோஹிணி? சிகரெட் பிடிக்கப் போனவரைக் காணவே இல்லையே?'' என்று விசாரித்தாள் பாருக்குட்டி.

''அதோ, அங்கே நிக்கறரு. வாம்மா, நாம முன்னாடி போகலாம். குஞ்சு அப்புறம் வருவாரு'' என்று கூறியவாறே ரோஹிணி நடந்தாள்.

போலீஸ் படை சுந்தரத்தை வளைத்துக் கொண்டு விட்டது. வண்டிக்குள் தாவி மறு பக்கமாக ஓட முயன்ற குஞ்சுராமனையும் பிடித்து விட்டது. பெட்டியில் பதுக்கப்பட்ட தங்கக் கட்டிகள் இருந்தன. இருவர் கைகளிலும் விலங்கைப் பூட்டினார்கள். இன்ஸ்பெக்டர் வயதானவர். சுந்தரத்தை அடையாளம் கண்டு கொண்டார் அவர். ''எத்தனை நாட்களாய் இந்தப் பிஸினஸ்? நீ மாஜி

கைதி இல்லே? உன் பெயர் சுந்தரம் இல்லே?'' என்று தடியைச் சுழற்றினர்.

சுந்தரம் பதில் சொல்லவில்லே. உண்மை யில் அவர் காதில் எதுவும் விழவில்லே. அவருடைய பார்வையில் எதுவும் பட வில்லே. ஒரு பிரமை அவரைப் பற்றிக் கொண்டு விட்டது. எல்லேயற்ற சோகம் நெஞ்சில் பாய்ந்து விட்டது. மகனேக் காப் பாற்றவா வந்தார்! இப்போது அவரை யார் காப்பாற்றுவார்கள்? அவர் கண்கள் குத்திட்டு நின்றன. கண்ணீர் பெருகிற்று.

அவரையும் குஞ்சராமனேயும் அழைத்துக் கொண்டு போலீஸ் படை நடந்த போது தான் கமலா எதிரே வந்தாள். நாணுவின் தந்தைதான் அவர் என்பது தெரிந்ததும் சிலேயாகி விட்டாள். அவர் அவளேப் பார்த்தார். ஊஹூம். பார்க்கவில்லே. அவர் கண்கள்தாம் பார்வையை இழந்து விட்டனவே!

''மகனே, உன்னே நான் பார்க்கவே கூடாது என்பது தெய்வ சங்கல்பம். அதை மீறி உன்னேக் காண முடியும் என்று ஆசைப் பட்டதன் பலன் கை மேல் கிடைத்துவிட் டது. உன் உருவத்தை என் நெஞ்சில் எழுதி எழுதிப் பார்த்ததோடு என் கனவு முடிந்து விட்டது. உன்னேச் சீராட்ட நான் கொடுத்து வைக்கவில்லே. லட்சுமி அம்மாள் வர்ணிக்கிற உன் அழகைக் காண என் கண்களுக்குப் பாக்கியம் இல்லே. அழகாகப் பேசுகிருயாமே, உன் குரலேக் கேட்க என் காதுகள் புண்ணியம் செய்யவில்லே. நான் உனக்கு எந்தத் தகுதியில் தந்தையாவே னடா, மகனே? சுந்தரிதான் உனக்குத் தாயும் தந்தையுமாக இருந்தாள். பத்ம நாபன் உன்னேக் காப்பாற்றிய தந்தை. விசுவநாதன் உனக்கு ஞானத் தந்தை. நான் ஊனத் தந்தையடா, மகனே.

''உன்னேப் பார்க்காமலேயே போகிறேன். பார்க்கவும் கூடாது நான். என் நிழல் உன் மீது படக் கூடாது. என் வாழ்வின் யாத் திரை இத்துடன் முடிந்து விடும். நல்ல வேளே, உன்னே அந்த யாத்திரையில் வரவிட வில்லே. மகனே, உன்னிடம் ஒன்றை மட்டும் சொல்ல வேண்டுமப்பா. குஞ்சராமன் கொடுத்த பெட்டியில் தங்கக் கட்டிகள் இருந்தன அல்லவா, இதே போல் விதி பல முறை என் கையில் வஞ்சனேகளேக் கொடுத்து என்னேச் சிறையில் தள்ளிற்று.

''ஊஹூம். சிறை வாழ்வு என்று கேவல மாக என்னே ஏசுவார்கள். மகனே, பார்க்கப் போனல் வாழ்வே ஒரு சிறைதானேப்பா?

''உனக்கு என் ஆசிகள். நீ சிறப்போடு வாழ்வாய்.

''அழாதே. மகனே. எனக்காக யாரும் அழக் கூடாது. பாருக்குட்டி மாதிரி நீயும் சிரிக்கப் பழகிக் கொள்.

''சிரிப்பாயல்லவா?..... சி...ரி...ப்...பா... ய...ல்...ல...வா.....?''

போலீஸ் ஜீப், ஸ்டேஷனே அடைந்த போது சுந்தரத்தின் வெற்றுடலேத்தான் இறக் கினர்கள். வழியிலேயே அவருடைய ஆவி பிரிந்து விட்டது.

## கத்தி பிடிக்கும் கை



ரூபாயின் மதிப்புக் குறைப்பு என்பதை அறுவைச் சிகிச்சைக்கும் பயன்படுத்தும் கத்திக்கு ஒப்பிடலாம். நம்மைக் கடுமையான நோய் பிடித்திருக்கிறது. அறுவைச் சிகிச்சை செய்தால்தான் அது குண மாகும் என்ற நிலே. ஆனல் கத்தியைப் பிடிக்கிற கை யாருடையது என்பதையும் கவனிக்க வேண்டு மல்லவா? நல்ல, நம்பிக்கையான திறமையான டாக்டர் அறுவைச் சிகிச்சை செய்தால் கவலேயின்றி இருக்கலாம். கத்தியில் நல்லது கெட்டது ஏது மில்லே. ஆனல் டாக்டர் ஒரு போலியாக இருந் தாலோ......? இன்று நம் நாட்டின் பொருளாதார நிலேயை நிர்வகிப்பவர்கள் போலிப் பொருளாதார நிபுணர்களே. - எம். ஆர். மணாளி

---

ரயில் நிலேயத்தில் அவரைக் கண்டதும் சிலேயாகிவிட்ட கமலா பரபரப்புடன் ஜெகு வைத் தேடி அலேந்து விட்டு அவனேயும் காணுமல் வேகமாக லட்சுமி அம்மாளின் வீட்டை அடைந்தாள். செய்தி அறிந்ததும் லட்சுமி அம்மாள் பதறியவாறே வாசற் புறம் ஓடிய சமயம் விசுவநாதன் வந்தார்.

''ஆஹா! என்ன கவித்துவம்! என்ன கவித்துவம்! புலவர் என்ருல் இவரல்லவோ புலவர்! ஒரு வழியாகக் காவியம் முடிந்து விட்டது. லட்சுமி.... அடேடே, நீ ஏன் அழுகிருய்?''

''காவியம் முடிந்து விட்டதல்லவா? இங்கே எல்லாமே முடிந்து விட்டது!''

''என்ன நடந்தது. சொல்லேன்.''

அவள் சொன்னதும் அவர் ஓடினர் உள்ளே. போனே எடுத்துப் போலீசுடன் தொடர்பு கொண்ட. இச்சமயம்தான் நாணு வந்தான். வாசலிலேயே செய்தி கேட்டு மயக்கமுற்று விழுந்தான்.

ஃ ஃ ஃ

போலீஸ் படை குஞ்சராமனேச் சூழ்வ தைக் கண்ட ரோஹிணி அவசரமாகப் பாருக்குட்டியை அப்புறப்படுத்தி விட்டாள். ஜெகு பிளாட்பாரத்தின் கோடியில் நிற்ப தாக அவள் சொன்னதை அப்படியே நம்பி ஞள் பாருக்குட்டி. ஒதுக்குப்புறமாக நின்ற காலி வண்டி ஒன்றில் அவளும் பாருக்குட்டி யும் ஏறி அமர்ந்தார்கள். பாருக்குட்டிக்குச் சென்னேப் பயணம் மிகவும் வசதியாக அமைந்ததே என்கிற மகிழ்ச்சி. வண்டி முழுதுமே காலியாக அல்லவா இருந்தது! 'நான் இந்தப் பலகையிலே படுக்கிறேன். ரோஹிணிக்கு அது. குஞ்சுவுக்கும் ஜெகுவுக் கும் அந்தப்புறம் இருக்கிற பலகைகள்' என்று கணக்கிட்டு விட்டுப் படுத்தாள். படுத்ததும் தூங்கியும் போனுள். ரோஹிணிக்கு உள்ளூற அச்சம். பிளாட்பாரத்தில் நின்ருல் குஞ்ச ராமனேடு தங்களேயும் போலீஸ் அழைத்துப் போய் விடுமென்று. ஜெகுவும் வராததால்



"கல்யாணம் பண்ணிக் கொள்வதாக இருந்தால் என்னைத்தான் கல்யாணம் பண்ணிக் கொள்வேன் என்று பாவம் ரமேஷ் ஒற்றைக் காலில் நிற்கிறாரப்பா!"

---

கோபால் அவளை அழைத்துக் கொண்டு போய் விட்டானென்று ஊகித்தாள்.

பிளாட்பாரமே காலியானதும் பாருக் குட்டியை அழைத்துக் கொண்டு வெளியே வந்தாள் ரோஹிணி.

"என்ன இது, ரோஹிணி? நாம் பட்டணம் போகவில்லையா ? பட்டணத்திலே எக்ஸிபிஷன் நடக்கிறது. அதைப் பார்க்க வேண்டாமா?" என்றாள் பாருக்குட்டி கோபமாக.

"அதைவிடப் பெரிய எக்ஸிபிஷன் இங்கே நடக்குது, தாயே.... பேசாமல் வாம்மா" என்றாள் ரோஹிணி.

"எங்கே என்னை அழைத்துப் போகிறாய்? ரோஹிணி, உன் திருட்டுத்தனம் இப்போது தான் புரிகிறது.... கோபாலும் ஜெகுவும் எங்கே? சொல்லு.... குஞ்சுராமன் ஊரிலிருந்து திரும்பி வந்தாரே, எங்கே அவர்? சொல்லு......"

ரோஹிணி அதற்குமேல் அவளிடம் மறைக்க விரும்பாமல் நடந்ததை யெல்லாம் சொன்னாள். அவ்வளவுதான். பாருக்குட்டி அங்கேயே அழத் தொடங்கி விட்டாள். ஒரு வழியாக வண்டி வைத்துக் கொண்டு அவளை லட்சுமி அம்மாளின் வீட்டுக்குக் கொண்டு சேர்ப்பதற்குள் ரோஹிணியின் பாடு திண்டாட்டமாகி விட்டது. இருந்த வீட்டைக் காலி செய்து விட்டதால் இனி அங்கு செல்ல முடியாது. பாருக்குட்டியோ நாணுவைப் பார்த்தாக வேண்டும் என்றாள்.

சுந்தரம் இறந்து விட்டார் என்ற செய்தியைப் போலீஸ் நிலையத்திலிருந்து அறிந்தார் விசுவநாதன்.

"குழந்தைக்கு இன்னும் மயக்கம் தெளியவில்லையே !" என்று கையைப் பிசைந்தாள் லட்சுமி அம்மாள்.

பாருக்குட்டி ஓடோடி வந்து நாணுவை மடியின் மீது கிடத்திக் கொண்டாள். லட்சுமி அம்மாளைப் பார்த்து, "தண்ணீர் கொண்டு வாங்க" என்றாள். "ரோஹிணி, விசிறி எடுத்து வீசு" என்றாள். "கமலா, சோடா கொண்டு வா...." என்றாள். விசுவநாதனையும் அவள் விட்டு வைக்கவில்லை. "நீங்கள் ஏன் நிற்கிறீர்கள்? போய் போன் செய்யுங்கள். நாம் எல்லோரும் போலீஸ் ஸ்டேஷனுக்கு வரோம்னு...." என்றாள்.

நாணு கண் விழித்தான்.

"என்னைத் தெரிகிறதா?.... பாருங்கள், உங்கள் பாருக்குட்டி!"

அவன் தலையை அசைத்தான்.

"குழந்தை, என்னைத் தெரிகிறதாடாப்பா? இதோ பார், உன் மாமா...."

"நாணு, கமலா வந்திருக்கிறேன்."

"நான் ரோஹிணிங்க."

"அண்ணு, என்னைப் பார், அண்ணு.... பாப்பாக் கண்ணு !"

நாணு அனைவரையும் பார்த்தான். சிரித்தான். சிரிப்பா அது !

"நாராயண், மயக்கம் தெளிந்து விட்டதா?"

"உம்...."

"நாராய்ணுக்கு மயக்கம் தெளிந்து விட்டது. நாம் புறப்படுவோமா?" என்றாள் பாருக்குட்டி.

மெல்ல மெல்ல அந்தப் பயங்கரச் செய்தியை விசுவநாதன் நாணுவிடம் சொன்னார். அவன் கண்களில் நீர் பெருகிற்று கடலாக. கூடியிருந்தோர் விழிகளில் ஆறாகப் பெருகிய நீர் அதிலே கலந்தது.

ஆசை அடங்கி, வேகம் தணிந்து, படபடப்பு நீங்கி, அவசரம் ஒடுங்கி மூழ்த்த மலர் போலக் கிடந்தார் சுந்தரம். மகனை வைத்த கண் வாங்காமல் அவர் பார்க்கத் தான் பார்த்தார் !

குஞ்சுராமனைக் கம்பிக் கதவுகளுக்குப் பின்னாலே பார்த்த பாருக்குட்டி அழுதாள். மனைவியின் ஸ்தானம் இன்னதென்பதை அந்தப் பேதை உணர்ந்த தருணத்தில்தானா சிறைவாசம் வாய்க்க வேண்டும் கணவனுக்கு!

"பாரு, உனக்கு ரொம்பத் துரோகம் செய்து விட்டேன். அந்தக் கோபால் பேச்சைக் கேட்டு நான் அழிந்து போய்விட்டேன்" என்று அழுதான் குஞ்சுராமன்.

"அழாதீர்கள் !" என்றாள் பாருகுட்டி விம்மியபடியே.

ஃ ஃ ஃ

போலீஸ் படையெடுப்பு பற்றிக் கோபாலுக்கு முன்னதாகவே தெரியும். இப்படிச் சொல்வது தவறு. குஞ்சுராமன் தங்கக் கட்டிகளைக் கடத்திக் கொண்டு வருவதைப் போலீசுக்கு அவனேதான் தகவல் கொடுத்தான். பாருக்குட்டியின் அன்பு திசை தவறி, தன் எண்ணம் ஈடேறாத நிலை வந்துவிட்டதையும், ஜெகுவிடம் அவள் அபரிமிதமான அன்பு காட்டுகிறாள் என்பதையும் பொறாத கோபால் அவளால் விரட்டப்பட்டு வீட்டிலிருந்து புறப்பட்டதுமே, ஒரு திட்டத்தை

பண்டிட் டி. கோபாலாசார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்யத்தீர்க்கும் · பலத்தீர்க்கும்

ஆயுர்வேதாஸ்ரமம்
பிரைவேட் லிமிடெட் சென்னை-17

# கால் அரிப்பு சரும அரிப்பு

அரிப்பு, எரிச்சல் முதலிய உபாதைகளை உங்களால் தாங்க முடியாமல் பைத்தியம் பிடித்து விடும் போலிருக்கிறதா? உங்கள் சருமத்தில் வெடிப்புகள் தோன்றி தோல் உரிந்து ரத்தம் கசிகிறதா? பாதங்களிலும் கால் விரல்களுக்கிடையிலும் புண்கள் தோன்றி உபத்திரவம் செய்கின்றனவா? இவைகள் வெடித்துக் கசிந்து மேலும் புண்களை உண்டாக்குகின்றனவா? இவைகளுக்கெல்லாம் மூலகாரணம் சிங்கப்பூர் சொறி, வண்ணாரப்படை, என்று பல பெயர்களில் வழங்கப்படும் ஒருவகைக் கிருமி. மூலகாரணமான இந்தக் கிருமிகளை ஒழிக்கும்வரை இவ்வுபாதைகளிலிருந்து நிவாரணமடையமுடியாது. விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட நிக்ஸோடெர்ம் (Nixoderm) முதல் தடவை போட்டவுடனேயே அரிப்பை நிறுத்தி கிருமிகளைக் கொன்று சருமத்தின் புண்ணை ஆற்றி மிருதுவாக்கி சுத்தப்படுத்த ஆரம்பிக்கிறது. நிக்ஸோடெர்ம் (Nixoderm) அரிப்பை நிறுத்துவதில் வெற்றி கண்டுள்ளது. மேலும் பாதத்தின் மேலிருக்கும் புண்கள் மேலாகப் பரவும் படை, முகப் பருக்கள் கட்டிகள் முகத்திலோ அல்லது தேகத்திலோ பரவிய படர் தாமரை முதலிய உபாதைகளைக் குணமாக்குகிறது. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். பூரண திருப்தியை அது நிச்சயமாக அளிக்கும்.



நேரில்
பார்த்தாலும்
கண்ணாடியில்
பார்த்தாலும்
அவள் கூந்தலழகு
அழகேதான்!
அவள் விரும்பி
உபயோகிப்பது

**கேசவர்த்தினியே!**

கேசவர்த்தினி ஷாம்பு
ரோஸ் & ஸாண்டல்



சௌகந்திகா ஸ்நானப் பொடி
உபயோகித்து உங்கள் சருமத்தை மிருது மிருதுவாகவும் மணமாகவும் வைத்துக் கொள்ளுங்கள்

## கேசவர்த்தினி பிராடக்ட்ஸ்

மதராஸ்-14

G. F.

வகுத்து முடித்தான். பாருக்குட்டியை எவ்வகையிலாவது அடைந்தே தீருவது என்ற வெறி அவனை ஆட்கொண்டிருந்தது. அதற்குப் பெரும் தடையாக இருந்தவன் ஜெகுதான். ஜெகு வருவதற்கு முன்பெல்லாம், கோபாலிடம் பாருக்குட்டி உயிராய் இருந்தாள். அவன் வந்ததும்தான் மாறிவிட்டாள். எனவே, ஜெகுவை அகற்றுவது ஒன்றே தன் எண்ணம் ஈடேற வழி என்று அவன் கண்டு கொண்டான். இதனாலேயே ஜெகுவைப் பட்டணம் போகச் சொன்னான். அவனுக்குச் சந்தேகம் ஏற்படாதிருக்கவும் அதே சமயம் ஜெகு குஞ்சராமனைச் சந்தித்தே தீர வேண்டுமென்பதற்காகவுமே — பாருக்குட்டியையும் ரோஹிணியையும் உடன் அழைத்துச் செல்லுமாறு கேட்டுக் கொண்டான். பாருக்குட்டியின் அன்புக்கு ஜெகு மட்டும் தடையில்லை. நாணாவும் ஒரு தடைதான். முயன்றால் அவனையும் போலீஸ் சூழ்ந்து கொள்ளட்டுமென்று அவனுடைய பெயரையும் கோஷ்டியில் பிணைத்துத் தகவல் கொடுத்தான்.

குஞ்சராமன் இந்த வண்டியில் வந்து இறங்குவான். ரோஹிணியும் பாருக்குட்டியும் அவனைப் பார்ப்பார்கள். ஜெகுவும் நெருங்குவான். பெட்டி கைமாறும். இருவரையும் போலீஸ் பிடித்துவிடும். பிறகு பாருக்குட்டி கோபாலுக்குச் சொந்தமாகிவிடுவாள். குஞ்சராமனோ ஜெகுவோ தன் பெயரைப் போலீஸில் சொல்ல மாட்டார்கள் என்பது கோபாலுக்கு உறுதியாகத் தெரியும். சொல்லக் கூடாது என்ற அடிப்படையில்தானே கு ஞ் ச கூட்டுச் சேர்ந்தான்!

இவ்வளவையும் பாருக்குட்டியின் வீட்டிலிருந்து புறப்பட்டுச் சென்றதுமே தெளிவாகச் சிந்தித்து உடனே நிறைவேற்றிவிட்டான் கோபால். அதன் பிறகே ஜெகு அவனைச் சந்தித்து, சமாதானப்படுத்தி, திரும்ப அழைத்து வந்த கதையெல்லாம்.

''கோபால், நீங்களும் வாங்களேன் பட்டணத்துக்கு. நீங்கள் வந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்! நீங்கள் வராவிட்டால் பாருக்குட்டி வருத்தப்படுவாள்'' என்றான் ஜெகு.

''நீ இருக்கிறியே, ஜெகு. நான் எதுக்கு?'' என்றான் கோபால்.

இருவரும் ரயில் நிலையத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தார்கள். திட்டத்தை வகுத்து முடித்துக் குஞ்சராமனைப் போலீஸ் கையில் அநேகமாய் ஒப்படைத்த பிறகு பின் வாங்குவதென்பது இயலாது போயிற்று. கோபாலின் வெறி அடங்கிவிட்டதென்னவோ உண்மை. தூணில் வலியவே கட்டுப்பட விரும்பிய புதிய கோபாலிடம் பழைய வெறி இல்லை. எனினும், தலைக்கு மேல் வெள்ளம் போன பிறகு சிந்திப்பதில் என்ன பயன்?

'' நான் எதற்குப் பிரயோசனம், கோபால்? எங்கேயோ போய் அழிய வேண்டியவனை அழைத்து நாடக நாட்டிய மண்டலி அமைக்கப் பணமும் கொடுத்து என்னை நீங்கள் ஆளாக்கினீர்கள்.... அது கூடப் பெரிதில்லை. உங்களால் அல்லவா பாருக்குட்டி எனக்கு அறிமுகம் ஆனாள்! அவளைப் போல் குழந்தையாக நான் வாழ வேண்டுமென்று சொல்லாமல் சொன்னீர்கள். இல்லையா, கோபால்? இந்த மனசு யாருக்கு வரும்? பொறாமையும் அகந்தையும் பிடித்த ஜனங்களுக்கிடையில் நீங்கள் உத்தமராக இருக்கிறீர்கள். கோபால், உங்களுக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்?''

கோபால் என்ன செய்வான்! பலிபீடத்துக்கு வரும் ஆடு பூசாரியைப் புகழ்கிறதே!

''பெண்களென்றாலும் காதல், ஊதல் என்று திரிந்தவன் நான். எந்தப் பெண்ணைப் பார்த்தாலும் என் கண்ணிலே ஆசை துள்ளும். கோபால், அதெல்லாம் இந்தப் பாருக்குட்டியைப் பார்த்ததிலிருந்து மாறி விட்டது. பாருக்குட்டி என் சகோதரி. இல்லை, கோபால். என் தாய். ஆமாம். என்னை ஒரு புது ஜீவனாக அமைத்த தாய் அவள்!'' சொல்லும் பொழுதே ஜெகு அழுதான். ''ஒரு சூதுவாது தெரியுமா? பொறாமை அகங்காரம் உண்டா? அது வேண்டும், இது வேண்டும் என்று கேட்கத் தெரியுமா? நகை நட்டு, ஸ்நோ-பவுடர்-ஊஹூம்...., என் அம்மாளுக்கு வேண்டியதெல்லாம் ஒன்றே ஒன்றுதான். எல்லையில்லாத அன்பு! உலகம் முழுவதற்கும் கொட்டித் தீர்த்தாலும் குறையாத அன்பு!... என்ன தெய்வப் பிறவியோ, தெரியவில்லை '' என்று ஜெகு கேவிக் கேவி விம்மினான்.

பாருக்குட்டியைத் தன் தாயாக்கி ஜெகு பேசியதும் கோபாலின் நெஞ்சில் இனம் தெரியாத வேதனை படர்ந்து விட்டது. தன்னுடைய தாயின் நினைவு வந்தது அவனுக்கு. கபடமற்ற பிறவி அவள். இரண்டு எருமை மாடுகளை வைத்துக் கொண்டே கழுத்து நிறைய நகைகளையும் கைகால் சுமக்க முடியாத தங்கத்தையும் சேர்த்தவள். வெறுமே சேர்த்ததா? தயிரும், பாலும், வெண்ணெயும் கூடையில் சுமந்து இதே கோவை வீதியில் அம்மா கூவிக் கூவி விற்றுச் சேர்த்த பணமல்லவா கோபாலைப் பெரிய மனிதனாக்கிற்று! 'அட, கோபாலு, ரெண்டு எழுத்து படிடா. கெட்டுப் போவாதேடா' என்பாள். கெட முடிவு செய்தவன் படித்தாலும் கெடுவான். படிக்கா விட்டாலும் கெடுவான். இது கோபாலின் சித்தாந்தம். எனவே, படிக்காமலே கெட்டுப் போனான்.

இதுகாறும் பாசம் என்ற சொல் கோபாலின் அகராதியில் இல்லாதிருந்தது. ஜெகு அந்தச் சொல்லை அகராதிக்கே பெயராகச் சூட்டிவிட்டான். அவன் சூட்டியதோடு மட்டுமில்லை, இதைத் தாய்க்கே சமர்ப்பணமும் செய்தான்.

அட, இந்த ஜெகு பேசாமல் வரமாட்டானா! மனத்தை ஏன் குழப்புகிறான்! அம்மாவை நினைவுபடுத்தி விட்டானே பாவி!

கோபால் தன் கண்களைத் துடைத்துக் கொண்டான்.

எருமை மாட்டுக் கட்டுத் தறியில் அம்மா நிற்பதுபோலிருந்தது. கழுநீர்த் தொட்டியை ஒரு பெரிய மூங்கில் கழியால் கிளறுகிறான்.

கழுத்தை அழுத்தி மாடு வயிறு முட்டக் குடிக்கிறது. அம்மா இவனை வைத்தால் இதோஞ்சான் மாடுகூடக் கொழுத்துப்போகும் பத்தே நாட்களில்.

அவனையும் அப்படித்தானே வளர்த்தாள்! கேட்ட நேரமெல்லாம் பணம். புது சைக்கிள் வேண்டுமா, இந்தா பணம். சில்க் சட்டையா, சென்டு பாட்டிலா, சினிமா நாடகமா? இந்தா பணம். தயிரும் நெய்யுமாய் ஊற்றுவாள் அவள்.

''கோபால், நீங்களும் வாங்க. நீங்கள் வந்தால் ஆனந்தமாக இருக்கும். திரும்பி வரும் போது ஜெயசூரியாவைக் கூட்டிக் கொண்டு வரலாம்.... கோபால், எனக்கு உங்கள் ரகசியம் தெரியும்'' என்று ஜெகு சிரித்தான்.

''தெரியுமா ?''

''உம். ரோஹிணிகூடச் சொன்னாள்.''

''என்னன்னு?'' கோபாலுக்குக் குற்ற உணர்வு குறுகுறுத்தது.

''சொல்லட்டுமா?.... ஊஹூம், அதெல்லாம் இல்லேன்னு சொல்லக் கூடாது....''

''சீக்கிரம் சொல்லு, ஜெக்கு!''

''பட்டணத்திலிருந்து கூட்டித் தங்கம் கொண்டு வரப் போகிறேன்.''

''ஜெக்கு!'' கோபால் கூவியே விட்டான். வெகுளியாக இருந்து கொண்டு எல்லா விவரங்களையும் தெரிந்து வைத்துக் கொண்டிருக்கிறானே ஜெகு! தெரிந்தும்கூட எவ்வளவு நம்பிக்கை !

''பொய் சொல்லாமல் சொல்லுங்க.... ஜெயசூரியாவிடம் உங்களுக்கு ஆசைதானே?'' என்று கேட்டான் ஜெகு.

இதுதானு? என்னவோ ஏதோ என்று கோபால் பயந்து விட்டானே அதற்குள் ! அட கோபால், ஒரு கெட்டது செய்ய வேண்டுமென்றால் எதற்கெல்லாம் பயப்பட வேண்டியிருக்கிறது! ஜெயசூரியாவிடம் ஆசையாம். அவளிடமா ஆசை அவனுக்கு? தாயின் சொரூபமாக ஜெகு வழிபடும் பாருக்குட்டியிடமல்லவா ஆசை கொண்டான் அவன் ! சே! ஆசைப்பட்டானே, ஆசைப்படத் தெரிந்ததா அவனுக்கு! அவனைக் குழந்தை என்று நினைத்துத்தான் ஆசைப்பட்டானே! அவன் குழந்தை இல்லை. அம்மா! எருமை மாட்டுத் தறியில் முட்ட முட்ட வைக்கோலிடும் அம்மா! வயிறு நிறைய அவனுக்குச் சோறு போடும் அம்மா! கோபால், உன் தலையை அந்தக் கழுநீர்ப் பானைக்குள் விட்டுவிடு. உன் கண்ணைச் சூட்டுக்கோல் கொண்டு தீய்த்துக் கொள். ஜெகுவுக்கு இருக்கும் கள்ளமற்ற தாய்ப் பாசம் உனக்கு ஏது? நீ எல்லாவற்றையும் துறந்தவன். உன்னை நம்பி நீயே கதி என்று வருகிறானே ஜெகு. அவனைப் பிடித்துச் சிறையில் தள்ளிவிட்டு உன் தாயான பாருக்குட்டியை.....

''அம்மா!'' கோபால் அலறியே விட்டான்.

''கோபால், என்ன இது ?'' ஜெகு பதறினன்.

''ஜெகு, எனக்கு என்னவோ செய்யுது. தலை சுத்துது. மயக்கம் வருது.''

ஜெகு அவனைத் தாங்கிப் பிடித்தவாறே அருகில் இருந்த காப்பிக் கடைக்குள் நுழைந்தான்.

''எனக்கு ஒன்றுமில்லே, ஜெக்கு.... நீ போய்ப் பாருவும் ரோஹிணியும் வந்துட்டாங்களான்னு பார்த்துட்டு வா.... இரு...இரு. எனக்கு ஒடம்பு சொகமில்லேன்னு பாருக்குட்டிகிட்ட சொல்லிப் போடாதே.... அப்புறம் பயணம் கெட்டுப் போவுமில்லே?''

ஜெகு ஓடினான் பார்த்து வர.

பயணம் கெடக் கூடாதாம். கோபாலின் இரும்பு நெஞ்சில் இன்னமும் சதித் திட்டம் தான் முன் நிற்கிறதோ ? அட, மனமே, எல்லோரையும் பிடித்துக் கொடுத்துவிட்டு நீ மட்டும் என்ன சுகத்தைக் காணப் போகிறாயோ, தெரியவில்லை.

''சிகரெட் பிடிச்சுட்டு வரேன்னு சொல்லிட்டு வந்தேன்.... 'கோபால் எங்கே? அவரையும் வரச் சொல்லுங்க!' என்கிறாள் பாருக்குட்டி. நீங்கள்தான் வரமாட்டேன் என்கிறீர்கள்!'' என்றவாறே திரும்பி வந்தான் ஜெகு.

கோபால் முடிவு செய்து விட்டான். இரும்பு நெஞ்சு உருகி விட்டது. பாவம்,

## காந்திஜியின் கரிசனம்

தண்டியில் காந்தியடிகள் தங்கியிருந்த பொழுது அவர் அண்மையில் இருக்கும் கிராமங்களுக்குச் சென்று பிரசாரம் செய்வது வழக்கம். ஒரு நாள் ஓர் உப்பளங்கழியை அடுத்துள்ள பகுதியில் மாபெரும் பொதுக்கூட்டம் நடந்தது. காந்திஜி கொளுத்தும் வெயிலில் ஒரு மாட்டு வண்டியின் மேல் நின்று கொண்டு சொற்பொழிவாற்றிக் கொண்டிருந்தார். கூட்டம் முடிந்தது. பெரும் திரளாகக் கூடியிருந்த மக்கள் ஆவேசத்தோடு காந்தியடிகளைப் பின்பற்றி ஆளுக்கொரு கை உப்பை மண்ணோடு சேர்த்து அள்ளினார்கள். சத்தியாக்கிரகம் முடிந்து எல்லோரும் வீடு போய்ச் சேர்ந்தார்கள்.

காந்தியடிகளும் அள்ளிய கைஉப்போடு வீட்டுக்கு வந்தார். வந்ததும் வராததுமாக ஒரு பாத்திரத்திலிருந்த நீரில் அந்த உப்பு மண்ணைப்போட்டார். தமது கையைக் கழுவிக் கொண்டார். தம் கூட இருந்தவர்களிடம், ''இந்தத் தண்ணீரை நன்றாகத் தெளிய விடுங்கள். பின்னர் காய்ச்சி உப்பை எடுங்கள்'' என்றார்.

உப்பையும் வீணாக்காதவர் மகாத்மா. உப்பிலும் தண்ணீரிலும்கூட அவர் சிக்கனத்தைக் கைக் கொண்டிருந்தார்.

தகவல்: ஏ. வேங்கடராமன்



இந்த ஜெகுவை ஏன் போலீஸின் கையில் ஒப் படைக்க வேண்டும்? இவனு தடையாக நிற் கிறுன்? இனிமேல் தடைகூட உண்டா? பாருக்குட்டியை அவன் பவளாயியாக—அவ னுடைய தாயாகவல்லவோ பாவிக்கத் தொடங்கி விட்டான்! வேடிக்கை. கோபா லுக்கும் மனசு மாறி விட்டது. யார் நம்பு வார்கள்? அவனுக்கே நம்பிக்கை இல்லே இதிலே. ஆனுல் அம்மாவோடு ஒத்திட்ட பிறகு இதில் நம்பிக்கை இல்லாமற் போனுல் அதை விடப் பெரிய பாவம் வேறில்லே. மனிதன் யாருக்கு அஞ்சாது போனுலும் பெற்ற தாய்க்கு அஞ்ச வேண்டாமா! தாய் யார்? இந்த உடலே, உயிரைத் தந்த தெய்வம் இல்லேயா?

''வண்டி இன்னும் வரல்லே ஜெக்கு.... நாறு நிமிசம் லேட்டாம்'' என்று போக்குக் காட்டி விட்டான் கோபால்.

''இல்லே, கோபால்! ஒரு வண்டி தடதட வென்று வந்ததே, இப்போது!''

''அது பொள்ளாச்சி வண்டி!.... தட தடன்னுதான் வரும்.''

ஜெகு மீண்டும் ரயில் நிலேயத்துக்குச் சென்ற போது பாருக்குட்டி, ரோஹிணி இருவரையும் காணவில்லே. ''கோபால், ஸ்டேஷனே வெரிச்சோடிக் கிடக்கிறது'' என்றுன்.

வெரிச்சோடிக் கிடப்பது ரயில் நிலேயம் அல்ல, தன் மனம்தான் என்பது கோபாலுக் கல்லவா தெரியும்! அங்கே எத்தனே மனி தர்கள் வந்து போனுர்கள்? ரயில் உற வாகவே போய்விட்ட பழக்கங்கள், தடம் புரண்ட விபத்துக்கள், தாமதமாக ஓடிய காலங்கள், காலமெல்லாம் ஓடி ஓடித் திரும்பிய பயணங்கள்! பார்க்கப் போனுல் அவன் சந்தித்ததெல்லாம் இரண்டே இரண்டு அதிசய உறவுகள் மட்டுமே. உடன்பிறப்பை விட ஒட்டிய பாசத்தோடு ஜெகு! தாய்ப் பாசம் காட்டிய பாருக்குட்டி!

போயிற்று. இந்த இரண்டை இனம் புரிந்து கொள்ளாமல் தன் தலேயில் தானே மண்ணே வாரிப் போட்டுக் கொண்டாயிற்று.

இனி கோபாலுக்கு என்ன இருக்கிறது?

**ம**று நாள் காலேயில் கோபாலே போலீஸ் நிலேயத்தில் போய் நின்றுன். ''என்னேப் பிடிச்சு உள்ளே தள்ளுங்க. வெளியே விடாதீங்க.... அது ரொம்பப் பேருக்குத் தீம்பு!'' என்றுன்.

''கோபால்! என்ன இது! உக்கும்!'' என்று தடுத்தாள் பாருக்குட்டி.

''என்னேத் தடுக்காதேம்மா.... என்னே யாரும் காப்பாற்ற முடியாதும்மா. நான் அயோக்கியன்'' என்றுன் அவன்.

''உக்கும்.... நீங்கள் மிகவும் நல்லவர்!'' என்றுள் அவள்.

**வ**ழக்கில் கோபாலுக்கு ஆயுள் தண்டனே விதிக்கப்பட்டது. அவனுகவே, பல குற்றங் களேச் செய்ததாக வெளியிட்டான். குஞ்சு ராமனுக்கு இரண்டு ஆண்டுகள் சிறைவாசம் கிடைத்தது. நாயருக்குத் தொழிற்சங்கப் பதவி போய்விட்டது. உண்மை ஊழியனுன நாணுவைத் தொழிலாளர்கள் புரிந்து கொண்டார்கள்.

பாருக்குட்டி ஜெகுவுடன்தான் கமலா வின் வீட்டில் இருக்கிறுள். ரோஹிணி அக்கா தான் 'ஸர்வண்ட் உமன்.'

''ரொம்ப வொண்டர்புல்லாக இருக் கிறதே..... காதலேத் தேடி அலேந்தேன். கிடைக்கவில்லே. 'காதலிப்பது எப்படி?' 'நீயும் காதலும்' என்றெல்லாம் படித்தேன். ஒன்றும் புரியவில்லே. இந்தக் கமலா வந்து 'கிப் கொயட், பிடி லவ்'வை என்றுளே அது எப்படி?'' என்று கேட்கிறுன் ஜெகு.

''நீங்கள் பேசாமல் இருக்க மாட்டீர் களா?'' என்கிறுள் கமலா பொய்க் கோபத் தோடு.

''அவன் வாய்க்குப் பூட்டு போடு, சொல் கிறேன்'' என்கிறுள் அத்தை.

''உக்கும்....'' என்கிறுள் பாரு.

''காதலா? அப்படி ஒன்று உண்டா? என்று இனிமேல் கேட்க மாட்டேன். தப்பு! தப்பு! கேட்டதற்கு ஜட்ஜ் மாமா எனக்கு ஆயுள் தண்டனே விதித்து விட்டார்'' என் கிறுன் நாணு.

''போடடா, தோப்புக்கரணம்.....சீதா, அவனேச் சும்மா விடாதே. ஸ்டிரைக் செய் கிறேன் என்பான். நோட்டீஸ் கொடுக் கிறேன் என்பான். நீ பதிலுக்குத் தீபா வளிக்குப் பட்டுப் புடவை போனஸ் கேள். பொங்கலுக்கு வைர அட்டிகை போனஸ் கேள்'' என்பார் விசுவநாதன்.

''அண்ணு, பாவம்!'' என்கிறுள் பாப்பாக் கண்ணு.

''குழந்தை, சம்சாரியாகி விட்டாய் நீ. இனிமேல் மில்லே நீ கவனித்துக் கொள்.... மாமாவுக்கும் வயசாகிவிட்டது, பார்'' என் கிறுள் லட்சுமி அம்மாள்.

''அடியே, மில்லேக் கவனிக்கட்டும் உன் குழந்தை....நான் வேண்டாமென்று சொல்ல வில்லே. ஆனுல் எனக்கு வயசாகிவிட்டது என்கிறுய், பார், அதை ஒப்புக் கொள்ள மாட்டேன்.''

''இன்னமும் குழந்தையாகவே இருக் கிறீர்களே!''

பத்மநாபன் இந்த அன்புச் சாம்ராஜ்யத் தின் எல்லேக்குள் பிறர் நுழையாவண்ணம் சாய்வுநாற்காலியில் பெருமையோடு சாய்ந்து காவல் புரிகிறுர்.

கூடத்தில் சுந்தரியின் படமும் சுந்தரத் தின் படமும் பெரிய அளவில் தத்ரூபமாக நிற்கின்றன. படத்தைவிடப் பெரிய மாலேகள் அவற்றை அலங்கரிக்கின்றன.

**முற்றும்**

1. மாஸ்கோவுக்கு விஜயம் செய்த பாரதப் பிரதமர் ஸ்ரீமதி இந்திரா காந்திக்கு விமான நிலையத்தில் ரஷ்யச் சிறுவன் பூச்செண்டு கொடுத்து வழியனுப்பி வைத்தான். அருகில் சோவியத் பிரதமர் கோசிஜின் நிற்பதைக் காணலாம்.

2. பாரத உப ராஷ்டிரபதி டாக்டர் ஜாகிர் ஹுசைன் சமீபத்தில் ஆப்கானிஸ்தானுக்கு விஜயம் செய்திருந்த போது எல்லைப்புற காந்தி கான் அப்துல் கபார்கானைக் காபூலில் சந்தித்து மகிழ்ச்சியோடு தழுவிக்கொண்டார்.

3. அமெரிக்க விவசாய காரிய தரிசி ஆர்வில் ஃப்ரீமன் புதுதில்லியில் இந்திய சர்க்கார் மந்திரிகளைச் சந்தித்து விவசாய முன்னேற்றத்துக்கும் உற்பத்திப் பெருக்கத்துக்குமான திட்டங்களை விவாதித்தார். இடமிருந்து வலமாக: வி. கே. ஆர். வி. ராவ், செஸ்டர் பௌலஸ், சி. சுப்பிரமணியம், ஆர்வில் ஃப்ரீமன், அசோக் மேத்தா.





## அத்தியாயம் பத்து

# வீரம் விளைந்த மண்ணில்

விசுவநாதனின் நீண்ட நெடும் பயணம் தொடங்கி விட்டது. விஜயநகரத்தின் ஒரு பகுதியே இடம் பெயர்ந்து தெற்கு நோக்கிப் புறப்படுவது போல் இருந்தது அந்தக் காட்சி. ஆயிரமாயிரம் யானைகளும் பல்லாயிரம் குதிரைகளும் அவற்றை நடத்திச் செல்லும் வீரர்களும் புடைசூழ அவன் புறப்பட்டு விட்டான்.

கிருஷ்ண தேவராயர் படை நடத்திச் சென்ற காலங்களில் விசுவநாதன் அவரோடு சென்றிருக்கிறான். அந்த நினைவுகள் அவனுக்கு இப்போது வந்தன. கிருஷ்ண தேவராயருக்கு அந்தக் காலங்களில் எவ்வளவு உபசாரங்கள் நடந்தனவோ அவ்வளவும் அவனுக்கு இப்போது நடந்தன. பய பக்தி கொண்ட வீரர்களின் கூட்டம் விசுவநாதனைத் தனது மாபெரும் தலைவனாக ஏற்றுக் கொண்டு விட்டது. அவனைக் கேளாமலே, அவன் விரும்பாமலே, அவனுக்குப் பணிவிடைகள் நடக்கத் தொடங்கின.

யானையின் மீதேறிக் குடை நிழலில் சென்று கொண்டிருந்த விசுவநாதனைச் சுற்றிலும் திரும்பிய திசைகளிலெல்லாம் வீரர்களின் வெள்ளம் பெருக்கெடுத்துக் கொண்டிருந்தது. அவனுக்கு அருகில் சற்றுத் தாழ்வானதோர் இருக்கையில் ராமபத்திர நாயக்கர் அமர்ந்திருந்தார். விசுவநாதன் அவரிடம் எவ்வளவோ வற்புறுத்தியும் அவர் அவனோடு ஒன்றாகச் சரியாசனத்தில் அமரவில்லை.

''வீரர்கள்தான் என்னை இப்படிச் சக்கரவர்த்திகளைப் போல் நடத்துகிறார்களென்றால் நீங்களும் அவர்களோடு சேர்ந்து கொண்டு விட்டீர்களே!'' என்றான் விசுவநாதன்.

ராமபத்திர நாயக்கர் மெல்லச் சிரித்து விட்டு யானைப் பாகனைத் திரும்பிப் பார்த்தார். பிறகு விசுவநாதனுக்கு மட்டிலும் கேட்கும்படியாக அவனிடம் தணிந்த குரலில், ''நான்தான் மற்ற எல்லா வீரர்களுக்கும் வழிகாட்டியாக நடந்து கொள்ள வேண்டும். லட்சோப லட்சம் வீரர்களும் தங்கள் ஆணைக்குப் பணிந்து அவர்களுடைய உயிரையும் விடுவதற்குச் சித்தமாக வந்திருக்கிறார்கள். அவர்களுக்குத் தங்களிடம் அன்பும் பயபக்தியும் இருந்தாலே அவர்கள் தங்களுடைய ஆணைகளுக்குக் கட்டுப்பட்டு நடப்பார்கள். ஆகவே, அவர்கள் எப்படித் தங்களைப் பாவிக்கிறார்களோ அப்படியே தாங்களும் நடந்துகொள்ள வேண்டும். நான் வயதில் மூத்தவனாக இருந்தாலும் தங்கள் ஊழியன்!'' என்றார்.

விசுவநாதனுக்கு இது வியப்பாகத் தோன்றியது. ''அவர்கள் எப்படி என்னைப் பாவிக்கிறார்கள்?'' என்று கேட்டான்.

ராமபத்திர நாயக்கர் மறுமொழி கூறுவதற்குச் சிறிது தயங்கினார். சாளுவ நரசிம்மரின் ஆலோசனையின் பேரில் அவர் படைத்தலைவர்களைக் கூட்டி வைத்து முன்னமேயே இந்த ஆலோசனையை அவர்களுக்கு வழங்கியிருந்தார். 'கிருஷ்ண தேவராயரின் ஆணைகள் எவ்வாறு நிறைவேற்றப்பட்டனவோ அவ்வாறே விசுவநாதனின் ஆணைகளும் நிறைவேற்றப்பட வேண்டும். அவரிடம் எவ்வாறு படைத் தலைவர்கள் நடந்து கொண்டார்களோ, அவ்வாறே விசுவநாதனிடமும் நடந்து கொள்ள வேண்டும்!'

சாளுவரின் யோசனையின் பேரில் ராமபத்திர நாயக்கர் செய்து வைத்திருந்த ஏற்பாடுகளை அறியாத விசுவநாதன், ''வீரர்கள் என்னை எப்படிப் பாவிக்கிறார்கள்?'' என்று மீண்டும் கேட்டான்.

''பெரிய சக்கரவர்த்திகளுடைய குமாரரைப் போலவே அவரிடம் வளர்ந்தவர்கள் தாங்கள். அவர்கள் தங்கள் மீது எவ்வளவு பற்றுதல் கொண்டிருந்தார்கள் என்பதை நம்முடைய படைத் தலைவர்கள் அனைவரும் அறிவார்கள். மேலும் தங்களுடைய ஆற்றலிலும் வீரத்திலும் இவர்களுக்குப் பெரு நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது. தங்களது தந்தையாரையே வாட் போரில் வென்றவரல்லவா தாங்கள்?.... அதனால்... தங்களைக் குமாரச் சக்கரவர்த்திகள் என்றே நாங்கள் எல்லோரும் மதிக்கிறோம்!''

''என்ன!'' – திடுக்கிட்டான் விசுவநாதன்.

''தயவு செய்து எங்கள் நம்பிக்கையைத் தாங்கள் குலைக்க வேண்டாம். நீங்கள் இட்ட கட்டளைகளை நாங்கள் நிறைவேற்ற வேண்டுமானால், எங்கள் நம்பிக்கைகளை வளரச் செய்யுங்கள்'' என்றார் ராமபத்திர நாயக்கர்.

விசுவநாதனால் ஏதுமே மறு மொழி கூற முடியவில்லை. அம்பாரி மீதிருந்தவாறே சுற்றிலும் கண்ணோட்டம் விட்டான். பொற் குவியல் நிறைந்த பெரும் பேழைகளையும் ஆயுதக் குவியல்களையும் சுமந்து கொண்டு எண்ணற்ற யானைகள் அவனுக்கு முன்னே சென்றன. வீரர்களின் எண்ணிக்கையோ கணக்கிலடங்காதது. படைத் தலைவர்கள் பலரது குடும்பங்கள் தேர்களில் விரைந்து சென்று கொண்டிருந்தன. அவற்றில் ஒன்றாக ராமபத்திர நாயக்கரின் குடும்பமும் விஜயநகரத்திலிருந்து இடம் பெயர்ந்து மதுரைக்குக் குடியேறச் சென்று கொண்டிருந்தது.

எந்த ஒரு வீரனுக்குமே அதிகாரச் செருக்கைத் தலைக்கு ஏறச் செய்யும் காட்சிதான் அது. அந்த மாபெரும் கூட்டத்தின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவன் அவன்; அதன் வழிகாட்டி அவன்; அதன் தலைவன் அவன்.

என்றாலும் செருக்கு அவனிடம் தோற்று விட்டது. தான் யார் என்பதை அவன் மறந்துவிடத் துணியவில்லை.

**விடைகள்:**

(1) நான் கார் ஓட்டிக் கொண்டு சென்ற நேரம் பகல்.

(2) அந்தச் சொல் கார். தமிழில் 'மேகம்' (ஆகாயத்தில் ஊரும்) ஆங்கிலத்தில் மோட்டார் கார். (நிலத்தில் ஊரும்)

(3) பிப்ரவரி மாதம். இதற்கு 28 நாட்கள்தானே உண்டு!

''நாயக்கர் அவர்களே! வீரர்கள் என்னைக் குமாரச் சக்கரவர்த்தியாக நினைப்பதால், அவர்களுக்கு ஒரு மகிழ்ச்சி ஏற்படுமென்றால் அவர்கள் அப்படி நினைத்துவிட்டுப்போகட்டும். ஆனால் நான் இப்போது அச்சுதராய சக்கரவர்த்திகளின் பாண்டிய நாட்டு ராஜப் பிரதிநிதி. பாண்டி நாட்டையும் அரசையும் பாதுகாக்க சாம்ராஜ்யத்தின் பிரதிநிதியாகச் செல்பவன். இந்த உண்மையை நான் நம்புவது போலவே நீங்களும் நம்ப வேண்டும்'' என்று கூறினான்.

ராமபத்திர நாயக்கர் அந்தச் சமயத்தில் அவனோடு வாதாட விரும்ப வில்லை. புதிய சக்கரவர்த்தி அச்சுதராயரிடம் அவருக்கு அவ்வளவாகப் பற்றுதல் இல்லை. திறமையற்றவர் என்றும், தகுதியற்றவர் என்றும் அச்சுதராயரைப் பற்றிக் கணித்து வைத்திருந்தார் அவர். அச்சுதராயருக்குப் பதிலாக ஏதேனும் அதிசயங்கள் நிகழ்ந்து, விசுவநாதனே சக்கரவர்த்தியாக வந்திருக்கக் கூடாதா என்று ஆசைப்பட்டவர் அவர்.

ராமபத்திர நாயக்கரின் ஆசையிலும் தன்னலம் இல்லாமல் இல்லை. நாகம நாயக்கருக்கு நெருங்கிய உறவினராகவும் உதவியாளராகவும் இருந்தவர் அவர். அவருக்குத் திருமண வயதில் நாகம்மாள் என்றொரு குமாரத்தி இருந்தாள். கூடுமானால் நாகம்மாளை விசுவநாதனுக்கு மணம் செய்து வைத்து, அந்த உறவின் வாயிலாகத் தாம் வளர்ச்சியுற வேண்டும் என்றும் நினைத்தார். அந்த நினைவுக்குக் குறுக்கே சாலுவரும் லட்சுமியும் நின்றதை அவர் அறியாதவரல்லர். நாகமர் குடும்பத்தோடு உறவு கொள்ளும் அளவுக்குத் தமக்குத் தகுதி இல்லை என்பதையும் அவர் உணர்ந்திருந்தார். என்றாலும் அப்படி அவருக்கோர் ஆசை. அரை குறை ஆசை; அது கைகூடுமானால் அது தம் பேரதிர்ஷ்டம் என்றும் மனக் கோட்டை கட்டியிருந்தார்.

காஞ்சிப் பெருநகரைக் கடந்து அவர்கள் தெற்கே சென்றார்கள். அங்கங்கே பாசறைகள் அமைத்துச் சில தினங்கள் தங்குவதும் பிறகு மேலே செல்வதுமாக இருந்தார்கள். அவர்களுக்கு முன்பே அவர்களுடைய வருகையைப் பற்றித் தமிழ் நாட்டில் தவறான செய்திகள் பரவி விட்டன. தெலுங்கர்கள் படை நடத்தி வந்து ஊர்களைக் கொள்ளையிட்டு வருகின்றனர் என்ற செய்திதான் அது. வீடு வாசல்களை விட்டு விட்டுக் காடுகளுக்குள் ஓடி ஒளிந்த குடிமக்கள் பலப்பலர். ஆனால் படைகள் அப்பாற் போய்விட்டன என்பதை அறிந்து அவர்கள் திரும்பி வந்து பார்த்தபோது எல்லாப் பொருள்களும் அப்படி அப்படியே இருந்தன. எந்தப் பொருளையும் யாரும் சூறையாடவில்லை என்பதைக் கண்டு ஏதும் புரியாமல் அதிசயித்தனர்.

விசுவநாதனுக்கு எப்படிப் பயந்தோடும் அந்த மக்களுக்கு நம்பிக்கை ஊட்டுவதென்று தெரியவில்லை. அவர்களுக்கு ஏதும் உதவி செய்ய முன் வந்தாலும் அவர்கள் அதைத் தவறாக நினைப்பார்கள் என்று தோன்றியது.

கங்கை கொண்ட சோழ புரத்தின் வடக்கு எல்லைக்கு வந்து அவர்கள் முகாமிட்டிருந்தார்கள். வழக்கம் போலவே அந்த ஊரும் வெறிச்சோடிக் கிடந்தது. பழம் பெரும் நகரமாக அது அப்போதைக்கு விளங்காவிட்டாலும் பல சிற்றூர்களுக்கு இடையில் ஒரு பேரூராகவே காட்சி யளித்தது. ஆனாலும் அங்கு மனிதர்களே தென்படவில்லை. அனைவருமே சிதறி ஓடிக் காடுகளில், வயல் வரப்புகளில் பதுங்கியிருந்தனர்.

விசுவநாதன் சில வீரர்களுடன் சென்று நகரத்தைச் சுற்றிப் பார்த்தான். கோவிலுக்குச் சென்று, கதவுகள் பூட்டப்பட்டிருந்ததால் வெளியில் நின்றவாறே இறைவனை வணங்கினான். அந்த நகரம் தோன்றிய வரலாறு பற்றி அரியநாத முதலியார் அவனிடம் கதை கதையாகக் கூறியிருந்தார். வடக்கே வங்கம் வரையிலும் சென்று கங்கைக் கரையில் புலிக் கொடி நாட்டிய வீரர்கள் வாழ்ந்த மண் அது. தெற்கில் ஈழமும், கிழக்கில் கடாரமும், மேற்கில் பழந்தீவு பன்னீராயிரமும் அவர்கள் பாய் விரித்து மரக் கலங்களில் படை நடத்தி வெற்றி கொண்டு வாழ்ந்தவர்கள்.

''இந்த வீர மண்ணில் விளைந்தவர்களா இப்படிப் படை கண்ட மாத்திரத்தில் பதறி ஓடி விட்டார்கள்?'' என்று பெருமூச்சு விட்டான் அவன்.

அவன் விட்ட பெருமூச்சு அங்கே காட்டில் பதுங்கியிருந்தவர்களுக்கு எட்டியது போலும்! முதல் நாள் நள்ளிரவில் விசுவநாதனின் பாசறையே பதறக் கூடிய ஓர் எதிர்பாராத நிகழ்ச்சி நடந்தது. திடீரென்று பாசறைகளின் மீது தீப்பந்தங்கள் நூற்றுக் கணக்கில் வந்து விழத் தொடங்கின. வேலும் வாளும் வில்லும் ஏந்திய ஆண்களின் கூட்டம் அவனுடைய வீரர்களின் மீது பாய்ந்தது. யானைகள் பிளிறிட்டவாறே தாறுமாறுக் கட்டறுத்துக் கொண்டு ஓடின.

விஜயநகரத்து வீரர்கள் நொடிப் பொழுதில் தங்களைத் தாக்கியவர்கள் மீது திரும்பிப் பாய்ந்தனர்.

விசுவநாதனுக்கு அப்போதுதான் எல்லையற்ற ஆனந்தம் பொங்கியது.

''நம்மைத் தாக்கும் வீரர் கூட்டத்துக்கு உயிர்ச் சேதம் ஏற்படாமல் அவர்களைக் கைப்பற்றிக் கொண்டு வாருங்கள்'' என்று உற்சாகத்தோடு கட்டளையிட்டான்.

## அத்தியாயம் பதினொன்று

# புதியதொரு நம்பிக்கை

சிறிதும் எதிர்பாராத நிலையில் நள்ளிரவில் தாக்கப் பெற்றதால் விசுவநாதனின் வீரர்களுக்கு முதலில் ஏதுமே விளங்கவில்லை. சோழ நாட்டுக்கு அவர்கள் போர் புரிவதற்காக வரவும் இல்லை. போரை அங்கு எதிர்பார்க்கவும் இல்லை. பாண்டிய நாட்டுக்குப் போகும் வழி அது. பாண்டிய நாட்டில்தான் அங்கங்கே கலவரங்கள் நடைபெற்று வருவதாக அவர்கள் கேள்வியுற்றிருந்தார்கள்.

அது நள்ளிரவாக இருந்ததாலும் விசுவநாதனுக்கும் அவனுடைய ஆட்களுக்கும் பழக்கமில்லாத இடமாக இருந்ததாலும் ஒருசில விநாடிகளுக்குள் அவர்களுக்குப் பலத்த சேதம் ஏற்பட்டு விட்டது. பாசறைகள் பற்றிக்கொண்டு எரிந்தன. கூக்குரல்கள் நாலாபுறங்களிலிருந்தும் எழுந்தன. குதிரைகளையும், யானைகளையும் கட்டுப்படுத்தி அடக்குவது பெரும்பாடாகி விட்டது.

தங்களைத் தாக்கியவர்கள் மீது அளவு கடந்த சினம் கொண்டிருந்தனர் விஜயநகரத்து வீரர்கள். அவர்களைக் கொன்று குவிக்க வேண்டும் என்றும் எரியும் நெருப்பில் தூக்கி வீச வேண்டும் என்றும் துடிதுடித்துக் கொண்டிருந்தனர்.

ஆனால் அவர்கள் தலைவன் விசுவநாதன் அவர்களுக்கிட்ட கட்டளையோ வேறு விதமாக இருந்தது. ஆகவே யானைகளின் கோபத்துக்குள்ளாகி உயிர் நீத்த ஒருசிலரைத் தவிர, அகப்பட்டவர்கள் பலரையும் உயிருடன் அவர்கள் பிடித்து வந்தார்கள். இருளில் பலர் தப்பி ஓடி மறைந்து விட்டதால், நூற்றுக்கும் மேற்பட்டவர்களை மட்டுமே அவர்களால் விசுவநாதனிடம் கொண்டு வர முடிந்தது.

''இவர்களை ஒரு பாசறையில் சிறை வைத்துக் காவலுக்கு வீரர்களை நிறுத்துங்கள்'' என்று கூறிவிட்டு மீண்டும் அங்கே அமைதியை நிலைநாட்டுவதில் முனைந்தான் விசுவநாதன். தீ அணைக்கப்பெற்றது. யானைகளும் குதிரைகளும் மீண்டும் அவற்றின் இடங்களில் கட்டி வைக்கப் பெற்றன. நிலைமை சீரடைவதற்குள் பொழுதும் நன்றாகப் புலர்ந்து விட்டது.

சிறை வைக்கப்பட்டவர்களைத் தன்னிடம் அழைத்து வருமாறு கட்டளையிட்டான் விசுவநாதன். அவர்களுடைய முகங்களில் அச்சம் சிறிதுமில்லை. மரண தண்டனையை எதிர்பார்த்து அதற்குத் தங்களைச் சித்தப்படுத்திக் கொண்டே அவர்கள் அங்கு வந்தார்கள்.

''இவ்வளவு பெரும் படையை எதிர்த்து உங்களால் அழித்துவிட முடியுமா?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டான் விசுவநாதன்.

''அழிக்க முடிந்தவரையில் அழிக்க நினைத்தோம்; எங்களையும் அழித்துக்கொள்ளத் துணிந்து விட்டோம். முடியுமா முடியாதா என்று யோசிக்க எங்களுக்கு நேரமில்லை'' என்றான் பிடிபட்டவர்களில் வயது முதிர்ந்த ஒரு கிழவன்.

''நாங்கள் உங்களுக்கு ஒரு துன்பமும் செய்யாமல் இருக்கும்போது நீங்கள் ஏன் எங்களைத் தாக்க வேண்டும்?''

இந்த வினாவுக்கு அவர்களால் விடை அளிக்க முடியவில்லை. தங்களுக்குள் ஒருவரை ஒருவர் அவர்கள் உற்றுப் பார்த்துக் கொண்டார்கள். பிறகு ஏதேதோ தங்களுக்குள் முணுமுணுத்துக் கொண்டார்கள்.

''பெரிய சக்கரவர்த்திகள் இறந்துவிட்டார்கள் என்று எங்களுக்குச் செய்தி வந்தது. அதைக் கேட்டதிலிருந்தே எங்களுடைய நம்பிக்கையும் குலைந்து விட்டது. பிறகு அதைத் தொடர்ந்து விஜயநகரத்துப் படைகள் சூறையாடிக் கொண்டே தெற்கு நோக்கி வருவதாக எங்களுக்குச் செய்தி எட்டியது. நாங்கள் எதிர்க்கத் துணிந்தோம்; எதிர்த்தோம்; அவ்வளவுதான்.''

அவர்களில் இளைஞனாகத் தோன்றிய ஒருவன் இப்படிக் கூறினான்.

விசுவநாதனுக்கு எப்படி இந்தத் தவறான செய்தி பரவியதென்றே தெரியவில்லை. வழி நெடுகிலும் காணப்பட்ட ஊர்களின் தோற்றமே அந்தச் செய்தி திட்டமிட்டுப் பரப்பப்பட்ட செய்தி என்பதை விளக்கியது.

''சோழபுரத்து மண்ணில் பிறந்தவர்களல்லவா நீங்கள்? உங்கள் வீரத்தை நான் பாராட்டுகிறேன். நீங்களும் எங்கே மற்றவர்களைப் போல் ஓடி ஒளிந்து கொண்டீர்களோ என்று நினைத்தேன். என் நினைவைப் பொய்யாக்கி எனக்கு மிகுந்த மகிழ்ச்சி அளித்திருக்கிறீர்கள்!''

அவர்கள் அனைவரையும் விடுவிக்கும்படி கட்டளையிட்டான் விசுவநாதன். சிறிதும் அவர்கள் இதை எதிர்பார்க்கவில்லை.

''விஜயநகரம் என்றைக்குமே தமிழ் நாட்டுக்குத் தீங்கு நினைத்ததில்லை. தமிழ் நாட்டை அது பெற்ற துன்பங்களிலிருந்து மீட்பதற்குத்தான் இதுவரை விஜயநகரம் முயற்சி செய்திருக்கிறது. தமிழ் நாட்டின் கோயில்கள், கலைகள், பண்பாடு, நம்பிக்கை, வாழ்க்கை முறை இவையெல்லாம் இந்த அளவுக்காவது பாதுகாக்கப்பட்டிருக்கின்றனவென்றால், காரணம் விஜயநகரம்தான். நாங்கள் உங்களுடைய உடன் பிறந்தோராக இங்கு வந்திருக்கிறோமே தவிர, உங்களுடைய பகைவர்களாக வரவில்லை. நமக்குள் இனிப் பகையே வேண்டாம். உங்களைப் பாதுகாக்கும் கடமை எங்களுக்கு உண்டு. அவ்வாறே விஜயநகரத்தைப் பாதுகாக்கும் பொறுப்பு உங்களுக்கும் உண்டு'' என்றான் விசுவநாதன்.

சோழபுரத்தாரின் கண்கள் கலங்கின. ''எங்களை மன்னித்து விடுங்கள்; அறியாமையால் தவறு நேர்ந்து விட்டது'' என்று குரல் தழுதழுக்கக் கூறினான் கிழவன்.

''உங்களிடம் ஒரு வேண்டுகோள். குடிமக்கள் அனைவரையும் உடனடியாக வீடுகளுக்குத் திரும்பச் சொல்லுங்கள். நானும் என்னுடைய வீரர்களும் கங்கை கொண்ட



டாக்டர்: யார் யாருக்குத் தந்தி அடிக்க ணுமோ, அட்ரஸ் சொல்லுங்கள். எங்கள் செலவிலேயே அடித்து விடுகிறோம்.

நோயாளி: ஊஹும்! கடைசிக் காலத்தில் என் மனைவியின் முகத்தைப் பார்க்க விரும்பு கிறேன். எல்லாத் தியேட்டர்களுக்கும் போன் பண்ணிப் பாருங்கள், டாக்டர்!

---

சோழீச்வரனைத் தரிசிக்க விரும்புகிறோம். கங்கை கொண்ட மாவீரன் எழுப்பிய இந்த நகரத்தின் கோயிலையும், அதன் உயிர்ச் சிற்பங்களையும் கண்டு களிக்க விரும்புகிறோம். எங்களுக்காக இந்தக் கோயிலை மட்டும் திறந்து விடச் சொல்லுங்கள்''.

''எங்களுடைய பாக்கியம் இது!''

சில நாழிகைக்கெல்லாம் பெருந் திரளான குடிமக்கள் கூட்டம் அங்கே இசைக் கருவிகள் முழங்க ஆனந்த ஆரவாரத்தோடு ஊர்வல மாக வந்து சேர்ந்தது. விசுவநாதனையும் அவனுடைய வீரர்களையும் வரவேற்று அவர்கள் ஆலயத்துக்கு அழைத்துச் சென் றார்கள். கோயில் சுற்றுப் பிராகாரத்தில் செதுக்கப்பெற்று உயிர்த் துடிப்போடு விளங் கிய சிற்பச் செல்வங்களைப் பார்த்தவாறே மெய் மறந்து நின்றுவிட்டான் விசுவநாதன்.

''நானும் பல நகரங்களுக்குச் சென் றிருக்கிறேன். விஜயநகரத்திலும் புதியன வாகப் பல கோயில்கள் எழுப்பப் பெற்றிருக் கின்றன. ஆனால் எங்குமே இவ்வளவு கலை நுணுக்கங்களும் முழுமையும் கொண்ட சிற்பங்களை நான் கண்டதில்லை.''

அரியநாத முதலியாரோடு முன்பே ஒரு முறை அந்தக் கோயிலுக்கு வந்து வழிபட் டிருக்கிறான் விசுவநாதன். அதை மீண்டும் காண வேண்டுமென்ற ஆவலும் தன் வீரர் களையும் அங்கு அழைத்து வர வேண்டுமென்ற ஆவலும் அவனுக்கு ஏற்பட்டிருந்தன. 'கங்கை கொண்ட மாவீரரும் அவரது வீரர்களும் வழிபட்ட இறைவனல்லவா கங்கை கொண்ட சோழீச்வரர்?

வீரர்களின் அன்னையாகிய கொற்றவைக்கு அந்தச் சோழப் பெருமகன் எழுப்பியிருந்த சிறு கோயிலுக்கு அவர்கள் வந்தார்கள். இருள் நிறைந்திருந்த அந்தக் கருவறைக் குள்ளே கற்பூர ஒளி குபீரெனப் பொங்கியது. கண்டவர்கள் அனைவருமே மெய் சிலிர்த்துத் தங்களை மறந்து கரம் கூப்பினர்.

கண்டோர் நடுங்கும் காளிமாதேவியான அந்தப் பயங்கர ரூபிணியின் உருவத்தில் தான் எத்தனை பேரழகு! எத்தனை இளமை! எத்தனை வீரத் துடிப்பு! அழகும் இளமை யும் பயங்கரமும் ஒன்றாய்க் குழுங்க அவள் அங்கே தன் எண்ணற்ற படைக் கலங்க ளோடு போர்க் கோலம் கொண்டு காட்சி யளித்தாள்.

விசுவநாதன் முதல் அத்தனை வீரர்களுமே தரையில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து எழுந்தனர்.

''இந்த நாட்டுக்குப் புத்துயிரும் புது வள மும் புதிய நம்பிக்கையும் ஊட்டுவதற்கு நீ எனக்கு அருள் தர வேண்டும், தாயே! நான் இதை அழிக்க வரவில்லை. ஆக்க வந்திருக் கிறேன்; காக்க வந்திருக்கிறேன்!'' என்று வேண்டிக் கொண்டான் விசுவநாதன்.

அந்தக் கோயிலுக்குள் அவன் கழித்த சிறு பொழுது புத்துயிரும், புதுத் துணிவும் கொடுத்த பொழுதாக இருந்தது. கிருஷ்ண தேவராயரை எப்படி அவன் தனக்கொரு வழிகாட்டியாகக் கொண்டிருந்தானோ, அவ் வாறே அவன் கங்கை கொண்ட சோழனையும் ஏற்றுக் கொண்டான். வாழ்நாள் என்ற குறு கிய எல்லைக் கோட்டுக்குள் மற்றக் கோடானு கோடி மனிதர்களைப் போல் அவர்களும் கட்டுப்பட்டிருந்தாலும், காலத்தை மீறி நிலைத்து நிற்கும் பல அற்புத சாதனைகளை அவர்கள் செய்துவிட்டுப் போய்விட்டார்கள். கங்கை கொண்ட சோழபுரத்தில் அன்று அவரால் உருவாக்கப்பெற்ற கொற்றவைத் தேவி, அந்த நகரம் சீரழிந்த பின்னருங்கூட அதன் மக்களின் வீரத்தைப் பாதுகாத்து வந்திருக்கிறாள். வேறெங்கும் தோன்றாத எதிர்ப்பு அங்கு மட்டும் அவனுக்குத் தோன் றியதல்லவா? அந்த எதிர்ப்பே அவனுக்கு அந்த மாவீரரின் நினைவைத் தந்தது.

நகரத்தை விட்டு அவன் விடைபெற்றுக் கொள்ளும்போது அங்கிருந்த குடிமக்களிடம் அவன் கூறினான்:

''உங்களில் வீரர்களாக இருப்பவர்களுக்கு இனி வேலை இல்லை என்ற சோர்வு வேண் டாம். அவ்வாறே சிற்பக் கலையில் தேர்ச்சி பெற்ற குடும்பங்களைச் சேர்ந்தவர்களும் இனிக் கவலையுற வேண்டாம். விரைவில் உங்களுக்கு நான் செய்தி அனுப்புகிறேன்.''

சென்றவிடங்களி லெல்லாம் புதியதொரு நம்பிக்கையின் வித்துக்களைத் தூவிவிட்டு மதுரையை நோக்கிச் சென்று கொண்டிருந் தான் விசுவநாதன். ஆனால் அதே சமயம் சோழ நாட்டின் உட்புறங்களில் விஜயநகரத் தின் வீரர்களைப் பற்றிய அச்சம் தரும் செய்தி களும் எப்படியோ பரவிக் கொண்டிருந்தன. யார் இந்தச் செய்திகளைப் பரப்பினார்கள் என்றே தெரியவில்லை. (தொடரும்)

# பிரஹ்லாத பக்தி விஜயம்

(ஸ்ரீ தியாகராஜரின் இசை நாடகம்)

'ராமா, உன்பால் பக்தியுடன் கூடிய ஸங்கீதத்தின் ஞானமற்றவர்க்கு மோக்ஷம் உண்டா?' ('மோக்ஷமு கலதா, ஸாரமதி) என்று தியாகராஜ ஸ்வாமிகள் கேட்டதிலிருந்து ஸத்பக்தியுடன் கூடிய சங்கீதத்தின் மகிமையை நாம் ஒருவாறு அறியலாம். ஸ்வாமிகள் நாதோபாஸகரான சங்கீத யோகி; சங்கீதத்தையே மோக்ஷ மார்க்கமாகக் கொண்டவர். கலை அர்ப்பணம் செய்தவர். கலை அர்ப்பணம் என்பது ஓர் அரும்பெரும் தத்துவம். எல்லா ஞானங்களுக்கும், எல்லாக் கலைகளுக்கும் இருப்பிடமான பரமேச்வர சக்தி ஒன்றே ஆனபடியால் நம் கலைத் திறன் எவ்வளவு புகழுக்குரியதாக இருந்தபோதிலும், அதை மூலாதாரமான அந்தச் சக்திக்கே அர்ப்பணம் புரிவதால் மானிடன் உடனடியாகவே அகங்காரம், மமதை, பொறாமை, சிறுமைப்படல் என்ற கலை மாசுகளிலிருந்து விடுபடுகிறான்.

தியாகராஜ ஸ்வாமிகள் இயற்றிய இசை நாடகங்கள் இரண்டில் 'நௌகா சரித்திரம்' என்பதைத் தமிழாக்கம், இசைக் குறிப்புக்களுடன், மிக அழகாக ஆசிரியர் சாம்பமூர்த்தி அவர்கள் பல ஆண்டுகள் முன்பே வெளியிட்டுள்ளார். 'பிரஹ்லாத பக்தி விஜயம்' என்ற இந்த இசை நாடகம், அதைவிட அளவில் பெரியது; இன்னும் ஆழ்ந்த கருத்துக்களும் பக்தி உணர்ச்சியின் செறிவும் கூடியது. இது வரை இதை அறிந்தவர்கள் மிகச் சிலரே, 'ஸ்ரீ கணபதி' (சௌராஷ்டிரம்) 'நந்நு விடசி' (ரீதி கௌளை) 'ராரா மாயிண்டி தாக' (அஸாவேரி) போன்ற க்ருதிகளை ஸங்கீத வித்வான்கள் கச்சேரிகளில் வழக்கமாகப் பாடி வந்துள்ளனர். இவை இந்த நாடகத்தில் உள்ள ரத்தினங்கள்.

இந்த அருமையான இசை நாடகத்தின் பூர்வாங்கமான பத்யங்களிலிருந்து சில அரும் செய்திகள் நமக்குக் கிடைக்கின்றன. 'ஸ்ரீ பஞ்சநதபுரம் என்ற பெயருடன் புவிமீது விளங்கும் சிறந்த பட்டணத்தில் ஸ்ரீ ராம பிரானின் அவதாரமே என்று போற்றத் தகுந்த ஸ்ரீ ராமப்பிரம்மத்தின் புதல்வன் நான்' என்று ஸ்வாமிகள் கூறுவது அவருடைய பித்ரு பக்தியை விளக்குகிறது. துளசி தாஸர், புரந்தர தாஸர், பத்ராசல ராம தாஸர் என்ற மூவரையும் தனித் தனியாகப் போற்றியிருப்பது மிகவும் ரஸமான உண்மை எனலாம். இசை நாடகத்தில் தொடங்கும் ராகத்திலேயே அதை முடிப்பது என்ற மரபையொட்டி, 'ஸ்ரீ கணபதி' என்ற சௌராஷ்டிர ராகத்தில் தொடங்கும் க்ருதியை முதற் பாட்டாக இயற்றிய ஸ்வாமிகள் ஸகலரும் அறிந்த, 'நீ நாம ரூபமுலகு' என்ற மங்களத்தை அதே ராகத்தில் பாடி முடிக்கிறார்.

நவரசங்களும் இந்த இசை நாடகத்தில் மிளிர்கின்றன. ஆனால் தனித் தனியாக ஒன்றோடொன்று உறவில்லாமல் அல்ல. யாவும் பக்தியில் பிறந்து, பக்தியில் பெருகி, பக்தி வெள்ளத்தில் தாமரைகள் போல் பூத்திருக்கின்றன. ரஸங்களுள் மிக லலிதமான ச்ருங்கார ரஸத்தை பகவானுக்கும் லக்ஷ்மி தேவிக்கும் வைகுண்டத்தில் ஏற்படும் வாதத்தில் ஸ்வாமிகள் அற்புதமாகக் கையாண்டிருக்கிறார்.

'பிரஹ்லாத பக்தி விஜயம்' என்ற இந்த நாடகத்தில் ஹிரண்ய வதம் அடங்கவில்லை. பிரஹ்லாதனுடைய பக்தி முதிர்ச்சி, பக்தியின் விஜயம், பகவத் ரூப ஸாக்ஷாத்காரம் இவைகளே நாடகத்தின் உட்கிடை. நாடக பாத்திரங்களின் பேச்சு மூலமாகவே, பிரஹ்லாதன் தாய் வயிற்றில் கருவாக உள்ள காலத்தில் நாரத உபதேசம் பெற்றது போன்ற செய்திகள் (அதாவது பூர்வ கால சரித்திரம்) நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன.

ஸ்வாமிகள் இந்த நூலின்கண் கையாண்ட ராகங்களில் சங்கீத ரஸிகர்கள் விசேஷமாய்க் கவனிக்க வேண்டியவை நடபைரவி (20) ஜன்யமாகவும், நிஷாதாந்தியமாகவும் காணப்படும் நாக காந்தாரி, கண்டா (20வது மேளம்), யமுனா கல்யாணி, ஆஹிரி, பரஸ எனலாம். சில அற்புதக் கீர்த்தனைகள் இன்னும் பாடப்பட்டு வெளிவர வேண்டியவை. தமிழாக்கம் புரிந்த ஸ்ரீ பார்த்தசாரதி, இசை வடிவங்களை விளக்கியுள்ள ஸ்ரீ எஸ். ராமநாதன், இருவரும் பரம பக்தி சிரத்தையுடன் மிகவும் போற்றுதற்குரிய முறையில் தங்கள் கைங்கரியங்களைப் புரிந்திருக்கின்றனர்.

பதிப்பாசிரியர்: சங்கீத பூஷணம் எஸ். இராமநாதன்; தமிழில் மொழிபெயர்த்தவர்; டி. எஸ். பார்த்தசாரதி, (வடகிழக்கு எல்லைப் புற ரயில்வே, அஸ்ஸாம்) கிடைக்குமிடங்கள்: பெரம்பூர் சங்கீத சபை, பெரம்பூர், சென்னை-11; கலைமகள் இசைக் கல்லூரி, ஸைடோஜி தெரு சென்னை-5. விலை ரூ 5-00

— பிரதம நீதிபதி மா. அனந்தநாராயணன்

இந்நூலை அச்சிட்டு வெளியிட்டதற்கான செலவை ஈடுகட்டும் பொருட்டு இம்மாதம் 31ந் தேதியன்று ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் பெரம்பூர் சங்கீத சபையின் ஆதரவில், சென்னை மவுண்ட்ரோட் பாலர் அரங்கில் மாலை 5-30 மணிக்கு உதவிக் கச்சேரி வழங்குகிறார்.

# ஸ்ரீ கிருஷ்ண கான ஸபா, தி. நகர்; சென்னை

(போன்: 42806)

## கோகுலாஷ்டமி ஸங்கீத உத்ஸவம்

## (ஆகஸ்டு, செப்டம்பர், அக்டோபர் 1966)

### ஆகஸ்டு

| | | |
|---|---|---|
| 6 சனி | மாலை 4.30 மணி | ஸபா ஸங்கீத வித்யாலயா மாணவர்கள் — பிரார்த்தனை |
| | 6-00 ,, | என். ரமணி (புல்லாங்குழல்)—எம். எஸ். கோபாலகிருஷ்ணன்—உபேந்திரன்—கல்யாணராமன் |
| 7 ஞாயிறு ,, | 3-00 ,, | வி. ராமச்சந்திரன்—எல். சுப்பிரமணியம்—காரைக்குடி மணி |
| | 5-30 ,, | செம்மங்குடி—வி. தியாகராஜன்—சிவராமன் |
| 15 திங்கள் ,, | 3-00 ,, | பி. வி. ராமன் & பி. வி. லக்ஷ்மணன்—புதுக்கோட்டை ராமநாதன்—திண்டுக்கல் ராமமூர்த்தி—கல்யாணராமன் |
| | 6-00 ,, | கானன் & மாளவிகா கானன் & பார்டி—ஹிந்துஸ்தானி சங்கீதம் |
| 20 சனி ,, | 6-00 ,, | ஆலத்தூர் ஸ்ரீநிவாஸய்யர்—கோவிந்தராஜ பிள்ளை—பாலக்காடு மணி—வி. நாகராஜன் |
| 21 ஞாயிறு ,, | 3-00 ,, | மஹாராஜபுரம் நாகராஜன் & வி. முத்துஸ்வாமி—வி. லக்ஷ்மிநாராயணன்—ஈச்வரன் |
| | 5-30 ,, | பாலமுரளிகிருஷ்ணா-எம்.எஸ். கோபாலகிருஷ்ணன்-முருகபூபதி |
| 27 சனி ,, | 6-00 ,, | எஸ். கல்யாணராமன்—டி. ருக்மிணி—டி.கே. மூர்த்தி—கந்தசாமி |
| 28 ஞாயிறு ,, | 3-00 ,, | ஏ. ஸ்ரீநிவாஸராகவன்—திருப்பாபுலியூர் ராஜம்—பழனிகுமார் |
| | 5-30 ,, | மதுரை மணி—லால்குடி—மணி—கிருஷ்ணய்யங்கார் |
| 29 திங்கள் ,, | 6-30 ,, | ஷேக் சின்ன மௌலானா சாஹிப் — நாதஸ்வரம் |
| 30 செவ்வாய் ,, | 6-30 ,, | எம். எல். வஸந்தகுமாரி—டி. ருக்மிணி—டி.கே. மூர்த்தி—கே.எம். வைத்தியநாதன் |

### செப்டம்பர்

| | | |
|---|---|---|
| 2 வெள்ளி ,, | 6-30 ,, | ஜான் ஹிக்கின்ஸ் பாகவதர்—வி. தியாகராஜன்—டி. ரங்கநாதன் |
| 3 [illegible]னி ,, | 6-[illegible]0 ,, | மதுரை சோமு—லால்குடி—சிவராமன்—வி. நாகராஜன் |
| 4 ஞாயிறு ,, | 3-00 ,, | வைரமங்கலம் லக்ஷ்மிநாராயணன்—எஸ்.பி. சேதுராமன்—உமையாள்புரம் நடராஜன் |
| | 5-30 ,, | எம். எஸ். சுப்புலக்ஷ்மி—வி.வி. சுப்பிரமணியம்—டி.கே. மூர்த்தி—விநாயகராமன் |
| 7 புதன் ,, | 7-00 ,, | எம்பார் விஜயராகவாச்சாரியார் — ஹரிகதை |
| 8 வியாழன் ,, | 6-30 ,, | சிட்டிபாபு (வீணை)—கிருஷ்ணய்யங்கார்—உபேந்திரன் |
| 10 சனி ,, | 3-00 ,, | ஆர். வேதவல்லி—வி. லக்ஷ்மிநாராயணன்—ஈச்வரன் |
| | 5-30 ,, | வோலேடி வெங்கடேச்வர்லு—எம். சந்திரசேகரன்—சங்கரன்—சியாமசுந்தர் |
| | இரவு 9-00 ,, | ஏ. கே. ஸி. நடராஜன் & பார்ட்டி — கிளாரிநெட் |
| 11 ஞாயிறு | மாலை 3-00 ,, | எல். வைத்தியநாதன்—எல். சுப்ரமணியன்—எல். சங்கர் (3 வயலின்கள்)—காரைக்குடி மணி—சுபாஷ் சந்திரன் |
| | 5-30 ,, | எம். டி. ராமநாதன்—லால்குடி—மணி |
| 17 சனி ,, | 6-00 ,, | டி. கே. ரங்காச்சாரி—எம்.எஸ். கோபாலகிருஷ்ணன்—ராமபத்ரன்—திருவாரூர் நாகராஜன் |
| 18 ஞாயிறு ,, | 3-00 ,, | மணி கிருஷ்ணஸ்வாமி—கமலாசர்மா—பி. ஸ்ரீனிவாசன் |
| | 5-30 ,, | லால்குடி (ஸோலோ வயலின்)—மணி |
| 24 சனி ,, | 6-00 ,, | தண்டபாணி தேசிகர்—சேதுராமய்யா—ராமபத்ரன் |
| 25 ஞாயிறு ,, | 3-00 ,, | ஸுகுணா—ஆலத்தூர் நடராஜன்—தஞ்சை சிவப்பிரகாசம் |
| | 5-30 ,, | பாலசந்தர் (வீணை)—டி. ருக்மிணி—டி. வி. கோபாலகிருஷ்ணன் |

### அக்டோபர்

| | | |
|---|---|---|
| 1 சனி ,, | 6-00 ,, | எஸ். ராஜம்—அழகிரிசாமி—துரை—கண்டதேவி ஸ்ரீநிவாஸன் |
| 2 ஞாயிறு ,, | 3-00 ,, | டி. எஸ். சங்கரன் (புல்லாங்குழல்)—திருப்பாபுலியூர் ராஜம்—பந்தநல்லூர் பி. ஸ்ரீநிவாஸன் |
| | 5-30 ,, | பி. எஸ். நாராயணஸ்வாமி—வீரராகவன்—ராமபத்ரன்—கும்பகோணம் ராஜப்பையர் |

ஸீஸன் டிக்கட்: ரூ. 100, 60, 40 & 20 தினசரி: ரூ. 10. 5, 3 & 2

பகல் 3 மணி கச்சேரிகளுக்கு கட்டணம் கிடையாது. அனைவரும் வருக!

நாட்டிய, நாடக நிகழ்ச்சிகளை அக்டோபர் 8ந் தேதியிலிருந்து எதிர்பாருங்கள்

இருமதிஜீ ராஜா

'டீனர்' என்று அப்பாசாமியின் மோவாயைக் கந்தசாமியின் கை தாக்குகிறது. கடன் வாங்கிக் கட்டிக் கொண்ட அவருடைய பொய்ப் பற்கள் தரையில் குதிக்கின்றன. மோதலுக்குக் காரணம்? ஜாடிச் சீட்டை வைத்துக் கொண்டே கந்தசாமியின் சீட்டைத் துருப்பால் வெட்டி விட்டார். இவைகளெல் லாம் சீட்டாட்டங்களில் வழக்கமாக நடக் கும் மரியாதைகள்தான். இப்படி மனிதனை மிருகமாக மாற்றும் இந்தச் சீட்டின் சரித் திரம் எத்தனை பேர்களுக்குத் தெரியும்?

சீட்டை முதலில் கண்டுபிடித்தவர் யார் என்பதைப் பற்றிச் சீட்டுக் கட்டுகளிலுள்ள சீட்டுக்களை விட அதிகமான அபிப்பிராயங்கள் உள்ளன. ஒருசிலர், இந்தியாவிலிருந்துதான் இவைகள் வந்தன என்று சொல்லுகிறார்கள். புராதன இந்தியச் சீட்டுக்கள், மெல்லிய தந்தத்தினாலானவை. அவைகளில் பருவங்களையோ, அல்லது சரித்திர வீரர்களையோ குறிக்கும் படங்கள் பொறிக்கப்பட்டிருந்தன. ஒரு ஹிந்து மகாராஜா எப்போதும் தம் தாடியைத் தடவிக் கொண்டே யிருந்தாராம். அதைப் பார்க்கச் சகிக்காத அவருடைய மனைவி, சீட்டைக் கண்டுபிடித்து அவர் கையில் கொடுத்ததாகச் சொல்லப்படுகிறது. அன்றிலிருந்து அந்த ராஜா தம் தாடியைத் தடவுவதை நிறுத்திவிட்டாரா அல்லது சீட்டையும், தாடியையும் சேர்த்துத் தடவிக் கொண்டிருந்தாரா என்பது கேள்விக்குரிய விஷயம். பொதுவாக, சீனாவை ஆண்ட சக்கர வர்த்தி ஸியூன் ஹோ என்பவர்தான் சீட்டைக் கண்டு பிடித்ததாகப் பெருவாரியான மக்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். அவருக்கு அநேக மனைவிமார்கள் இருந்தார்களாம். அவர்கள் ஒருவருக்கொருவர் செய்துகொண்ட சண்டை சச்சரவுகள், தான் ஆள வேண்டியது மக்களையா, அல்லது மனைவிகளையா என்ற சோதனையை அவருக்கு ஏற்படுத்தியது போலும்! யோசித்துப் பார்த்தார். 120 சீட்டுக்களைக் கொண்டு விளையாடும் ஒரு விளையாட்டை அவர்களுக்குச் சொல்லிக்

கொடுத்தார். இந்தச் சமாதான வழி எவ்வளவு பலனளித்தது என்று கேட்டறிய ஸியூன் — ஹோ இன்று நம்முடன் இல்லை!

இப்படி ஆரம்பித்த சீட்டுக்களைக்கொண்டு ஓர் ஆட்டம் மட்டும் இன்று அமெரிக்காவில் நூறு கொலைகள், நான்கு தற்கொலைகள், மேலும் கணக்கிலடங்காத விவாகரத்துக்களுக்குக் காரணமாயிருக்கிறது!

ஐரோப்பாவில் சீட்டாட்டம் எப்போது ஏற்பட்டது என்பது சரியாகத் தெரியவில்லை. 'ஸாரஸென்ஸ்'களிடமிருந்து, புனிதப் போரின்போது கொண்டு வரப்பட்டது என்று இத்தாலியர்கள் கருதுகிறார்கள். 'மூர்ஸ்'களால் கொண்டு வரப்பட்டது என்பது ஸ்பெயின் தேசத்தவர்களின் அபிப்பிராயம். 'ஜிப்ஸீஸ்' என்ற நாடோடிகள் கொண்டு வந்திருக்கலாமென்றும் எண்ணப்படுகிறது. ஆனால், ஐரோப்பாவில் 1350ஆம் ஆண்டிலேயே சீட்டாட்டம் இருந்திருக்கிறது. 'ஜிப்ஸீஸ்'கள் 1417ஆம் ஆண்டுக்குப் பிறகுதான் ஐரோப்பாவுக்குச் சென்றிருக்கிறார்கள்.

மிகவும் புராதன சீட்டுக் கட்டு, 78 சீட்டுக்களடங்கிய இத்தாலிய 'டராட்' என்பது. தற்பொழுது 52 சீட்டுக்களே உள்ளன. 'டராட்'டிலுள்ள 26 அதிகப்படியான சீட்டுகளில் 4 அதிக ஜாக்கிகளும், 22 துருப்புகளும் (அடௌட்) உள்ளன. இந்தத் துருப்புகள் பிறப்பு, காதல், பிணி, மின்னல், பணம், பஞ்சம், சாவு போன்ற இயற்கை நியதிகளைப் படங்கள் மூலமாகக் குறித்தன. நாளடைவில் இந்த 4 அதிகப்படியான 'ஜாக்கி'களும் 22 துருப்புகளும் மறைந்து விட்டன. ஆனால் 'மடமை' என்ற சீட்டு மட்டும் எப்படியோ தப்பித்துக் கொண்டு இன்றுள்ள 'ஜோக்க'ராக மாறியிருக்கிறது.

நான்கு ஜாதிச் சீட்டுக்களும் இன்றுள்ளதைப் போல் ஆரம்பத்தில் இல்லை. ஸ்பெயினில் நான்கு ஜாதிகளும், கோப்பை, வாள், 'நாணயம்', 'இத்தாலியத் தடி' போன்றவைகளைக் குறித்தன. டியூடர்கள், 'நாய்', 'வாத்து', 'பருந்து', 'மான்' போன்ற நான்கு விதப் பிராணிகளை அடையாளமாக வைத்துக் கொண்டார்கள். பிரெஞ்சுக்காரர்கள், 'இருதயம்', 'மணி', 'இலை', 'தேக்குப் பழம்' போன்றவைகளைச் சின்னமாக உபயோகித்தார்கள். தற்போதுள்ள 'கிளாவர்' (கிளப்ஸ்) 'இஸ்பேட்', 'ஆடுதன்', 'டயமண்ட்' என்ற அடையாளங்கள் 1425ஆம் ஆண்டு எடீனெ டி விக்னோலிஸ் என்பவரால் ஏற்படுத்தப்பட்டது. முடியரசைக் குறிக்கும் செங்கோலை 'இஸ்பேடா'க மாற்றியமைத்தார். மாதா கோவிலைக் குறிக்கும் புனிதக் கோப்பை 'ஆடுதனாக' மாறியது. 'கிளாவர்' குடியானவர்களையும், டையமண்ட் பணக்கார வியாபாரிகளையும் குறிக்கின்றன. ராஜாச் சீட்டில் உள்ள படம் 'சார்ல்மேன்' என்பவரையும் ராணியில் உள்ளது, பவேரியா தேசத்து ராணி ஜூடித்தின் மருமகளையும் குறித்தன. ஜாக்கி, 'விக்னோலியஸை'த் தழுவியதாகத் தெரிகிறது.

ஆங்கிலேயர்களும் பிரெஞ்சுக்காரர்களைத் தழுவினார்கள். ஆனால் ராஜா சீட்டில் எட்டாவது ஹென்றியின் படத்தையும், ராணி சீட்டில் யார்க் எலிஸபெத்தின் படத்தையும் பொறித்தார்கள். ஜாக்கியிலுள்ள படம் ஏதாவது ஒரு வீரனையாவது அல்லது அரண்மனை விதூஷகனையாவது குறிக்கலாம்.

இருபதாவது நூற்றாண்டில் அநேகமாகப் பெரும்பாலான தேசங்களில் முடியரசு மறைந்து மக்கள் ஆட்சி ஆரம்பித்திருக்கிறது. அநேக அரச குடும்பங்கள் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டன. ஆனால் சீட்டு உலகத்தில் மட்டும் இந்த மாதிரியான மாறுதல்கள் நினைத்தால் கூட நடக்காது. ராஜா, ராணியைக் குறை சொன்னாலே அபசாரம்! சீட்டாட்ட பக்தர்கள் வீறு கொண்டு எழுந்து விடுவார்கள். அமெரிக்கப் புரட்சிக்குப் பிறகு ராஜா, ராணிக்குப் பதிலாக அமெரிக்க ஜனாதிபதிகளான ஜெபர்ஸன், வாஷிங்டன் போன்றவர்களின் படங்களைப் புகுத்திப் பார்த்தார்கள். பலன் சீட்டுக் கட்டுக்களைத் தயாரித்த கம்பெனிகளில் பல, அநேகமாகத் திவாலாகி விட்டன. பிரான்ஸ், ரஷியா, போன்ற நாடுகளிலும் இதே கதைதான். மறுபடியும் முடியரசு நிலைநாட்டப்பட்டது!

ஒரு நூற்றாண்டுக்கு முன்புதான் சீட்டுகளில் முக்கியமான மாறுதலொன்று ஏற்பட்டது. சீட்டுக்களை மேலும் கீழும் ஒரே மாதிரி அமைத்துத் தலைகீழாகத் தோன்றாதபடி செய்யப்பட்டது.

சீட்டுக் கட்டுக்களைத் தயாரிப்பது மிகவும் கடினமான வேலை. அச்சடிக்கும்போது நுண்ணிய அடையாளங்கள் ஏதாவது ஏற்பட்டு விட்டால்கூட, விளையாடும்மேஜை போர்க்களமாகிவிடும். சமீபத்தில் அமெரிக்காவில் ஒரு கம்பெனி சுமார் 150,000 சீட்டுக் கட்டுகளை வாபஸ் வாங்கி விட்டதாம். காரணம், எளிதில் கண்ணுக்குத் தெரியாத மிகவும் நுண்ணிய குறையொன்றை 'டயமெண்ட்' சீட்டுக்களுக்குப் பின்னால் கண்டுபிடித்து விட்டதால்! மேலைநாடுகளில் சீட்டுகள் அச்சடிக்கும் வேலை முழுதும் தூசியே புக முடியாத அறைகளில் நடக்கின்றன. நுட்பமான 'எலெக்ட்ரானிக்' இயந்திரங்களால் தயாரிக்கப்படுகின்றன.

என்னுடைய நண்பர் ஒருவர் சீட்டாட்டத்தில் புலி. அவருடன் விளையாடும் ஒருவரையாவது இதுவரை அங்கங்களில் பழுதில்லாமல் வெளியே செல்ல அனுமதித்ததில்லை! அவ்வளவு பெருந்தன்மை உள்ளம் படைத்தவர்! உங்களுக்கும் இதே போல் பல நண்பர்கள் இருக்கலாம். கீழ்க்கண்ட கேள்விகளை அவர்களிடம் கேட்டுப் பாருங்கள். ஆனால் ஓர் எச்சரிக்கை. உங்கள் இருவருக்கும் இடையே உள்ள தூரம் சுமார் எட்டடியாவது இருக்கட்டும்! சீட்டுக்கட்டிலுள்ள அரசர்களில் எத்தனை பேருக்கு மீசை இருக்கிறது? ஒவ்வொரு ராணியும் கையில் என்ன வைத்துக் கொண்டிருக்கிறாள்? எந்த அரசர் கையில் வாள் இருக்கிறது? எத்தனை பேர் வெறும் கையுடனிருக்கிறார்கள்? ஜாக்கிகளின் சிகை அலங்காரம்/ எத்தனை வகை?

ஆதாரம்: பேஜண்ட்
எழுதியவர்: ருக்மிணி ராமன்



செல்வன் : R. பழனிஸ்வாமி B. Sc. செல்வி : G. சாந்தாலக்ஷ்மி

மணமகன் - சேலம் திரு A. இரத்தினவேலு கவுண்டர் M. L. A., வின் குமாரர்.

மணமகள் - வடபழனி ஆண்டவர் தேவஸ்தான அறங்காவலரும், சென்னை ஷண்முகம் பிராண்ட் ஸ்டீல் டிரங்க் ஒர்க்ஸின் உரிமையாளருமான திரு C. ஞானசுந்தர நாயகரின் குமாரி இவர்களின் திருமணம் சமீபத்தில் சேலத்தில் நடந்தேறியது.



# மலேசியா மாநாடு

## சா. கணேசன் எம்.எல்.ஏ.,

திரு ஐராவதம் மகாதேவன் நிகழ்த்திய படவுரையில் கண்டவற்றுள் ஒரு கல்வெட்டையாவது காட்டா விட்டால் உங்களுக்கும் திருப்தி ஏற்படாது. எனவே, ஒன்றைமட்டும் கீழே★ பார்க்கலாம்.

**[தா] அமணன் யாற்றூர் செங்காயபன் உறைய**
**கோ ஆதன் சே[ர]ல்லிரும் பொறை மகன்**
**பெருங் கடுங்கோன் மகன்[இ]ளங்**
**கடுங் கோ[இ]ளங்கோ ஆக அறுத்தகல்**

அடுத்து, தற்காலத் தமிழ் எழுத்தில் உள்ள பகுதி.

அமணன் (ஆடையற்ற சமணத் துறவி) ஆற்றூர் செங்காயபன் தங்கியிருக்கும் பொருட்டுக் கோ ஆதன் சேரல் இரும் பொறை மகன் பெருங்கடுங்கோன் மகன் இளங்கடுங்கோ—இளங்கோ என்ற முறையில் குடைவரை செய்யப்பட்டது.

இக்கல்வெட்டு புகளூரை அடுத்துள்ள ஆறுநாட்டான் மலையில் உள்ளது. கி. பி. இரண்டாம் நூற்றாண்டை ஒட்டியது.

இனிச் சிறிது தேநீர் அருந்திவிட்டு மாநாட்டு மண்டபத்துக்குச் செல்வோம்.

எல்லோரும் மாநாட்டு மண்டபத்துக்கு வந்து சேர மணி பன்னிரண்டு அடித்து விட்டது. லெய்டன் பல்கலைக் கழகத்துப் பேராசிரியர் கூய்ப்பர் தலைமை ஏற்றார். "திராவிட ஒப்பீட்டு மொழியியல்" என்ற பொதுத் தலைப்பில் பல வெளிநாட்டுப் பேரறிஞர்கள் எழுத்துரையை வழங்கினார்கள். கலிபோர்னியா பல்கலைக் கழகத்தைச் சார்ந்த பேராசிரியர் எமனியூ விவாதத்தைத் தொடங்கி வைத்தார். கொலம்பியா பல்கலைக் கழகத்துப் பேராசிரியர் கார்ல் மெஸ்கேல், இலங்கைப் பேராசிரியர் சதாசிவம், சென்னைத் தமிழ்ப் பண்பாட்டுக் கழகத்து திரு சுப்பையா, ஹவாயி பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த பேராசிரியர் நோல்டன், பிலிபைன்ஸ் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த பேராசிரியர் ஜான் பிரான் ஸிஸ்கோ, மலேசியா பேராசிரியர் ஆஸ்மா பிந்தே ஹாஜி ஓமார், எடின்பரோப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த பேராசிரியர் ஆஷர், மலேசியாவைச் சேர்ந்த இருவாளர்களான கிங்ஸ்லி, ராம. சுப்பையா ஆகியவர்கள் தமிழ், மலையாளம், தெலுங்கு முதலான மொழிகளைப் பற்றியும் பொதுவாக, திராவிட மொழிகளைப் பற்றியும் ஆய்வுரைகளை வழங்கினர். சுமார் 1-45 மணிக்கு இருக்கை கலைந்தது. மொழியியல் ஆராய்ச்சி அதுவும் ஒப்பு நோக்கிச் சொற்களின் வேர்களைத் தோண்டித் துருவிச் செய்யும் சோதனை என்றும் எல்லோருக்கும் அது கவர்ச்சியாக இருக்க முடியாதல்லவா? எனவே, இங்கு கேட்கக் கூடியிருந்தோர் தொகை குறைந்து கூட்டம் மிகவும் மெலிந்து காணப்பட்டதில் வியப்பில்லைதானே?

அன்று பிற்பகல் சுமார் மூன்று மணிக்கு ஒரே காலத்தில் இரு வேறு குழுக்கள் தனித் தனியாகக் கூடின. ஒன்று மாநாட்டு மண்டபத்திலும், மற்றொன்று ஓய்வு மண்டபத்திலும் நடந்தன. பெருமக்களும் அவரவர்க்

★

குத் தொடர்புள்ள அல்லது அக்கறையுள்ள கூட்டத்துக்குச் சென்றமர்ந்தனர்.

மாநாட்டு மண்டபத்தில் கூடிய அரங்குக்கு ''முப் பேரரசின் சமுதாயம்'' என்பது பொதுத் தலைப்பு. அதில் டோக்கியோ பல்கலைக் கழகத்துப் பேராசிரியர் என் காஷிமா ''சோழர் காலத்துத் தென்னிந்தியக் கிராமங்களான அல்லூரும் ஈசான மங்கலமும்'' என்ற எழுத்துரையைச் சமர்ப்பித்தார். அது கருத்து வேறுபாட்டுக்கு நிறைய இடந் தரினும் ஒரு சிறந்த ஆராய்ச்சியாகும்: சோழர் காலத்துப் பிரமதேயமான ஈசானமங்கலம் என்னும் கிராமத்தையும், அங்ஙனம் பிரமதேயம் அல்லாத அல்லூர் என்னும் கிராமத்தையும் ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்டிருந்தார். இரு கிராமங்களிலும் காணப்படும் வேறுபாடுகளை யெல்லாம் கல்வெட்டுச் சான்றுகளின் உதவியுடன் ஆய்ந்து விவரித்துக் கூறினர். முடிவில் நிலங்கள், உடைமைகள், நிர்வாகம் எல்லாம் இரண்டிலும் ஒன்றுக்கு ஒன்று மாறுபட்டிருக்கிற தன்மையையும் விளக்கினார்.

பின்னர் ஜெர்மன் நாட்டுப் பேராசிரியர் ஆர்னோ லெஹ்மான், இலங்கைப் பெருமக்களான எச். டபிள்யூ. தம்பையா, தம்மரத்தின தேரா, என். சுப்பிரமணியன், சர் வேகவர ஐயர் ஆகியோரும் தத்தம் எழுத்துக்களைச் சமர்ப்பித்தனர்.

ஓய்வு மண்டபத்தில் கூடியஅரங்குக்கு, ''தமிழ் கற்பித்தல்'' என்பது பொதுத் தலைப்பாகும். பேராசிரியர் கெல்லர் தலைமை வகித்தாராம். நிகழ்ச்சி நிரலில் கண்டவர்களில் சிலர் வரவில்லையாம். வந்தவர்கள் தம் உரைகளை வழங்கினர். வராதவர்களின் எழுத்துப்படியைப் பிறர் படித்தார்களாம்.



மலேயா பல்கலைக் கழகத்திலுள்ள மசூதி. பல லட்சம் டாலர் செலவில் கட்டப்பட்ட இது இஸ்லாம் மாணக்கர்களுக்கும், அண்மையிலுள்ள பொது மக்களுக்கும் தொழுகையிடமாக விளங்குகிறது.

ஏப்ரில் 22 வெள்ளியன்று காலை 9-30 மணிக்கு நடைபெற்ற கூட்டம் மட்டுமே பொது அரங்காக இருந்தது. ''தற்காலச் சமுதாயம்'' என்பது பொதுத் தலைப்பு. அதில் நிகழ்ச்சி நிரலில் கண்டவர்களில் பலரும் பங்கு கொண்டார்களாம். ஆனால் நானும் வேறு சில நண்பர்களும் பினாங்கு முதலான இடங்கட்குச் சொற்பொழிவுக்காகச் சென்று விட்டோம். இவ்வரங்கில் கலந்து கொண்டவர்களில் குமாரி பிரெண்டா பெக் **(Brenda Beck)** என்பவர் பெரிதும் குறிப்பிடத் தக்கவர். இவர் பாட்டி டாக்டர் சோஃபியா ஃபாஸ் **(Dr. Sophia Fahs)** சமயத் துறைப் புலவர். சமயம் பற்றி நாற்பது நூல்கள் இயற்றியுள்ளாராம். இவர் தந்தை டாக்டர் எச். பி. பெக் **(H. B. Beck)** கல்வித் துறைப் புலவர். பேராசிரியராக நியூயார்க் பல்கலைக் கழகத்தில் பணிபுரிந்து வருகிறாராம். தாயார் டாக்டர் டோராதி ஃபாஸ் பெக் **(Dr. Dorothy Fahs Beck)** சமுதாயத் துறை ஆராய்ச்சி இயக்குநராகப் பணி புரிந்து வருகிறாராம்.

இத்தகைய கலைக் கொடியில் மலர்ந்த குமாரி பிரெண்டா பி. ஏ., பி. லிட். பட்டப் பரீட்சைகளில் தேறியும் ஆக்ஸ்போர்டில் டிப்ளமா தேர்ச்சி பெற்றும் சமுதாயத் துறை வரலாற்று ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ளார். தமிழகத்தில் கொங்குநாட்டு மக்களின் சமுதாய வாழ்வியலை ஆய்ந்து கொண்டிருக்கிறார். காங்கயத்துக்கு அண்மையில் உள்ள ஓலப்பாளையத்தில் தங்கியிருந்து கொண்டு விவரங்களைச் சேகரித்து ஆராய்வதில் ஈடுபட்டிருக்கிறார். மின்சார ஒளியும், ஆங்கில ஒலியும் இல்லாத இடத்திலிருப்பதுதான் தம் ஆராய்ச்சிக்கு உகந்ததாக இருக்கிறது என்று கூறுகிறார். பாப்பம்மாள் என்ற மூதாட்டியின் குடும்பத்துடன் தன்னை உறவு படுத்திக் கொண்டு விட்டார். கிராமங்கட்குச் சைக்கிள் அல்லது பஸ் மூலம் செல்கிறார். புகைப்படக் கருவியும், ஒலிப்பதிவுக் கருவியும் இவருக்குப் பெருந்துணையாக இருக்கின்றன. கிராமத்தவருடன் இவர் ஒன்றி விட்டார். சிவப்பு நிறத்தை மறந்துவிட்டால் இவரை ஒரு தமிழ்ச் சகோதரி என்று தான் சொல்லத் தோன்றும்.

தமிழ் நாட்டுச் சேலையையே அணிகிறார். காதில் துவாரம் போட்டுக் கொண்டு ஒரு சிறிய தோட்டையும் அணிந்து கொண்டிருக்கிறார். நெற்றியில் எப்பொழுதும் திலகம் துலங்கிக் கொண்டிருக்கிறது. எல்லாவற்



''இந்தாப்பா டிரைவர்! நான் சொல்லாத இடத்தில் நீ டாக்ஸியை நிறுத்திவிட்டு, வெயிட்டிங் சார்ஜ் கேட்டாயானால் தரமாட்டேன்னு, தரமாட்டேன்!''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

னுக்கும் மேலாக இனிமையாகத் தமிழ் பேசுகிறார். அதுவும் கொங்குநாட்டுத் தமிழ். 'இம்மாஞ்சோடு', 'கண்ட்ராவி', 'சொல்லிப் போட்டாக' என்பன போன்ற கிராமிய வழக்குச் சொற்களை பாவப் பொலிவோடு உச்சரிக்கும் போது அவர் பிற நாட்டுச் சகோதரி என்ற எண்ணமே நமக்கு உண்டாவதில்லை. மற்றொரு சிறப்பு என்னவென்றால் தன் பெயரை 'பி. பிருந்தா' என ஆங்கில ஒலிக்கேற்ப அமைத்துக் கொண்டுள்ளது தான். அவர் தம்மைப் பிருந்தா என்றழைப்பதை மிகவும் விரும்புவதாகக் கூறினார். 'முடியாது; நீங்கள் நன்றாகக் கொங்குத் தமிழ் பேசுகிறீர்கள். ஆனதால் உங்களைக் ''கவுண்டச்சி'' என்றழைப்பதே பொருத்தமாகும்' என்றேன். 'ரொம்ப மகிழ்ச்சி; அப்படியே அழையுங்கள்' என்றார் அச் சகோதரி.

''சுமார் ஒன்றரை ஆண்டுக்குள் இப்படிப் பேசவும், ஓரளவு எழுதவும் படிக்கவும் எப்படிக் கற்றுக் கொண்டீர்கள்?'' என்று கேட்டேன். 'அக்கறையும், ஆங்கிலமே அறியாத மக்களுடன் ஒன்றி வாழ்வதுமே' என்று பதிலளித்தார்.

மாநாட்டில் இவர், 'கோவை மாவட்டத்தின் முக்கிய வகுப்பினரைப் பற்றிய சமுதாயத்துவக் குறிப்புகள்' என்ற ஓர் அருமையான எழுத்துரையை வழங்கினார். அவருடைய மெய்யான , ஈடுபாட்டையும், பேருழைப்பையும் நேர்மையையும் அதில் நன்கு காண முடிந்தது. இஃதன்றி, மாரியம்மன் கோவில் பொதுக் கூட்டத்தில், ''கண்ணபுரத்து மாரியம்மன் கதை''யை இவர் இனிய மழலை மொழியில் பாவ உணர்ச்சி ததும்பக் கூறியது மறக்கவொண்ணாத நிகழ்ச்சியாகும்.

ஆராய்ச்சித் துறையில் ஈடுபடும் நம் மாணுக்கர்கள் இவரைப் பின்பற்றுவார்களானும் எத்துணை அளவு விழுமிய பயனை நம் மொழியும், நாடும் பெறும் என்பதைச் சொல்லவா வேண்டும்?

அமெரிக்க தேசிய விஞ்ஞான அறநிலையத்திலும், அமெரிக்க நாட்டு இந்தியத்துவ ஆராய்ச்சிக் கழகத்திலும் உறுப்பினராக உள்ள இவர் தம்முடைய ஆராய்ச்சியை ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் சமர்ப்பிப்பார். 'இன்னும் இரண்டாண்டுகளில் டாக்டர் பட்டம் பெற்று விடுவேன்' என்று கூறுகிறார்.

அன்று 11-30 மணிக்கு இருவேறு குழுக்கள் தனித் தனியே ஏககாலத்தில் கூடின. ஒன்று மாநாட்டு மண்டபத்திலும், மற்றொன்று ஓய்வு மண்டபத்திலும் நடந்தன. ஒன்று 'தமிழ் மொழியியல்' பற்றியது. மற்றொன்று 'மொழிபெயர்ப்பு' பற்றியது.

மொழி இயல் பற்றிய அரங்கில் பிலிடைபன்ஸ் பல்கலைக் கழகப் பேராசிரியர் ஜான் ஃபிரான்ஸிஸ்கோ தலைமை வகித்தார். ''ஆய்தம்—அதன் தோற்றமும் இயல்பும்'' என்றவோர் சிறந்த எழுத்துரையை மலாயா பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த திரு ஆர். ராதாகிருஷ்ணன் வழங்கினார். மலாயா பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த திரு அருணாசலம் மதுரைத் தமிழ்ச் சங்கத்து கே. பழநியப்பன், இலங்கைப் பல்கலைக் கழகத்து திரு தனஞ்செயராஜ சிங்கம், திரு வி. கே. சிவப்பிரகாசம், திரு எம். கணபதிப்பிள்ளை, காரைக்குடி அழகப்பா கல்லூரி முதல்வர் டாக்டர் வ. சுப. மாணிக்கம் முதலியோர் தத்தம் எழுத்துரைகளைச் சமர்ப்பித்தனர்.

''மொழி பெயர்ப்பு'' பற்றிய அரங்குக்குத் தமிழக அரசின் தமிழ் வளர்ச்சித் துறைச் செயலாளரான திரு வி. கார்த்திகேயன் தலைமையேற்றார். புதுச்சேரி உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதி திரு எஸ். மகராஜன் அரங்கைத் தொடங்கி வைத்தார். இலங்கைப் பல்கலைக் கழகத்துத் திரு எஸ். செல்வநாயகம், திரு ச. ரத்தினம் திரு கே. சிவத்தம்பி, திரு ஆர். அம்பிகைபாகர் ஆகியோர் ஆங்கிலத்திலிருந்து தமிழுக்கும் தமிழிலிருந்து ஆங்கிலத்துக்கும் மொழி பெயர்ப்பதில் கடைப்பிடிக்க வேண்டிய நெறியையும், ஏற்படுகிற சங்கடங்களையும் பற்றிய ரசமான எழுத்துரைகளை வழங்கினார்கள்.

மாலை 2-45 மணிக்கும் இப்படியே இருவேறு குழுக்கள் தனித்தனியே இரண்டரங்கிலும் ஏககாலத்தில் கூடின.

ஒன்று ''வாணிகமும் வெளிநாட்டுறவும்'' பற்றிய சில எழுத்துரைகளை அரங்கேற்றம் கொண்டது. ஒசாகாப் பல்கலைக் கழகப் பேராசிரியர் திரு தகாவோ நிஷிமுரா தலைமை பூண்டார். இலங்கைப் பேராசிரியர்

திரு விஜேதுங்கா, ஹாங்காங் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த திரு லோ ஹ்சியாங்—லின், ஹாங்காங் கல்வித் துறையைச் சேர்ந்த திரு சூ கங்—ஜென், இலங்கை ஆட்சி மொழித் துறையைச் சேர்ந்த திரு நடராஜா, பாளையங்கோட்டை பழங்கலையறிஞர் திரு அ. இராகவன், தனிநாயக அடிகள் முதலியோர் பங்கு கொண்டனர்.

பிறிதொன்று தமிழ் மொழியியற்கலை பற்றிய எழுத்துரைகளை அரங்கேறச் செய்தது. கலிபோர்னியா பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த திரு எம். பி. எமெனியோ தலைமை தாங்கினார். எடின்பரோ பல்கலைக் கழகத்துப் பேராசிரியர் திரு ஆர். ஈ. ஆஷர், இலங்கைப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த திரு ஏ. வேலுப்பிள்ளை, ஜெர்மானியரான ஹெய்ன்ஸ் டிட்டில்பாக், அமெரிக்கரான ஹெரால்டு ஷிஃப்மான், மலாயா பல்கலைக் கழகத்து திரு ராம சுப்பையா, இலங்கை திரு எஸ்.கே. முருகேசு, கலிபோர்னியா பல்கலைக் கழகத்து திரு ஜெரார்டு டிக்ப்லோத் முதலியோர் கலந்து கொண்டார்கள்.

மாநாட்டுக் கருத்தரங்குகளின் இறுதி நாளான இன்றோடு எழுத்துரைகள் சமர்ப்பிப்பது முடிவுற்றது. மூன்றாவது மாணவர் விடுதி கலகலப்பும் ஓய்ந்தது. கிட்டத்தட்டப் பாதிக்கு மேற்பட்டவர்கள் தத்தம் அறைகளைக் காலி செய்துவிட்டுப் பல்வேறு இடங்கட்கும் சென்றுவிட்டனர்.

ஏப்ரில் 23ம் தேதி சனிக்கிழமை. விடாயாற்றி உற்சவம் போல இருந்தது. ஒரு வாரம் கோலாகலமாக நடைபெற்ற மாநாடு இனிது நிறைவேறிய மகிழ்ச்சியில் கூடிய இக்கூட்டத்தில் பல பகுதித் தமிழர்களும் கலந்து கொண்டு மகிழ்ச்சியும், பாராட்டும் நன்றியும் கூறினார்கள்.

யாழ்ப்பாணம் சரா. சேதுகாவலர் தமிழ் வாழ்த்துப் பாடக் கூட்டம் தொடங்கிற்று. தனிநாயக அடிகள் தலைமை வகித்தார். தமிழ்த் திறனாய்வுத் துறை வளமும் வளர்ச்சியும் பெற வேண்டும் என்ற கருத்தைத் தலைமை உரையில் வற்புறுத்தினார். பின்னர் சரா. சேதுகாவலர் இந்திய மதங்களும்—இந்து தத்துவ விஞ்ஞானமும் என்ற பொருளில் பேசினார்.

அடுத்து மொரீஷியஸ் தீவில் தமிழ்மொழி வளர்ந்து வரும் நிலையை விவரித்து திரு எஸ். முதலி பேசினார்.

பின்னர் ''பர்மாத் தமிழ்'' பற்றித் திரு பாண்டியன் உரையாற்றினார். அடுத்து திரு கி. வா. ஜகந்நாதன் ''சங்க காலக் கவிதை'' என்னும் தலைப்பில் ஒரு சொற்பொழிவாற்றினார். அதனையடுத்து சிங்கப்பூர் திரு வை. திருநாவுக்கரசு பேசும் பொழுது பிழையற்ற தமிழ்ப் பேரகராதி வேண்டும் என்றும், கலைச் சொற்களின் பட்டியல் செம்மையானதாய் அமைக்கப்பட வேண்டும் என்றும், பிற மொழியினர் தாமே தமிழ் கற்க உதவும் நூல்கள் ஆக்கப்பட வேண்டும் என்றும் வற்புறுத்தினார்.

பின்னர் திரு இரா. நெடுஞ்செழியன் இம்மாநாட்டில் ஏற்பட்டுள்ள நன்மைகளைப் பட்டியலிட்டுக் காட்டிப் பாராட்டினார்.

மகாகவி பாரதியின் பேத்தி திருமதி விஜய பாரதியும், திரு ஔவை டி.கே. ஷண்முகமும் தமிழ்ப் பாடல்களை இரு செவியும் தேன் பாயப் பாடி மகிழ்வூட்டினர்.

வாழ்க, வளர்க என்ற வாழ்த்து முழக்கத்துடன் மாநாடு மங்கலமாக நிறைவுற்றது.

இந்த மாநாட்டின் இறுதியில் பல்வேறு பெருமக்களையும் மலாயா தீபகற்பத்தின் முக்கிய நகரங்கட்கும் இட்டுச் சென்று சொற்பொழிவாற்றச் செய்தனர். இதற்கான பணிகளைச் செய்ய 'மாநாட்டின் பின் சுற்றுச் சொற்பொழிவுக் குழு' (**Post - Conference Lecture Tours Committee**) என்ற ஒரு அமைப்பு நற்பணியாற்றியது. 'தமிழ் நேசன்'



ஆயர் இத்தாம்—சீனர் கோவில்

நாளிதழின் ஆசிரியரான திரு முருகு. சுப்பிரமணியன் அதன் தலைவர். மலர்ந்த முகமும், இனிய உரையும், செயலாற்றலும் உடைய அவர் பல்துறை அறிஞர்களையும் நைச்சியமாகப் பேசி இணங்கச் செய்வதில் அபார சமர்த்தர். வந்தவர்களை யெல்லாம் மூன்று பிரிவுகளாகப் பிரித்து வடக்கு, தெற்கு, கிழக்கு ஆகிய மூன்று பகுதிகட்கும் சென்று தமிழ் முழங்கச் செய்தார்.

எங்கட்குத் தெற்குப் பகுதியைத் தந்திருந்தார். 24—4—66ல் கோலாலம்பூரில் தொடங்கித் தெற்கு மாவட்டங்களில் பேசிவிட்டுச் சிங்கபுரத்தை அடைய வேண்டும் என்பது எங்கட்காக வகுத்த திட்டம். அப்படியானால் வடபாலுள்ள பல நண்பர்களின் அழைப்புக்கும் என்ன பதில் சொல்வது? எனவேதான் 22—4—66ல் பினாங்கு சென்றோம். இருவாளர்களான அ. ச. ஞானசம்பந்தன், மொ. அ. துரையரங்கனார், இன்சைப் புலவர் எஸ். இராமநாதன், தொல்பொரு



"நான் ஆபீசுக்குப் போகிற போது கூடப் பார்த்தேன். என் பட்டுப்புடவை இருந்தது இப்ப காணோமே? எங்கே போச்சு?"

"நான் தான் கமலம், அதைப் போட்டு உனக்காக, எவர்சில்வர் கொண்டை ஊசி ரெண்டு வாங்கினேன்."

---

ணதிபர் ஆர். நாகசாமி ஆகியோருடன் நானும் சென்றேன். சென்றதும் இராம கிருஷ்ண மண்டபத்தில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் நாங்கள் பேசினோம்.

அன்றும் மறுநாளும் பினாங்கிலும், சுற்றுப் புறங்களிலும் பார்க்க வேண்டியனவற்றைப் பார்த்தோம். வேளைக்கொரு வீடாக நண்பர்கள் அளித்த நல்விருந்து உண்டு மகிழ்ந்து அளவளாவினோம். ஆலயங்கள் பலவற்றுக்கும் சென்று வணங்கி உய்ந்தோம். குறிப்பாக டெனுக்காண்சன் திருக்கோயிலிலும் பினாங்குத் தண்ணீர்மலையான் திருக்கோயிலிலும் நடந்த வழிபாட்டில் உண்மையாகவே மனம் பறி கொடுத்து நின்றோம். கோயில்களின் தூய்மை, அமைதி கொலுவீற்றிருக்கும் சூழ்நிலை, மெய்யான ஈடுபாட்டுடன் செய்யப்படும் பூசை, இவை எல்லாம் கூடி ஒரு பவித்திரத் தன்மையை உருவாக்கியிருக்கின்றன.

23-4-66ல், பினாங்கில், சிவன் கோயிலில் ஒரு கூட்டத்துக்கு ஏற்பாடு செய்திருந்தனர். அதில் நாங்கள் இவரும் பேசினோம். அன்று மழையினால் சிறிது இடைஞ்சல் ஏற்பட்டாலும் ஆண்களும் பெண்களும் நிரம்பியிருந்தனர். மக்கட் சந்தடி நிறைந்த இடமாயிருந்தாலும், ஆண்களும் பெண்களும் குழுமியிருந்தாலும், கோயில் வழிபாட்டுக்கு மக்கள் வந்து கொண்டேயிருந்தாலும், கூட்டத்தில் பேசுவோருக்கோ, கேட்பவர்கட்கோ எவ்வித இடையூறும் இல்லாமலிருந்த அருமையை என்னென்னப் புகழ்வது? அப்படியொரு ஒழுங்கு நிலை; தற்கட்டுப்பாடு. அத்தகைய பொறுப்புணர்ச்சி அங்கு இயல்பாகவே நிலவுகிறது.

மறுநாட் காலை 24-4-66 அங்கிருந்து புறப்பட்டோம். வழியில் பாரப்பத்தாவில் காலை விருந்தருந்தினோம். அங்கிருந்து புறப்பட்டு ஈப்போ வந்து சில நண்பர்களுடன் அளவளாவி விட்டு வரும் வழியில் சீனர்களின் குடை கோயில் (Rock - Cut Temple) ஒன்றையும் கண்டோம். இது பெரும்பாலும் செயற்கைக் குகையே. மத்துமலைக்குகையோ முற்றிலும் இயற்கையானது. ஆனால் அந்த இயற்கையின் அருமை; செயற்கை அடைப்புக்கள், வாயிற்கட்டுகள் முதலியவற்றால் பாதிக்கப்படுகிறது என்று சொன்னால் சிலருக்கு என் மேல் கோபம்கூட வரலாம். அப்படிப்பட்டவர்களின் பக்திக்கோ அல்லது கைங்கரியத்துக்கோ நான் குறையொன்றும் சொல்லவில்லை. அவர்களின் எண்ணச் சுத்தத்தையும் மனமார ஏற்றுப் பாராட்டுகிறேன். ஒரு வகையில் பார்த்தால் புதிய அமைப்புக்கள் அழகுடன், வசதியையும் அதிகரித்திருப்பதாகவே தோன்றக் கூடும். ஆனால் பழைமையின் முழுமை சிதைந்துவிட்டதை மறந்து விடலாமா? அந்த இயற்கை மாளிகையின் உள்ளே அமைத்திருக்கிற இரும்புக் கம்பி வேலிகளை மட்டுமாவது அகற்றி விட்டால் நலமாயிருக்கும். தைப் பூசம் போன்ற திருநாட் காலங்களில் மக்களின் நெரிசலைக் கட்டுப்படுத்த வேண்டுமென்றால், அப்பொழுதைக்கு மட்டும் வேலிகளை அமைத்துக் கொண்டு பின்னர் அகற்றி விடலாம். இந்த என் ஆலோசனையைச் சம்பந்தப்பட்டவர்கள் சிந்தித்துப் பார்க்கட்டும்.

ஈப்போவிலிருந்து நேரே கோலாலம்பூர் வந்து சேர்ந்தோம். அன்று சின் வூ. மண்டபத்தில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. காலைக் கூட்டத்தில் அமைச்சர் டான் ஸ்ரீ வீ. தி. சம்பந்தன் தலைமை வகித்தார். குமாரி விஜயபாரதி, திருவாளர்களான மு. வ., நெடுஞ்செழியன், மா. இராசமாணிக்கம், கே. பி. எஸ். ஹமீது, ம. பொ. சி., திருவாசகமணி, டி. கே. ஷண்முகம் முதலியோர் சொற்பொழிவாற்றினர். நாங்கள் மாலை நான்கு மணிக்கேதான் வந்தமையால் காலைக் கூட்டத்தில் பேசியவற்றைக் கேட்டு மகிழ முடியவில்லை.

மாலை 4 மணிக்கு நடைபெற்ற கூட்டத்தின் முற்பகுதிக்கு அமைச்சர் திரு வெ. மாணிக்கவாசகமும், பிற்பகுதிக்கு செனட்டர் திரு எஸ். ஓ. கே. உபைதுல்லாவும் தலைமை தாங்கினர். ஸ்வீடன் பாதிரியார் பிரிக் கோலம், திருவாளர்களான பி. டி. இராசன், தெ. பொ. மீ., எஸ். மகராஜன், கா.பொ. இரத்தினம், கி.வா.ஜ., எஸ். வித்தியானந்தன், அ. சீநிவாசராகவன், அ. ச. ஞானசம்பந்தன் ஆகியவர்களும் நானும் பேசினோம். ஏராளமான மக்கள் நிரம்பியிருந்தனர். இடமின்மையால் பலர் கூட்டத்தின் நாற்புறமும் சூழ்ந்து கொண்டிருந்தனர். என்ன ஆர்வம், என்ன ஈடுபாடு! செவி வாயாகத் தமிழை அமுதாகவல்லவா உண்டு மகிழ்ந்து கொண்டிருந்தனர். ஊரெலாம், தெருவெல்லாம், ஒரே தமிழ் முழக்கம். இப்படியாகத் தொடர்ந்தது எங்கள் சொற்பொழிவுச் சுற்றுலா.

(தொடரும்)

# கவர்ச்சியிலும்

மேன்மையை

நாடுங்கள்!



# செஞ்சுரியின்

மிகச் சன்னமான

# புடவை ரகங்கள்

தி செஞ்சுரி ஸ்பின்னிங் & மானுபாக்சரிங்
கம்பெனி லிமிடெட்

பம்பாய்-1

உற்பத்தித்திறனே வாழ்க்கையின் குறிக்கோள்

NPS/CM/120

# நேர் திசை

ஆர். சூடாமணி



"நான் போய் வரட்டுமா?"

தாயையும் சகோதரனையும் வணங்கி எழுந்த சுலோசனாவின் நெற்றியில் பூமா குங்குமத் திலகம் இட்டு வெற்றிலைப் பாக்குத் தந்தாள். அவளையும் வணங்க வேண்டுமென்றுதான் சுலோசனாவுக்கு விருப்பம். கண்ணற்ற தடுமாற்றத்தில் உழன்றவாறு வேதனையுடன் வந்திருந்த அவளைப் பூமாவல்லவோ நெஞ்சில் ஒளி பெற்ற ஒரு புதுப் பிறவியாய் மாற்றி ஊருக்குத் திருப்பி அனுப்புகிறாள்! உள்ளத்தில் சுரந்து நிறைந்த அன்பும் நன்றியும் நாவில் தழுதழுக்க அவள், "உன்னையும் நமஸ்காரம் செய்கிறேனே, மன்னி!" என்று கூறினாள். ஒத்த வயதினளை எப்போதும் பெயரிட்டுச் சலுகையுடன் அழைத்து வந்தவள் 'மன்னி' என்று இப்புதிய விளியில் தன் மதிப்பையெல்லாம் வெளிக் காட்டி உருகி நின்றதை விடப் பெரியதொரு நமஸ்காரம் உண்டா என்று பூமா எண்ணினாள் போலும். "அதெல்லாம் எதற்கு சுலோ? ஊருக்குப் போய் நீ நலமாயிருப்பதாய் எழுதினாயானால் எனக்கு அதுவே நீ செய்கிற மரியாதை" என்று கனிவாய்க் கூறி அவள் சுலோசனாவின் தோளை மெல்லத் தட்டிக் கொடுத்து, "சந்தோஷமாய்ப் போய் வா" என்று விடை தந்தாள். குழந்தைகள் மணியும் கமலியும் அத்தையின் எதிரே வந்து நின்றார்கள். அவர்களைக் கட்டியணைத்துக் கொண்டு சுலோசனா, "போய்ட்டு வரட்டுமா கண்ணுகளா?" என்று கூறி எல்லோரிடமும் விடைபெற்றுக் கொண்டு டாக்ஸியில் ஏறினாள். ரகுவும் உடன் ஏறி அமர்ந்ததும் வண்டி ரயில் நிலையத்துக்குக் கிளம்பியது.

சிறிது நேரம் அசையாமல் நின்ற பூமா, "அவள் திருப்தியாய்த்தான் போகிறாள். இல்லையா அம்மா? உங்களுக்கு எப்படித் தோன்றுகிறது?" என்று வினவினாள் தன் மாமியாரை நோக்கி.

"ஆமாம். அதிலென்ன சந்தேகம்?"

சொர்ணம் அதற்கு மேல் எதுவும் கூறவில்லை. 'நீ எடுத்து நடத்திய செயலென்றால் அது சீராக இராது போய்விடுமா?' என்ற புகழுரையை வாயால் கூறாமல் கண்ணாலும் நெஞ்சாலுமே அவள் வெளியிட்டாள். இத்தகைய ஒரு மருமகள் தனக்கு வாய்த்த பெருமையை அவள் ஒவ்வொரு கணமும் உள்ளத்தில் உணர்ந்து கொண்டிருப்பதை அவளுடைய

கனிந்த புன்னகையும் அமைதியான உள் நிறைவும் மௌனமாகப் பறைசாற்றிக் கொண்டிருந்தன.

சுலோசனா தன் புக்ககத்தினரோடு ஏதோ மனத்தாங்கல் கொண்டு இங்கு வந்திருந்தாள். அவளைத் திரும்பிப் போகச் செய்யச் சொர்ணம் மேற்கொண்ட முயற்சிகள் பயனற்றுப் போன போது, தங்கையின் அவசரச் செயலைக் கண் மூடித்தனமாய் ஆதரித்து ரகுவும் குதித்த போது, பூமாவல்லவோ நாத்தியின் மன நிலையை அறிந்து அவளிடம் பக்குவமாய்ப் பேசி மனத்தில் தெளிவை ஏற்படுத்தி அவளை மீண்டும் கணவனிடம் திரும்பச் செய்து நல்வாழ்வு அளிப்பதில் வெற்றி கண்டிருக்கிறாள்! பூமாவுக்குத்தான் எவ்வளவு அறிவு, திறமை! அவள் தன் மருமகளாய் வந்த பிறகு சொர்ணத்துக்குக் குடும்பத்தைப் பற்றி எந்தக் கவலையுமே இல்லை.

சுலோசனாவை அவள் கணவனின் ஊரில் விட்டு விட்டுத் திரும்பிய ரகு, ''அம்மா, நம்ம சுலோசனாவின் முகம் மாப்பிள்ளையைப் பார்த்ததும் எப்படி மலர்ந்துவிட்டது, தெரியுமா? அவருக்கும் ஒரே சந்தோஷம். அவர் வீட்டிலும் எல்லோரும் ஆறுதல் அடைந்தாற்போல் காணப்பட்டார்கள்'' என்று விவரித்தான்.

''அவள் இருக்க வேண்டிய இடம் அது தானேடா? ஏதோ கோபத்தில் வந்துவிட்டாலும் கணவனை அவள் வெறுத்துவிடுவாளா என்ன? அவர்களுக்கும்தான் பிடிப்பு விட்டு விடுமா?''

''அதைப் புரிந்து கொள்ளாமல் நானும் அவளுக்கு இங்கே ஒத்துப் பாடியதை நினைத்தால் இப்போது வெட்கமாயிருக்கிறது.''

''நம் பூமா இடையில் புகுந்து அவளுக்குப் புத்தி சொல்லியிருக்கா விட்டால் அந்தப் பெண் திருந்தியிருப்பது ஏது!'' என்ற சொர்ணம் மிகவும் பெருமிதத்துடன் பூமாவை நோக்கினாள். பூமா தலை குனிந்தாள், ஏதோ சுமையைத் தாங்கிக் கொண்டிருப்பவள்போல.

வீட்டில் ஏதேனும் விசேஷம் என்றால் பூமாவுக்குத்தான் பொறுப்பெல்லாம்.

''பூமா, இந்தப் பொம்மையை வெல்லாம் வந்து பார். நவராத்திரி ஆரம்பித்து நாலு நாட்கள் ஆகிவிட்டனவே. இனியும் புதுப் பொம்மை வாங்க வேண்டுமா என்ன?''

பூமாவின் கையில் பதுமைகளின் ஆராய்ச்சி.

''வேலைப்பாடு ரொம்ப நேர்த்தியாயிருக்கிறதே, அம்மா! இப்போது விட்டால் அடுத்தவருஷம் கிடைக்கிறதோ இல்லையோ!''

''அப்படியானால் வாங்கி விடுவோம்.''

பூமாவின் பேச்சுக்கு மறுபேச்சு ஏது!

இரண்டு வாரங்களுக்குப் பின் வீட்டுக்கு வரும் விருந்தாளிகளின் கண்களில் பாராட்டு மிதக்கும்.

''இந்தப் பதுமையை இப்படிப் பொருத்தியிருப்பது ஹாலுக்கே தனி அழகைக் கொடுக்கிறதே!'' பிறகு வந்தவர்களுக்குள் பேச்சு. ''இதே பொம்மையை நாமும்தான் வாங்கினோம். எடுப்பாயில்லாமல் ஏதோ மூலையில் வைத்திருக்கிறோமே! இங்கே பார். அதே பொருள். ஆனால் எத்தனை பொருத்தம்! சாமான்களை வைப்பதற்கும் அழகுணர்ச்சி வேண்டும்.''

சொர்ணத்துக்குப் பெருமை பிடிபடாது. ''எல்லாம் எங்கள் பூமாவின் கைத் திறமைதான்!''



''அப்படியா!''

நான்கு நாட்களில் விருந்தாளிப் பெண்ணின் மறு வருகை.

''பூமா! எங்கள் வீட்டுக்கும் புது சோபா செட் வாங்கியிருக்கிறோம். நீங்கள் கொஞ்சம் வந்து அதை எங்கே, எப்படி வைத்தால் பாந்தமாய் இருக்குமென்று சொல்கிறீர்களா? உங்கள் மாதிரி எனக்கு எதையும் அழகாய்ச் செய்யத் தெரிவதில்லை.''

அதன்பின் நண்பர்களிடையே யார் வீட்டுக்குப் புதிய பொருள்கள் தருவிக்கப்பட்டாலும் பூமாவின் அபிப்பிராயம் கோரப்படும், பின்பு புகழப்படும்.

சொர்ணம் சளைக்காமல் அன்றாடம் மருமகளுக்குத் திருஷ்டி கழிப்பாள்.

குழந்தைகளின் கல்வி விஷயமானாலும் நிர்வகிக்க வேண்டியது பூமாதான். கமலியும் மணியும் புத்திசாலிகள்தான் என்றாலும் பள்ளிப் பாடத்தில் சரிவரக் கவனம் செலுத்த மாட்டார்கள். குறிப்பாய் மணிக்குப் பாட புத்தகங்கள் படிப்பது ஓர் அநாவசியத் தொந்தரவாகவே தோன்றியது. பொது விஷயங்களில் அவன் அறிவு பெரியவர்களுக்குச் சமமானதாய் இருக்கும். விண்வெளி வீரர்களின் ஜாபிதாவும் அவர்களின் சாதனைகளும் அவனுக்குக் கரதலப் பாடம். லேடெஸ்ட் அமெரிக்கன் மோட்டாரின் உற்பத்தி நுணுக்கம் எப்படி என்பதை அந்தக் கம்பெனிக்காரர்களே மறந்துவிடும் பட்சத்தில் அவர்கள் மணியிடம் கேட்டு ஞாபகப்படுத்திக் கொள்ளலாம். இன்ன ஆண்டில் இன்ன இரண்டு நாடுகளிடையே நடந்த கிரிக்கெட் பந்தய வரிசையிலே இன்ன டெஸ்டில் இன்ன ஆட்டக்காரர் எழுபத்து மூன்றும் ஓட்டம் எடுக்க முயன்ற போது அதை எடுப்பதில் தடையாயிருந்த அவருடைய இடது கண்டுவிரலில் அடி எவ்வாறு ஏற்பட்டது என்று அவனுக்குத் தெரியும். ஆனால் அவன் வகுப்பில் நடைபெற்ற ஒரு பாடத்திலிருந்து அந்தப் பாழாய்ப் போன ஆசிரியர் அநியாயமாய்க் கேட்டுத் தொலைத்துவிட்ட கேள்விக்கு விடை அவனுடைய அத்தனை புத்தகங்களிடையே எந்தப் புத்தகத்தில் இருக்கிறது என்பதை மட்டும் வேறு யாராவதுதான் கண்டு பிடித்து அவனுக்குச் சொல்லவேண்டும்.

ரகு அன்றாடம் குழந்தைகளின் படிப்பைப் பார்க்க உட்காருவான். சிறிது நேரத்திலேயே அவன் பொறுமை பறந்துபோய்விடும்.

''உங்களுக்குச் சொல்லிக் கொடுக்கிறதை விட அந்தக் குட்டிச்சுவருக்குச் சொன்னாலும் அது போய்ப் பரீட்சையில் நன்றாய் எழுதிப் பாஸ் ஆகும். தொலைந்து போங்கள் எப்படியாவது'' என்று புத்தகங்களை அவர்கள் மீதே எறிந்துவிட்டுப் போய் விடுவான். 'விட்டதடா தொல்லை!' என்ற மகிழ்ச்சியில் மணியும், கமலியும் விளையாடத் தயாராகும் சமயம் பூமா வருவாள்.

''ம், எடுங்கள் புத்தகத்தை'' என்பாள் நிதானமாக.

''எதுக்கும்மா?''

''புத்தகத்தை எடுப்பது எதற்கு என்று சந்தேகமாயிருந்தால் அப்புறம் நீங்கள் பள்ளிக்கூடம் ஏன் போக வேண்டும்? ஸ்கூலை விட்டு நிறுத்தி விடுகிறேன். படிக்காமல் சுகியாய் இருங்கள். ஆனால் ஒன்று. அப்புறம் 'நம்ம அப்பா வழியிலும் அம்மா வழியிலும் எல்லாரும் பெரிய படிப்புப் படித்துக் கெட்டிக்காரர்களாய் இருக்கும் போது நாம் மட்டும் மக்காய் ஆடு மேய்க்கிறோமே' என்று வருத்தப்பட்டுக் கொள்வதில் பிரயோஜனமில்லை.''

''ஆடா, மேய்க்கணும்?''

''மாடுதான் வேண்டுமானாலும் அப்பாவை வாங்கித் தரச் சொல்கிறேன், கவலைப்படாதீர்கள். நாளைக்குப் பள்ளிக்கூடம் போகும் போது ஹெட்மாஸ்டரிடம் இனி நீங்கள் பள்ளிக்கூடம் வரவில்லை என்று சொல்லி விட்டு வாருங்கள். வரும் போதே இங்கே வாசலில் இரண்டு மாடு கட்டியிருக்கும். அதோடு பழகுவது எப்படி என்று கோனாரிடம் கற்றுக் கொள்ளும் போது மாடு இரண்டு உதை, நாலு முட்டு, இப்படிக் கொடுத்தாலும் பட்டுக் கொள்ள வேண்டியது தான். என்னிடம் சொல்லக் கூடாது. ஏனென்றால் மாடு மேய்க்க வேண்டுமென்று ஆசையாய்க் கேட்டிருக்கிறீர்களல்லவா?''

''நாங்க எப்போ கேட்டோமாம்?''

''பின்னே ஆடே தேவலையா?''

''ஆடும் வேணும்!''

''படிக்கா விட்டால் அது இரண்டில் ஒன்று தான்.''

''படிக்கத்தானே போறோம்! யார் படிக்க மாட்டேன்னு சொன்னது?''

''பின்னே புத்தகத்தை எடுக்கச் சொன்னால் 'எதுக்கு' என்று கேட்டால் என்ன அர்த்தம்?''

மறுபேச்சின்றி இருவரும் புத்தகங்களை எடுப்பார்கள். அன்றையப் பாடம் சரியாய் நடைபெறும்.

பரீட்சை நெருங்கும் போதுதான் அவர்களை உண்மையில் பயம் பற்றும். அப்போது அம்மாவைத் தவிர வேறு யாரையும் நாட அவர்களுக்குத் தோன்றாது. ''அம்மா, அப்பா வேணாம், நீ சொல்லிக் கொடும்மா!'' என்று கெஞ்சிக் கொண்டு வரும் அவர்களுடைய சோம்பலைச் சரிசெய்து எப்படியோ பாடங்களை மூளையில் திணித்துப் பரீட்சையில் கடையேற்றுவாள் பூமா.

''அம்மா இருக்கும்போது என்ன கவலை?'' என்று எப்போதுமே, எந்த விஷயத்திலுமே குழந்தைகளுக்கு அசையாத நம்பிக்கை.

**ப**ன்னிரண்டு ஆண்டுகளுக்குமுன் இவனைத் தன் மகனுக்கு மணமுடித்த போது சொர்ணம் இத்தகைய லட்சியப் பெண் தன் குலவிளக்காய்க் கிட்டுவாள் என்று எண்ணியிருக்கவில்லை. பூமா ஒரு பெரிய குடும்பத்தில் பிறந்தவளென்றாலும் கவலைகள் ஏதுமின்றி வளர்ந்தவள். பி. ஏ. தேறிய பெண். திருமணமாகும் வரையில் படிப்பும் கேளிக்கை

யும் உல்லாசமுமாகவே காலத்தைக் கடத்திய வள். இப்பொழுது அவளுக்கு இருக்கும் பொறுப்புணர்ச்சி யாருக்கும் இருக்காது.

மணி ஒரு சமயம் கீழே விழுந்து காலில் கடுமையாய் அடிபட்டுக் கொண்ட போது அவனை வைத்தியரிடம் அழைத்துப் போகு முன் அவள் செய்திருந்த முதல் சிகிச்சை யின் நியமங்களைப் பார்த்த மருத்துவர் வியப் பில் மூழ்கி விட்டார்.

''மிஸ்டர் ரகுநாதன்! உங்கள் மனைவி ஒரு டாக்டரா? அல்லது மெடிகல் மாணவி யாகவேனும் இருந்திருக்கிறார்களா?'' என்றார் அவர்.

ரகுவின் முகம் பெருமிதத்தில் ஒளிர்ந்தது. ''இல்லை டாக்டர், எல்லாம் அநுபவ அறிவு தான்'' என்றான் பெருமையை அடக்கிக் கொண்டு.

''ஓ! மிகவும் திறமையான பெண்மணி!''

வீடு திரும்பியதும் ரகு இதைப் பற்றித் தன் தாயிடம் கூறினான். கட்டுப் போட்டுக் கொண்டு வந்திருந்த மணியைக்கூட இரண் டாம் இடத்துக்கு ஒதுக்கிவிட்டு அவர்கள் இருவரும் பூமாவை மதிப்புடன் புகழ்ந்த செயல் அவள் திறமைக்கு மற்றுமொரு சான்று.

''அம்மா, வயத்தை வலிக்கிறது. மருந்து போடேன்!'' என்று கமலி ஓடி வருவாள்.

''அம்மா, இந்த ஸ்கூல் லைப்ரெரி புத்தகம் கிழிஞ்சு போச்சு. வெளியே தெரியாமல் ஒட்டிக் கொடுத்துடேன்!'' தாய் எதையும் செய்து விடுவாள் என்ற நம்பிக்கையுடன் வருவான் மணி.

''சின்னம்மா, இன்று இத்தனை பேருக்குக் காப்பிக்குப் பால் போதுமா? நீங்கள் எப்படி யாவது அட்ஜெஸ்ட் செய்து எல்லாருக்கும் கலப்பீர்களே, கொஞ்சம் வரமுடியுமா ?''— இது சமையற்காரன்.

''பூமா, நீ என் மனைவி மட்டுமில்லை, என் தெய்வமே நீதான். உன்னால்தான் நான் வாழ்வின் உண்மையான மதிப்புக்கள் என்னவென்பதை உணர்ந்து போலித்தன மான ஆணவத்தை விட்டுவிட்டேன்......''— கலோசனாவின் கடிதம்.

பூமா பெருமூச்சு விடுவாள்.

வீடு நிறைய விருந்தினர்கள். அவ ளுடைய புக்கக உறவினர்கள். சுலோசனாவின் வளைகாப்பு வைபவத்துக்காகக் குழுமியிருந்த கூட்டம். எல்லோரும் அவளையே மதிப்புடன் நாடி அழைத்துக் கூவும் ஒலிகள். பல இடங் களிலும் ஒரே சமயத்தில் அவள் இருப்பது போன்ற மும்முர ஓட்டம்.

பிற்பகல் இரண்டு மணிக்கு அவள் வாசற்புறமாய்ச் சோர்ந்து நிற்பதைக் கவ னித்தான் ரகு. அவள் கண்கள் தெருப் பக்கம் ஆழ்ந்திருந்தன. அவனும் எட்டிப் பார்த்தான். குழந்தைகளின் கும்பல். அவர்களுடைய இரு குழந்தைகளைத் தவிர வந்திருந்த குடும்பங்களைச் சேர்ந்த சிறுவர் சிறுமியரும் கூடியிருந்தனர். அவன் வியப் புடன் அவளைத் திரும்பிப் பார்த்தான். எதற்காகக் குழந்தைகளை அவள் இத்தனை ஏக்கத்துடன் பார்க்க வேண்டும்? அவர்கள் மக்கட் பேறில்லாத தம்பதியல்லவே! அவள் முகத்தின் தன்மை அவனுக்குப் புதிராய் இருந்தது. எதையோ மனசில் வைத்துக் கொண்டு மறைக்கிறாள். என்ன அது?

''பூமா, அந்த வெள்ளித் தட்டு எங்கே ? எதற்காவது எடுத்து வைத்திருக்கிறாயா?''

சொர்ணத்தின் குரல் கேட்டு அவள் உள்ளே விரைந்தாள்.

ரகு குழம்பினான். பூமாவின் மனத்தில் என்ன இருக்கிறது? குழந்தைகளை அவள் ஏன் அப்படிப் பார்த்தாள்? ஒருகால் அவள் கவனித்தது கமலியையும் மணியையும்மட்டும் தானோ? அவர்களுக்கு ஏதேனும் உடல் நலம் சரியில்லையோ ?

தெருவில் நின்று கொண்டிருந்த அத்தனை குழந்தைகளும் உள்ளே ஓடிவந்தனர். அவர்க






''நம்ம போஸ்டாபீசுக்கு ஒரு பாராட்டுக் கடிதம் வந்திருக்கு சார்!''

''பலே; பலே! படி, கேட்போம்!''

''அன்புள்ள போஸ்ட்மாஸ்டர் அவர்களுக்கு, வணக்கம். 30-6-66 எனக்குத் திருமணம். பத்திரிகையை 2-7-66 டெலிவரி செய்ததற்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். தங்கள்,

கிட்டு என்கிற கிருஷ்ணன்''

---

னுக்கு விநியோகம் செய்திருந்த ஐஸ்கிரீம்காரனும் உடன் வந்தான். அவனுக்கு ரகு காசு கொடுத்து அனுப்புவதற்குள்ளாகவே கமலி தெருவில் போகும் ஒரு பலூன் விற்பவனை நோக்கி விரல் நீட்டியவாறே, ''அப்பா, பலூன் வாங்கித் தாப்பா!'' என்று கெஞ்சினாள்.

குழந்தைகள் கலகலப்பாய், ஆரோக்கியமாய்த்தானே இருக்கிறார்கள்! பின்னே பூமாவின் அந்த நிலைத்த பார்வைக்குக் காரணம் ?

என்னவாயிருக்கும்?

நான்கு நாட்களில் விருந்தினர்கள் சென்றனர்.

அன்று மாலை பூமா அவனிடம் வந்து, ''கொஞ்சம் வெளியில் போய் வரலாம் வருகிறீர்களா?'' என்றாள்.

அவளுடைய தீவிரமான முகத்தன்மை அவனுள் ஏதோ அச்சத்தை விளைவித்தது. ''என்ன விஷயம், பூமா?''

''எல்லாம் அப்புறம் சொல்கிறேன். வருகிறீர்களா கொஞ்சம்?''

''அம்மா, கமலி, மணி எல்லாரும் தயாரா?'' அப்படி முழுக் குடும்பமாய் எல்லாரும் சில நாட்கள் போய் வருவதுண்டு.

''அவர்கள் வேண்டாம். இன்று ஒருநாள் நாம் இருவருமாய்க் கொஞ்சம் போய் வரலாம், வாருங்கள்.''

அவன் நெஞ்சில் பனி இறங்கியது. இம்மாதிரி அவள் இதுவரை கேட்டதே இல்லை.

''நாம் இருவர் மட்டுமா?''

''ஆமாம், உங்களிடம் தனியாய் ஒரு விஷயம் சொல்ல வேண்டும்.''

''என்ன சமாசாரம், பூமா?''

''அப்புறம் சொல்கிறேன்.''

பஸ்ஸில் போகும்போதெல்லாம் அவள் பேசவே இல்லை. அவனுள் ஒவ்வொரு கணமும் திகில் மிகைப்பட்டு வந்தது. பூமா ஏன் இன்று இப்படி விசித்திரமாய்ப் பழகுகிறாள்? அவள் மனத்தினுள் ஏதோ ஓர் உறுதியான தீர்மானம் உருவாகி விட்டதென்பது அவள் முகத்தின் உள்ளிப்பிலிருந்து தெரிந்தது.

''இந்த ஸ்டாப்பில் இறங்க வேண்டுமென்றாயே?''

''ஆமாம். கடற்கரைக்கு நடந்து போகக் கிட்டமான பஸ் ஸ்டாப் இதுதானே?''

கடற்கரையின் மணலில் இருவரும் அமர்ந்தார்கள். ''என்ன விஷயம் பூமா?'' என்று ஆவலை அடக்க மாட்டாமல் கேட்டான்.

''எனக்கு ரொம்ப நாளாய் ஓர் ஆசை.''

என்ன இது! ஏதோ குறையை உள்ளேயே வைத்து மறுகிக் கொண்டு இருந்திருக்கிறாளா? இனியும் பொறுக்க முடியாது என்ற எல்லையோ இன்று?

''என்ன ஆசை பூமா?''

பூமாவின் கண்கள் ஏக்கத்துடன் தொலைவில் வெறித்தன. திடீரென்று அவற்றில் ஒரு மலர்ச்சி.

''அதோ, அவனை நிற்கச் சொல்லுங்கள்!''

''யாரை?'' ரகு சுற்றுமுற்றும் பார்த்தான். தெரிந்த முகம் எதையும் காணவில்லையே ? ''யாரைச் சொல்கிறாய்?''

''அந்த ஐஸ்கிரீம்காரனைத்தான்.'' அவள் குரல் பொறுமை இழந்தது.

அவன் ஒரு கணம் விழித்தான். பிறகு, ''இந்தாப்பா, அப்படியே கொஞ்சம் நில்லு!'' என்றான் ஐஸ்கிரீம்காரனை.

அவன் வாங்கி வந்து தந்த ஐஸ்கிரீமை அவள்தான் எத்தனை ஆவலுடன் உண்டாள்!

''எனக்கு ஐஸ்கிரீம் எவ்வளவு பிடிக்கும், தெரியுமா? சாப்பிட்டு எத்தனை வருஷமாகிறது? இன்றுதான்..... அப்பாடா!''

அன்று தெருவில் குழந்தைகளைப் பார்த்து அவள் நின்றதாக அவன் எண்ணியிருந்தானே! அன்றுகூட, குழந்தைகளையல்ல, அவர்கள் தின்று கொண்டிருந்த ஐஸ்கிரீமைத்தான் பார்த்து அவள் வழக்கம் போல் ஏங்கியிருக்கிறாள் போல் இருக்கிறது!

அவள் உட்கொண்ட சுறுசுறுப்பைக் கண்டு அவன் இன்னும் ஒரு கப் ஐஸ் கிரீம் வாங்கித் தந்தான்.

''ஏன், இதை என்னிடம் இத்தனை காலமாய்ச் சொல்லவில்லை, பூமா ?''

''எப்படிச் சொல்வது? எல்லோரும் என்னை மிக மிக மதிப்பாய் எண்ணி என்னைப் பெரியவளாய் நடத்தும் போது குழந்தை மாதிரி எனக்கு ஐஸ்கிரீம் சாப்பிட ஆசையாயிருக்கிறதென்று எப்படிச் சொல்வதாம்?'' மேலும் பேசி நேரத்தை வீணாக்காமல் அவள் இரண்டாம் கப்பில் கவனம் செலுத்தலானாள்.



# செகரட்டேரியேட்டில் சதி

பாட்டப்பத்து ரா. ராமச்சந்திரன்

“இன்று நம் வாயில் புகுந்து புறப்படப் போவது யார்? முதலமைச்சரா, தொழில் மந்திரியா, அல்லது உணவு சப்ளை கமிஷனரா?”

‘யார் இந்தச் சதிகாரர்கள்? எதற்கு இந்தச் சதியாலோசனை?’ என்று திகைப்புறத் தோன்றும், அந்த அறையில் நடக்கும் ஆவேசப் பேச்சுக்களைக் கேட்கும் பொழுது.

இப்படிப் பேச்சு நடக்கும் இடம் வேறெங்குமல்ல; அரசின் ஆட்சிபீடம் அமைந்துள்ள செயின்ட் ஜார்ஜ் கோட்டையின் ஒரு சிறிய அறையில்தான்.

இங்கே அன்றாடம் முற்பகலில் சில ‘சதிகாரர்கள்’ கூடுகிறார்கள். இன்று யாரைத் தாக்கலாம், எதனைக் குறையிடலாம், அரிசியையா, எண்ணெயையா, சர்க்கரையையா அல்லது குழந்தை உணவுகளையா? இது போன்ற சிந்தனைகள்தான் இவர்களுக்கு. இந்தச் சதிகாரர்கள் யாராயிருக்கலாம், எவ்வாறு இத்தகைய ‘சதியாலோசனை’ மன்றம் அரசின் தலைமையகத்திலேயே இயங்க முடியும் என்று உங்களுக்கு வியப்பு ஏற்படுகிறது அல்லவா?

கேட்கப்போனால் அரசும் இதற்கு ஓரளவு ‘உடந்தை’யாக இருக்கிறது. உங்களுக்குத் தலை சுற்றுகிறதா? அதிசயம் ஆனாலும் இது உண்மை.

இப்படிச் சதியாலோசனை செய்ய அரசாங்கமே இவர்களுக்கு ஓர் அறையை ஒழித்துக் கொடுத்து வசதி செய்திருக்கிறது.

இந்தச் சதிகாரர்கள் முற்பகல் பதினொரு மணியிலிருந்து பன்னிரண்டு மணிக்குள் ஒவ்வொருவராக இங்கு வந்து சேருவார்கள். பட்டப் பகலில் அச்சம் சிறிதும் இன்றி இப்படி வரும் இந்த ‘நபர்கள்’ வேறு யாருமல்ல; பத்திரிகைகளின் முக்கிய நிருபர்கள் தான். முதிர்ந்த அனுபவம் வாய்ந்த, கைதேர்ந்த நபர்களைத் தடுத்து நிறுத்த யாரும் துணியார். திறந்த மனத்துடன், பாரபட்ச மனப்பான்மை இல்லாத பாவத்துடன் பிரச்னைகளை அணுகும் இயல்புடையவர்கள் இவர்கள். பொதுமக்களின் பிரதிநிதிகளாக இருந்து அரசு எடுக்கும் முடிவுகளின் நன்மை தீமைகளை யெல்லாம் ஆராய்ந்து உணர்ந்து பரிகாரம் தேட முயலும் பண்பு கொண்டவர்கள்.



ஒவ்வொரு நாளும் பல்வேறு உள்நாட்டு, வெளிநாட்டுப் பிரச்னைகளையும், அரசியல் வாதிகளின் கருத்துக்களையும் ஆற்றலுடன் பத்திரிகை நிருபர்களின் இந்த அறை விவாதிக்கும்.

“ரூபாய் மதிப்பைக் குறைத்தது அசட்டுத்தனம்” என்பார் ஒருவர். “அரசினரின் அறிவுத் திறனுக்கு அபார எடுத்துக்காட்டு” என்பார் மற்றொருவர்.

‘வரும் தேர்தலில் தி. மு. க. வுக்கு என்பது சட்டசபை சீட்டுக் கிடைக்கும்’ என்பார் ஒருவர்; ‘காங்கிரஸே மீண்டும் பதவியிலிருக்கும்’ என்பார் இன்னொருவர்.

‘அறுவைச் சிகிச்சை அதர்மம் நாட்டுக்கு ஒவ்வாதது’ என்று ஒருவர் கடிந்தால் அதனை மறுத்து ஜப்பானை ஆதாரம் காட்டி அலசுவார் வேறொருவர்.

இவ்வாறு எந்தப் பிரச்னையானாலும் அணுகி ஆராயும் இந்தச் சதிகாரக் கும்பலுக்கு காரசாரமாக ஒளிவு மறைவின்றி ஆலோசனை, அபிப்பிராயங்களை அள்ளி விடும் இந்தக் குழுவுக்கு மனத்தில் சிறிதும் களங்கம் கிடையாது. தன்னலமற்ற சேவையுணர்வும் எல்லோரும் இன்புற்றிருப்பதுவுமே தான் இந்தக் குழுவின் குறிக்கோள். ‘நல்ல முடிவுகள் எடுக்கப்படவேண்டுமே, நன்மைகள் பாதிக்கப்படக் கூடாதே’ என்ற தூய எண்ணம் தான் அடிப்படை இந்தச் சதிக்கு.

‘செகரடேரியட்’டுக்கு அனுப்பப்படும் பத்திரிகைப் பிரதிநிதிகள் பொறுப்பும், அநுபவமும் நிறைந்த பிரதம நிருபர்களாகவோ அல்லது அவருக்கு அடுத்தாற் போலுள்ள முதிர்ந்த நிருபர்களாகவோதான் இருப்பார்கள். விஷயமறிந்து பக்குவமாகப் பழகுபவர்களாயு மிருப்பார்கள்.

எந்த விஷயத்தை எந்த மந்திரியிடம் கிளறலாம் என்று தங்கள் அறையில் கூடி இவர்கள் முன்கூட்டியே முடிவு செய்வார்கள். முடிவுக்கு வருமுன் தங்களுக்குள்ளாகவே கேட்கப் போகும் விஷயத்தின் பல்வேறு அம்சங்களையும் ஆராய்வார்கள். ஏனென்றால் இவர்களது ஒரே நோக்கம் பொதுமக்களுக்குத் தாமதமின்றிச் சுடச்சுடச் செய்திகளை அளிப்பதாகும். அப்பட்டமாகவும், திரித்துக் கூறுமலும், மந்திரிகளின் கருத்துக்களைத் தெளிவாக அவர் கூறிய பாணியிலேயே கூடியமட்டும் பிரசுரிக்கவே இவர்கள் பிரியப்படுவர். இவர்களுக்குக் கட்சி வேறுபாடு இடையாது. ஏழை, பணக்காரர், மேலோர், கீழோர் என்ற பாகுபாடும் இடையாது. தொண்டைமான் முதல் தோட்டி வரை எல்லோ



ரும் ஒரு குலம் என்ற கருத்துடன், யாருடனும் சகஜமாகப் பேசி நிலவரங்களைப் புரிந்து கொள்வார்கள்.

கூடிப் பேசித் தங்கள் பத்திரிகைகளுக்குத் தேவையான இரை தேடும் இவர்கள் நீரைப் பிரித்துப் பாலை உண்ணும் அன்னப் பறவைகளுக்கு ஒப்பானவர்கள். இவர்கள் வந்திருக்கிறார்கள் என்றால் கூடியமட்டும் தாமதமின்றியே உள்ளே அநுமதிக்கப் படுவார்கள். பொதுவாக நிருபர்கள் வருவதை அமைச்சர்கள் வரவேற்கவே செய்கிறார்கள். ''நீங்கள் ஒருவர்தான் ஒரு பொரிசையும் நாடாது இங்கு வருகிறீர்கள். உங்களிடம் பேசப் பிரியப்படுகிறேன்'' என்று முன்னாள் முதலமைச்சர் ஒருவர் அடிக்கடி கூறுவதுண்டு. அதிலும் கல்லூரி 'அட்மிஷன்' சமயத்தில் அமைச்சர்கள் படும்பாடு வேதனையாக இருக்கும். ஜனநாயகமாச்சே! ஏதாவது சொல்லியனுப்பித்தானே ஆக வேண்டும்?

அகில இந்திய காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ காமராஜ் பத்திரிகை நிருபர்களிடம் மிகவும் சௌஜன்யமாய்ப் பழகுவார். அன்றாட அரசியல் சமூகப் பிரச்னைகளை, தாமே எழுப்பி, இவர்கள் வாயிலாகப் பிரச்னைகளின் பல்வேறு கோணங்களைப் புரிந்து கொள்ள ஆசைப்படுவார். முதலில் தமது அபிப்பிராயத்தை மறைவின்றி வெளியிட்டு அதனைப் பற்றி நிருபர்களின் கருத்தைக் கோருவார். சில சமயங்களில் தமது சகாக்களிடம்கூட மறைத்து வைத்துள்ள முடிவுகளை இவர்களிடம் சொல்லி யோசனைகளையும், பரிகாரங்களையும் கேட்பார். நிருபர்களிடம் அவ்வளவு நம்பிக்கை அவருக்கு. நிருபர்களும் ஒரு நாளும் நம்பிக்கைத் துரோகம் செய்ய மாட்டார்கள். இச்சூழ்நிலை பரஸ்பரம் மனம் விட்டுப் பேச உதவிற்று. சில சந்தர்ப்பங்களில் ''நமக்குள் இருக்கட்டும், பேப்பரில் போட்டு விடாதீர்கள்'' என்று கூறி ஸ்ரீ காமராஜ் முதலமைச்சராயிருந்த காலத்தில் அரசாங்கம் எடுக்கப் போகும் சில முக்கிய முடிவுகளைக் கூறி ஆலோசனை கேட்பார். இதன் பாதக சாதகங்களை நிருபர்கள் எடுத்துரைக்க அவற்றைத் தம் உள் கருத்தோடு இசைத்துப் பார்த்து, பின்பு முடிவுகளை அப்படியேயோ, அல்லது சற்று மாற்றியோ அமுல் நடத்துமாறு உத்தரவு போடுவார்.

இந்த முறை நிருபர்களுக்குச் சற்றுத் தர்மசங்கட நிலையை ஏற்படுத்திய போதிலும், நாட்டு, சமூக நலனை உத்தேசித்து இதனை வரவேற்கவே செய்தார்கள்.

உதாரணமாக, சென்னை கார்ப்பொரேஷன் கவுன்ஸிலைக் கலைத்து விடுவதாக முடிவு செய்ய அரசாங்கம் முற்படுகிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். ஒருவாறு நிர்மாணித்து உத்தரவும் பிறப்பிக்கப் போகும் சமயம். இந்தச் செய்தியை நிருபர்களிடம் முன்கூட்டியே வெளியிட்டு, 'இதனை இப்பொழுது பிரசுரிக்காதீர்கள்; ஒரு வாரம் பொறுத்து, அறிவிப்பு வந்ததும் போடுங்கள்' என்று சொன்னால் எப்படியிருக்கும்? நிருபர்களின் மன நிலையை அநுபவித்தவர்களுக்குத் தான் தெரியும். முக்கியமான செய்திகளை மூடி வைக்கச் சூழ்நிலை கட்டுப்படுத்துமானால், அதனைப் போல் வேதனை அளிக்கும் விஷயம் வேறொன்றும் அவர்களுக்கு இருக்க முடியாது. அதனை முன்கூட்டியே அறிவித்திருக்கா விட்டாலும், ஒரு சிரமம். முடிவு அரசாங்க பூர்வமாக வெளிவருமுன்பே, தேர்ந்த நிருபர்கள் இதை மோப்பம் பிடித்து வெளியிட்டு விடுவார்கள். இது இந்நிலையில் இயலாது. அரசைப் பொறுத்த வரையில் இது ஒரு வெற்றி முறை. அவர்கள் இஷ்டப்படும் நேரத்தில்தான் முடிவைப் பிரகரிக்க வேண்டும் என்ற எண்ணம் நிறைவேறும்.

மற்றொரு முறை தேர்ந்த பழம் பெரும் அரசியல் தலைவர் ஸ்ரீ ராஜாஜி அனுஷ்டிக்கும் முறை. நிருபர்கள் அவரை 'ஆள் மிகவும் அழுத்தமானவர்' என்றே எடை போட்டு வைத்திருந்தனர். அவர் முதன் மந்திரியாயிருந்தபொழுது ஏதாவது செய்திகள் இருந்தால் தாமாகவே நிருபர்களுக்குச் சொல்லி அனுப்புவார். வழக்கம் போல் அன்றாடமோ, வாரத்தில் இரண்டு முறையோ அவரை அணுகிச் செய்தி சேகரிக்க நிருபர்கள் முயல்வார்கள். விஷயங்கள் இருந்தால் உள்ளே கூப்பிட்டுப் பேசுவார். இல்லாவிட்டால் சிறிய காகிதத்தில் 'விஷயம் ஒன்றுமில்லை' என்று எழுதி அனுப்பி விடுவார். நிருபர்களும் விடாக் கண்டர்களாக ஏதாவது கேள்விகளை எழுதி உள்ளே அனுப்புவார்கள். அவைகளுக்கு உரிய பதிலை ஸ்ரீ ராஜாஜியும் உடனே எழுதி அனுப்பி விடுவார். தீர்மானங்களை, முடிவான உத்தரவு போட்ட பின்பே சொல்ல வேண்டுமென்பது அவர் கருத்து. இதுவும், பொதுஜன நலனைக் குறித்து, நல்ல முறையே. இவரது கண்டிப்பைக் குறித்துச் சாதாரணமாக ஓர் உதாரணம் சொல்வதுண்டு. ஒரு நபரை ஒரு முக்கிய வேலைக்குத் தேர்ந்தெடுத்தார். அவருக்கும் விஷயத்



னதைச் சொல்லி, வேலையை ஒப்புக் கொள்ளும் தேதியையும் நிர்ணயித்து விட்டார். ஆனால் மறு நாளே பத்திரிகையில் அவரது புது உத்தியோகச் செய்தி பிரசுரமாகி விட்டது. இவ்விஷயம் தெரிந்ததும், அந்த உத்தரவு மாற்றப்பட்டு உத்தியோகம் வேறொருவருக்குக் கொடுக்கப்பட்டதாம். சில நாட்கள் கூட ரகசியத்தைக் காப்பாற்ற இயலாத நபரைப் பொறுப்புள்ள பதவியில் எப்படி அமர்த்துவது? முன்கூட்டிச் செய்தி கொடுத்த நிருபர் இதனை அறிந்து மிகவும் வருந்தினாராம்.

முதன் மந்திரி ஸ்ரீ பக்தவத்ஸலமும் மற்ற மந்திரிகளும் நிருபர்களிடம் சகஜமாகப் பழகுவார்கள். சில சந்தர்ப்பங்களில் அமைச்சர்கள் அளிக்கும் பதில் தெளிவற்றதாயிருக்கலாம்; விளக்கம் தேவைப்படலாம். நிருபர்கள் உடனே சம்பந்தப்பட்ட காரியதரிசிகளிடம் சென்று விவரத்தை முழுதும் கேட்டு அறிந்து கொள்வார்கள்.

பொதுவாக நிருபர்கள் செய்திகளை வரவழைக்கும் பாணியில்தான் கேள்வி அம்புகளைத் தொடுப்பார்கள். அநுபவமுள்ள அமைச்சர்களிடமிருந்தும், அதிகாரிகளிடமிருந்தும் சங்கட நிலைகளைச் சமாளிக்கும் வண்ணம் பதில்கள் வரும். சரியான பதில் வராவிட்டால் நிருபர்கள் தயக்க நிலையை எடுத்துரைக்கும் ரீதியில் தங்கள் செய்திகளைத் தயாரித்துப் பொதுமக்களின் ஊகத்துக்கே விட்டு விடுவார்கள்.

இத்தகைய பொதுத் தாக்குதலைத் தவிர, பிரத்தியேகத் தாக்குதல்களிலும் நிருபர்கள் ஈடுபடுவதுண்டு. கிடைத்துள்ள துப்பைக் கொண்டு, மேல் விவரங்கள் சேகரிக்க வேண்டியிருந்தால், தனியாக அமைச்சர்களைப் பேட்டி காண்பார்கள். இம்முயற்சி சில சமயங்களில் பெரிய "ஸ்கூப்" (பிரத்தியேகச் செய்தி) ஆக விளங்கும்.

செய்தி சேகரிக்கும் பணி ஒரு தெய்வப் பணியாகும். பிரசுரிக்கு முன் அதனது விளைவுகளையும் சிந்திக்கவேண்டும். இதனைச் சென்னை நிருபர்கள் பெரிதும் உணர்ந்து நடந்துகொள்கிறார்கள். ஒரு தடவை அரசாங்க பட்ஜெட் பற்றிய விவரங்களை மந்திரி சபை முடிவு எடுத்ததும் எடுக்காததுமாக நிருபர்களுக்குப் புதிய அமைச்சர் ஒருவர் கூறி விட்டார். இதைக் கேட்டுத் திடுக்கிட்டுப் போனார்கள், அநுபவம் முதிர்ந்த நிருபர்கள். சட்டசபையில் தெரிவிக்குமுன் இவற்றைப் பத்திரிகையில் வெளியிடுவது உகந்ததல்ல என்று 'ஃபைலை'த் திரும்பக் கொடுத்து விட்டார்கள். அதன் பலனைச் சம்பந்தப்பட்ட மந்திரி பிழைத்தார்.

ஒருவரை அரசியல் பீடத்தில் அமர்த்தவோ அகற்றவோ, இங்கிருந்து வெளியாகும் செய்திகளும், கட்டுரைகளும் சிறிதளவேனும் காரணமாயிருக்கின்றன என்பது உண்மை.

ஆக்கல், அழித்தல் ஆண்டவன் செயல்தான். சில சமயங்களில் பத்திரிகையாளர் அறையில் இருந்துகொண்டு அவர் இத்தொழிலைச் செய்கின்றாரோ என்று அரசியல்வாதிகள் எண்ணுவதில் வியப்பென்ன?



## தேதிக்குக் கிழமை கண்டுபிடிக்க வழி

1900 முதல் 1999 வரை உள்ள ஆங்கில ஆண்டுகளில் ஏதாவது ஒரு குறிப்பிட்ட தேதி, 'என்ன கிழமை' என்பதைக் கண்டுபிடித்துச் சொல்லும் வழி!

இதற்கு அடியில் கண்ட குறிப்பை ஞாபகத்தில் கொள்ள வேண்டியது அவசியம்.

| | | | |
|---|---|---|---|
| சாதாரண வருஷங்களில் | | ஜனவரி | 0 |
| | | பிப்ரவரி | 4 |
| லீப் வருஷங்களில் | | ஜனவரி | 1 |
| | | பிப்ரவரி | 5 |
| எல்லா வருஷங்களிலும் | மார்ச், | நவம்பர் | 4 |
| | ஏப்ரல், | ஜூலை | 1 |
| | | மே | 6 |
| | | ஜூன் | 3 |
| | | ஆகஸ்டு | 5 |
| | செப்டம்பர், | டிஸம்பர் | 2 |
| | | அக்டோபர் | 0 |

கொடுக்கப்பட்ட வருஷத்தில் நூற்றாண்டாகிய 19ஐ நீக்கிய எண்ணுடன் அதை 4ஆல் வகுத்து வரும் ஈவையும், கொடுக்கப்பட்ட தேதியையும் கூட்டி, கொடுக்கப்பட்ட மாதத்துக்கான மேலே கண்ட எண்ணைக் கழித்து 7ஆல் வகுத்தால் வரும் மீதி 0 அல்லது 1 முதல் 6 வரை வரக்கூடும். அதைக் கொண்டு அடியிற்கண்டபடி கிழமை சொல்லலாம்.

| | | |
|---|---|---|
| ஞாயிறு | -- | 0 |
| திங்கள் | -- | 1 |
| செவ்வாய் | -- | 2 |
| புதன் | -- | 3 |
| வியாழன் | -- | 4 |
| வெள்ளி | -- | 5 |
| சனி | -- | 6 |

உதாரணம்: நாம் எந்தக் கிழமையில் சுதந்திர மடைந்தோம் என்பதைக் கண்டு பிடிப்போம்.

1947, ஆகஸ்டு 15ந் தேதி

| | |
|---|---|
| 19ஐ நீக்கிய எண் ... ... ... | 47 |
| 47ஐ 4ஆல் வகுக்க ஈவு ... ... | 11 |
| தேதி ... ... ... ... ... | 15 |
| மொத்தம் ... ... ... ... | 73 |
| ஆகஸ்ட் மாதத்திற்கான எண்ணைக் கழிக்க ... ... ... | 5 |
| | 68 |
| 68-ஐ 7-ஆல் வகுக்க மீதி ... ... ... | 5 |

5 வெள்ளிக்கிழமையைக் குறிக்கும்.

எனவே, நாம் வெள்ளிக்கிழமை சுதந்திர மடைந்தோம்.

அனுப்பியவர் : '[illegible]'

# நாடக மேதை கட்கரி

## வி.எஸ். சுக்டண்கர்

மகாராஷ்டிர இலக்கியத் துறையிலே மிகப் புகழ்பெற்றவர் ராம்கணேஷ் கட்கரி. சிறந்த அறிவாளி. 'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்னும் வாக்கை மெய்ப்பித்தவர். ஆனால் ஒரு விதத்தில் அதிர்ஷ்டக் கட்டை. குடும்பமோ மிகவும் வறுமை தோய்ந்தது. போதாக்குறைக்கு வயிற்றுப்பாட்டுக்கு வழி செய்து தந்த தந்தையை இளம் பிராயத்திலேயே இழந்து விட்டார். அதன் பலனாக அவருடைய கல்வித் தேட்டம் தடைப்பட்டது. துரதிர்ஷ்டத்துக்கிடையே அவர் செய்திருந்த அதிர்ஷ்டம் என்ன வென்றால், என்னதான் இன்னல்கள் வந்துற்ற போதிலும் மகனைப் படிக்க வைத்து ஆளாக்க வேண்டும் என்னும் பெருநோக்கம் கொண்டிருந்த அன்னையைப் பெற்றிருந்ததுவே யாகும். எதிர்ப்பட்ட இடையூறுகளை யெல்லாம் எதிர்த்து நின்று அவரது தாயார் அவரை எப்படியோ மெட்ரிகுலேஷன் வரை படிக்க வைத்து விட்டார். தாயின் இம்முயற்சிக்குப் பெருமை சேர்க்கும் வகையில், நன்றாகப் படித்து வடமொழிக்காக ஜகந்நாத சங்கர் சேட் என்பவர் நிறுவியிருந்த உபகாரச் சம்பளத்தில் பாதியைப் பெற்றார் கட்கரி. பம்பாய் சர்வகலாசாலையின் சார்பில் வழங்கப்படும் இந்தப் பரிசை அடைய யாருமே அவா கொள்வர் என்றால், அதன் சிறப்பைத் தனியாக எடுத்துக் கூறவும் வேண்டுமா?

சிறப்பாக மெட்ரிகுலேஷனில் தேறிய போதிலும், பொருளாதார சிரமம் அவரைக் கல்லூரிப் படிப்பை மேற்கொண்டு தொடர விடவில்லை. 'கிர்லோஸ்கர் நாடக மண்டலி' என்னும் நாடகக் குழுவில் ஊழியராக அமர்ந்தார். அவரது பணி என்ன, தெரியுமா? நாடகம் நடைபெறும் நாட்களில் கொட்டகை வாசலில் நின்று டிக்கெட்டுகளைச் சோதிப்பதுதான். இந்தப் பணியில் ஈடுபட்டிருக்கும் நாட்களில் தான் அவர் 'பிரேம சந்நியாசம்' என்னும் தமது முதலாவது சமூக நாடகத்தை எழுதினார்.



ராம்கணேஷ் கட்கரி

அந்த நாடகம் அவர் பணியாற்றி வந்த நாடகக் கம்பெனி மூலமே மேடையேறியது. நகைச்சுவையில் சிறந்தோங்கி யாருமே எதிர்பாராத வெற்றியைக் கண்டது.

நாடகத்தை அறிமுகப்படுத்தும் வாயிலாக ஸ்ரீ கட்கரி தாம் கீழ்த்தரச் சிப்பந்தியாக—நுழைவுச் சீட்டு ஆய்வாளராக — பணியாற்றி வருவதை நகைச்சுவை இழையோட வேடிக்கையாகக் குறிப்பிட்டிருந்தார்:

மகாராஷ்டிர ரசிகப் பெருமக்களுக்கு ஓர் அதிர்ச்சி! நாடகக் கொட்டகையின் நுழைவாயிலில் நின்று நுழைவுச் சீட்டைச் சோதித்து அனுப்பும் இவனை நாம் நீண்ட நாட்களாகப் பார்த்திருக்கிறோமே! இவனுக்கு என்ன ஆணவம் இருக்க வேண்டும், இப்படி ஒரு நாடகம் எழுதி, இதே மேடையில் அரங்கேற்றித் தன்னை ஒரு பெரிய நாடக ஆசிரியன் என்று தம்பட்டம் அடித்துக் கொள்ள..? என் புன்மைக்கும் இடம் அளித்து ஆதரவு காட்டும் அவர்களுடைய பெருமைக்கு நான் சிரம் தாழ்த்துகிறேன். அதோடு இந்த நாடகத்தைக் கண்டுகளிக்கும் பொழுது இதன் ஆசிரியனது சிறுமையை—அவன் ஒரு நுழைவுச் சீட்டுப் பரிசோதகன் தானே என்னும் எண்ணத்தை — மறந்து நாடகத்தை நாடகமாகப் பார்த்து மகிழுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

## 2

இளம் பிராயத்தில் கட்கரிக்கு எப்படியாவது படித்துப் பட்டதாரியாகிவிட வேண்டுமென்று ஆசை.

எனவே, அவர் முதல் நாடகம் கிர்லோஸ்கர் நாடக மண்டலியில் ஏற்கப்பட்டு முன்பணம் கிடைத்ததும், பர்குஸன் கல்லூரியில் சேர்ந்து படிக்க அதனைப் பயன்படுத்தினார்.

கல்லூரியில் முதலாண்டு மாணவராகக் கடைசி பெஞ்சியில் அமர்ந்திருந்த அவர் ஒரு நாள் புத்தகமாக உருப்பெற்றுக் கொண்டிருந்த தமது முதல் நாடகத்தின் அச்சுப்படிகளைத் திருத்துவதில் முனைந்திருந்தார். வகுப்புப் பாடங்களைக் கவனிக்காமல் அவர் வேறு ஏதோ செய்து கொண்டிருக்கிறார் என்பதைக் கண்ணுற்ற பேராசிரியர் பாட்டே கடுமையான குரலில் அவரைப் பெயர் சொல்லிக் கூப்பிட்டு, வகுப்புப் பாடங்களில் கவனம் செலுத்தாமல் இருப்பதற்காக மாணவர்களின் மத்தியிலேயே மிகவும் கடிந்து கொண்டு விட்டார்.

சில நாட்களுக்கெல்லாம் கட்கரி அச்சான தமது நாடகத்தின் ஃபாரங்களை எடுத்துக் கொண்டு அதே பேராசிரியரிடம் முன்னுரைக்காகப்போனார். பேராசிரியர் பாட்டே மராத்தி

இலக்கியத்திலே சிறந்த ஆசிரியராகவும் விமரிசகராகவும் புகழ் பெற்று விளங்கினார். 'படித்துப் பார்த்துத் தகுதி வாய்ந்தது என்று கருதினால் முன்னுரை தந்து உதவுங்கள்' என்று வேண்டினார் கட்கரி. பேராசிரியர் பாட்டே அதைக் கேட்டு அயர்ந்து போனார். 'சில நாட்கள் முன்பு, தாம் கடிந்து கொண்ட மாணவனுக்கு இவ்வளவு துணிச்சலா? இந்தச் சின்ன வயதில் ஒரு நாடகம் எழுதி அதற்குத் தம்மிடமே முன்னுரை கேட்டு வருவதா?' என்று எண்ணினார்.



ஸ்ரீ பாதகிருஷ்ண கோல்ஹட்கர்

கட்கரி பரிதாபமாகத் தம் நிலையை எடுத்துரைத்தார். தாம் கட்டுரை எழுதி வைத்திருப்பதாகவும் வீட்டில் மறந்து வைத்து விட்டதாகவும், மறுநாள் கொண்டு வந்து காட்டுவதாகவும் கூறினார். ''நாளைக்கென்றால் நடக்காது. இப்போதே போய் எடுத்து வந்து காட்டு. அதுவும் ஒரு மணி நேரத்துக்குள்!'' என்றார் பேராசிரியர்.

கட்கரி கல்லூரியிலிருந்து இரண்டு மைல் தொலைவில் வசித்து வந்தார். நடுப் பகலில் கொளுத்தும் வெய்யிலில் நடந்து சென்று ஒருமணி நேரத்துக்குள்ளாக அந்தக் கட்டுரையை எடுத்து வந்து காட்டினார். அப்புறம்தான் பேராசிரியர் அவருக்கு அபராதத் தொகை கட்டுவதிலிருந்து விலக்கு அளித்தார்.

ஆனால் நாடகத்தைப் படித்து முடித்ததும் அவர் வியப்பு மகிழ்ச்சியாக மாறியது. அந்த நாடகத்துக்கு முன்னுரை எழுதியதோடு மட்டுமின்றி, அதன் இலக்கியத் திறனைப் பாராட்டிப் பாராட்டி மகிழவும் செய்தார்.

## 3

முதல் நாடகமே கட்கரிக்குப் பெயரையும் புகழையும் வாரித் தந்தது. கிர்லோஸ்கர் நாடகக் குழு இரண்டாவது நாடகம் எழுதித் தருமாறு அவரை வற்புறுத்தியது. கல்லூரிப் படிப்பைத் தொடர்ந்தவண்ணமே அவர் 'புண்ணியப் பிரபாவம்' என்னும் நாடகத்தை எழுதத் தொடங்கியிருந்தார்.

ஸ்ரீ வி. பி. பட்டவர்த்தன் ஆங்கிலப் பேராசிரியர்களில் தலைசிறந்தவர். பர்குஸன் கல்லூரியில் பணியாற்றி வந்தார். முதல் நாள் அவர் குறிப்பிட்டிருந்த கட்டுரையை மறு நாள் மாணவர்கள் வீட்டில் எழுதி வரவில்லை என்பதற்காக ஒரு சமயம் தலா ஒரு ரூபாய் அபராதம் விதித்து விட்டார். அபராதம் விதிக்கப்பட்ட மாணவர்களிலே கட்கரியும் ஒருவர். வகுப்பு முடிந்ததும் கட்கரி பேராசிரியரின் வீட்டுக்கு அவரைப்பார்க்கச் சென்றார். கல்லூரியை ஒட்டினாற்போல் இருந்தது அவரது வீடு. கட்கரி காம்பவுண்டைத் தாண்டி உள்ளே நுழைவதைக் கண்ட பேராசிரியர், கோபம் குமுற, ''கட்கரி, நீ இங்கே எதற்காக வருகிறாய் என்று எனக்குத் தெரியும். திரும்பிப் போ, என்னைப் பார்ப்பதனால் பயனில்லை. உன் அபராதத் தொகையை வஜா செய்ய முடியவே முடியாது'' என்று கூறினார்.



சிந்தாமணராவ் கோல்ஹட்கர்

## 4

கட்கரி சிறந்த நாடகாசிரியர் மட்டும் அல்ல; புலமை மிகுந்த கவிஞராகவும், சிறந்த நகைச்சுவை எழுத்தாளராகவும் கூடத் திகழ்ந்தார்.

பேராசிரியர் பட்டவர்த்தன் ஆங்கிலப் புலமை மிக்கவர். பாடல்களின் நயத்தை எடுத்து ஓதுவதில் வல்லுநர். பிரௌனிங்கின் கவிதைகள் இண்டர்மீடியட் வகுப்புக்குப் பாடமாக வைக்கப்பட்டிருந்தன. தமது இரண்டாவது நாடகத்தை முடிக்க வேண்டிய நிர்ப்பந்தத்தின் காரணமாகக் கட்கரியினால் கல்லூரிக்குச் சரிவரப் போக முடியவில்லை. பேராசிரியர் பட்டவர்த்தனின் கற்பிக்கும் முறையில் மனத்தைப் பறிகொடுத்த கட்கரி தினமும் இரவு நேரத்தில் ஸ்ரீ பி. கே. கோடே என்னும் தமது சக மாணவர் வீட்டுக்குப் போய், ஆசிரியரின் விளக்கங்களை அவர் வாயிலாகக் கேட்டு மனத்தில் பதிய வைத்துக் கொள்வார். அறிவுத் தேட்டத்தில் அத்தனை அக்கறை கட்கரிக்கு.

## 5

கட்கரியின் மூன்றாவது நாடகம் எராளத் தப் பகைப்புலனிலே பின்னப்பட்டது. 'ராஜ சந்நியாசம்' என்ற தலைப்புள்ள அந்த நாடகம் மராத்தி இலக்கியத்திலே உயர்ந்த உண்மை வைரமெனத் திகழ்வது. துரதிர்ஷ்டவசமாக அந்த

முடிக்காமலே அவர் மறைந்து விட்டார். அவர் இறந்தபின் அரைகுறை உருவிலேயே அது புத்தகமாக வெளியிடப்பட்டது. இந்த நாடகத்தில் ஒரு புதுமை என்னவென்றால், வாயில்லாப் பிராணி ஒன்றுக்கு — மாவீரன் சிவாஜியின் அன்புக்குப் பாத்திரமாயிருந்த நாய்க்கு—கட்கரி தமது நாடகத்தைச் சமர்ப்பணம் செய்திருந்தார்.

ஒரு விஷயம் இங்கே குறிப்பிட வேண்டும். சிவாஜி காலமான இடம் ராய்கட் கோட்டை ஆகும். அவரது சடலத்தைச் சிதையில் கிடத்தித் தீயிட்ட பொழுது, அவருடைய அன்புக்குப் பாத்திரமான அந்த நாய் வேதனை தாளாமல் அந்தச் சிதையையே சுற்றிச் சுற்றி வந்தது. தீ வளர்ந்து கொழுந்து விட்டு எரிந்த பொழுது, அது ஓர் ஆவேசத்தால் உந்தப்பட்டுச் சிதைத் தீயில் குதித்துத் தன் எசமானருடைய சடலத்தோடு தன்னையும் எரித்துக் கொண்டு மரித்தது. அதற்குச் சில நாட்களுக்குப் பின் மக்கள் சிவாஜியின் நினைவாகச் சமாதி எழுப்பினர். அப்பொழுது அவரது அன்புக்கு அன்பாக இருந்த நாயையும் அவர்கள் மறக்கவில்லை. அருகிலேயே அதற்கும் ஒரு சமாதி எழுப்பினர். வாயில்லாப் பிராணிக்கும் மனிதனுக்கும் இடையே ஏற்பட்ட அன்பின் நினைவுச் சின்னமாக அவ்விரு சமாதிகளையும் இன்றும் அங்கே காணலாம். ஆனால் அந்தக் கோட்டையைக் காணப் போகிறவர்கள்தானே இந்தச் சமாதிகளையும் காண முடியும்? கட்கரி அந்த நாய்க்குத் தமது நூலைச் சமர்ப்பித்த நிகழ்ச்சி இன்னும் பரந்த, நிரந்தரமான நினைவுச் சின்னமாகி விட்டது. மராத்தி இலக்கியமும் வரலாறும் வாழும் வரையில் இந்த நினைவுச் சின்னமும் வாழும் என்பதில் ஐயமில்லை.



மாஸ்டர் தீனநாத

## 6

ஸ்ரீபாத கிருஷ்ண கோல்ஹட்கரும், ராம் கணேஷ் கட்கரியும் மகாராஷ்டிரத்திலே சிறந்த நகைச்சுவையாளராகவும் நாடக ஆசிரியர்களாகவும் போற்றப்படுகின்றனர். கட்கரி வயதில் இளையவர். தமக்கு மூத்தவரான கோல்ஹட்கரை அவர் தமது இலக்கிய குருவாகவே மதித்து வணங்கி வந்தார். குருவுக்கு மிஞ்சிய சீடனாக அல்ல; குரு மெச்சிய சீடனாகப் பெயரும் புகழும் எடுத்து வாழ்ந்தார்.

ஒருசமயம் ஏதோ கோபத்தில் கோல்ஹட்கர் கட்கரியுடன் பேசுவதை நிறுத்தியிருந்தார். இந்தப் பேச்சு நிறுத்த காலத்தில் ஒரு நாள் கோல்ஹட்கரும் கட்கரியும் வழியில் சந்திக்க நேர்ந்தது. கட்கரி அவரை வழியில் நிறுத்திப் பேசலுற்றார். கோல்ஹட்கரோ முகத்தைச் சுளுக்கிக் கொண்டு, மறுபுறம் பார்த்தவாறே, ''நான் ஒரு கழுதையுடன் பேசத் தயாராயில்லை!'' என்றார். கட்கரி அவரது இந்த வார்த்தைகளைச் சிறிதும் பொருட்படுத்தாமல் சிரித்தவாறே, ''ஆனால் நான் பேசத் தயாராக இருக்கிறேனே!'' என்றார். இதைக் கேட்டதும் கோல்ஹட்கர் கடகட வென்று வாய் விட்டு உரக்கச் சிரித்தார். அந்தக் கணமே கோபம் இருந்த இடம் தெரியாமல் மறைந்தது; இருவரிடையேயும் மீண்டும் பழைய சுமுக நிலை நிலவியது.

## 7

சிந்தாமண்ராவ் கோல்ஹட்கரும், மாஸ்டர் தீனநாத்தும் ஆரம்பத்தில் வெவ்வேறு நாடகக் குழுக்களிலே நடிகர்களாகப் பணியாற்றி வந்தார்கள். பிரபல பின்னணிப் பாடகி லதாமங்கேஷ்கரின் தந்தைதாம் மாஸ்டர் தீனநாத். இருவரும் தங்கள் குழுக்களை விட்டு வெளியேறிச் சொந்தமாக ஒரு நாடகக் குழு அமைத்துக் கொண்டனர். அதற்குப் பலவந்த் நாடக மண்டலி என்று பெயர்.

சிந்தாமண்ராவ் கோல்ஹட்கர் கட்கரிக்கு ஆப்த நண்பர். இருவருக்கும் இடையே நட்பு தோன்றியதற்குக் காரணம் நாடகக் கலையின்பாலுள்ள ஈடுபாடுதான் என்றாலும் நட்பு வளர்ந்து மேலும் முதிர்ந்ததற்கு மற்றொரு பொருளும் காரணமாக அமைந்தது. அது மதுபானம்தான். மராத்தியில் வெளியாகியுள்ள தமது சுய சரிதையில் கோல்ஹட்கர் இந்த மது—நட்பை ஒளிவு மறைவின்றி ஒப்புக் கொண்டிருக்கிறார்.

இப்படிக் குடிப் போட்டியில் ஈடுபட்டிருந்த பொழுது கோல்ஹட்கர் ஒருநாள் திடீரென்று விம்மி விம்மி அழத்தொடங்கிவிட்டார். தமது நண்பர் அழுவதைக் கண்டு வேதனையுற்ற கட்கரி அதற்கான காரணத்தைக் கேட்டார். தமது நாடகக் குழு இருக்கும் நிலையையும் அது நஷ்டத்தில் நடந்து கொண்டிருப்பதையும் எடுத்துக் கூறி, கட்கரி போன்றவர்களிடமிருந்து சிறந்த நாடகங்களை நிறையச் சன்மானம் கொடுத்துப் பெற்று மேடையேற்ற இயலாத நிலைமையில் இருப்பதையும் அவர் எடுத்துரைத்தார். துயரம் தரும் இந்தச் செய்தி கட்கரியின் மனத்தைத் தொட்டது. கோல்ஹட்கரை இறுகத் தழுவிக் கொண்டு அநுதாபத்துடன் போதை நிலையிலேயே கூறினார்: ''நான் 'பாவ பந்தனம்' என்றொரு நாடகம் எழுதத்

தொடங்கியிருக்கிறேன். அதை வேறு எந்த நாடகக் குழுவுக்கும் தராமல், உமது பலவந்த நாடகமண்டலிக்கே தருவேன். அதன்மூலம் எனக்கு எவ்வளவு குறைவான வருவாய் வந்தாலும் பொருட்படுத்த மாட்டேன்.''

போதை மயக்கத்தில் கொடுத்த வாக்குறுதியானாலும் கட்கரி அதை முழு மனத்துடன் நிறைவேற்றவே முயன்றார். ஆனால் உடல் நிலை நாளுக்குநாள் சீர்கெடுறவே, அவரால் அதைச் சீக்கிரம் முடிக்க முடியவில்லை. அதற்குள் காலனே அவரை நெருங்கி விட்டான்.

கட்கரி நோய்வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையாகக் கிடந்தபொழுது, தம்மை மரணம் நெருங்கி விட்டது என்பதை உணர்ந்தார். கடைசி மூச்சு பிரிவதற்கு முன் எப்படியாவது முனைந்து நாடகத்தை முடித்துவிட வேண்டுமெனத் திட்டமிட்டார். முழுமூச்சுடன் தம் திட்டத்தை நிறைவேற்றியும் விட்டார். நாடகத்தின் கடைசிக் காட்சியினைத் தாம் இறந்த தினத்தன்றுதான் சொல்லி எழுத வைத்தார். நாடகத்தின் முடிவுக் காட்சியை எழுதுவித்து முடித்த சில மணி நேரத்துக்கெல்லாம் அவருடைய ஆவியும் பிரிந்து விட்டது.

அந்த நாடகம் பலவந்த் நாடகமண்டலிக்குப் பெரும் புகழைத் தேடித் தந்ததோடு பொருளாதாரத் துறையிலும் அக்குழுவைக் காலூன்றி நிற்க வைத்து விட்டது.

இந்த நாடகம் பொருளாதாரச் செழிப்பைத் தந்தது ஒருபுறமிருக்க, நாடகக் கலைக்கும் நடிப்பு வாய்ப்புக்கும் ஓர் எடுத்துக்காட்டாக விளங்கியது. மாஸ்டர் தீனநாத் இந்த நாடகக் குழுவின் பிரதான நடிகர். பல நாடகங்களிலே கதாநாயகியாக நடித்துப் புகழ் பெற்றவர். 'பாவ பந்தனம்' என்னும் இந்த நாடகத்தில், கதாநாயகி 'லதிகா'வாகத் தோன்றி அவர் நடித்துப் பாடிய பாடல்கள் அவருடைய புகழைப் பன்மடங்கு உயர்த்தி விட்டன.

'பாவபந்தனம்' கட்கரி காலமானபின் புத்தக உருவம் பெற்றது. அவருடைய குரு ஸ்ரீபாதகிருஷ்ண கோல்ஹட்கர் தமது அறிமுகவுரையில் குறிப்பிடுகிறார்:

''கற்பனைப் படைப்பின் வரலாற்றிலே, கட்கரியின் 'பாவபந்தனம்' மிகச் சிறந்து நிற்கிறது. இதன் பிறப்புக்கிடையே ஒரு துயரம் தரும் நிகழ்ச்சி நேர்ந்து விட்டதென்றாலும், இதற்கு ஈடு இணையான படைப்பு இலக்கிய உலகிலேயே வேறு கிடையாது என்று சொல்லும் அளவுக்கு உயர்ந்து நிற்கிறது. நாடகக் கலையின் தந்தையெனப் புகழ்பெற்ற கட்கரியின் ஆவி பிரிந்த வேளையில் அவரது கற்பனைக் குழந்தை இந்த உலகத்தில் பிறந்தது: பிறந்து தன்னைப் படைத்தவனின் பெருமையையும் நிலைநாட்டியது.''— ரா.வீ.

## தலை தப்பினார்!



அன்று அவர் ஏதோ சிந்தனையாக நடந்து கொண்டிருந்தவர் நிமிர்ந்து பார்த்தார். எதிரில் அவருக்குக் கடன் கொடுத்தவன் ஒருவன் குதிரையில் வந்து கொண்டிருந்தான். எப்படியாவது நழுவி விடலாமா என்று அங்குமிங்கும் பார்த்தார். பக்கத்தில் ஓர் இடமும் தென்படவில்லை. அவனிடமிருந்து தப்ப வேண்டுமென்றால் ஓடுவது ஒன்றுதான் வழி. நடுத் தெருவிலே நாலு பேர்கள் பார்க்க எப்படி ஓடுவது? அதுவும் பிரபல ஆங்கில எழுத்தாளர் ஷெரிடன் அப்படி ஓட முடியுமா?

இதற்குள் கடன் கொடுத்தவனும் அருகில் வந்து விட்டான். ஷெரிடனுக்குக் கையும் ஓடவில்லை. காலும் ஓடவில்லை. 'பாவி மனிதன் நடுத் தெருவில் வைத்து மானத்தை வாங்கிவிடுவானே' என்று நடு நடுங்கிப் போய் விட்டார் ஷெரிடன். அவருக்கு ஏற்பட்ட பதற்றத்தில், 'ஐயா! நீங்கள் ஏறி வரும் குதிரை மிகவும் அழகாக இருக்கிறது' என்றார் அந்தக் கடன்காரனைப் பார்த்ததும்.

'அப்படியா!' என்று அளவற்ற மகிழ்ச்சியுடன் கேட்டான் அவன். தன் புரவியைப் புகழ்ந்ததில் அவன் அப்படியே பூரித்துப் போய் விட்டான்.

'ஆமாம், உண்மையைத்தான் சொல்கிறேன். ஓட்டத்தில் எப்படி?' என்றார் ஷெரிடன்.

'ஓட்டத்தில் ஒன்றும் குறைந்ததல்ல. நீரே பாரும்!' என்று ஓர் அழுத்து அழுத்தினானோ, பார்க்கலாம். குதிரை பிய்த்துக் கொண்டு பறந்தது.

'அப்பாடா!' என்று ஆறுதல் பெருமூச்சு விட்டார் ஷெரிடன்.

## நரகத்துக்கு வரச் சொல்!

வால்டேர் எப்பொழுதும் சுறுசுறுப்பாக வேலை செய்து கொண்டிருப்பார். அப்பொழுது அநாவசியமாக யாராவது தொந்தரவு செய்தால் அவருக்கு அளவுமீறிக் கோபம் வந்துவிடும்.

ஒரு நாள் பணியாள் ஓடோடி வந்து, 'ஐயா! தங்களைப் பார்ப்பதற்காக யாரோ ஒருவர் வந்திருக்கிறார்!' என்றான்.

'என்றால் இப்போது அவரைப் பார்க்க இயலாது' என்றார் வால்டேர்.

'சொன்னேன். போக மறுக்கிறார்' என்றான் பணியாள்.

'சரி, வால்டேர் இறந்து கொண்டிருக்கிறான் என்று சொல்!' என்று கோபமாகச் சொல்லி அனுப்பினார் அவர்.

மீண்டும் பணியாள் வந்து, 'ஐயா, அப்படியே கூறினேன். அப்படியும் போக மறுக்கிறார்' என்றான்.

'பெரிய தொல்லையாக இருக்கிறதே. வால்டேர் இறந்து விட்டான் என்றே போய்ச் சொல்லிவிடு' என்று சொல்லி அனுப்பினார்.

வெளியில் சென்று மீண்டும் உள்ளே வந்த வேலைக்காரன், மெதுவாக, 'ஐயா! அவர் தங்களுடைய சடலத்துக்குத் தன் கடைசி மரியாதையைச் செலுத்த வேண்டுமாம்!' என்றான்.

'சரி! நான் முன்பே எரிக்கப்பட்டு விட்டேன் என்று சொல். மீண்டும் அவன் வற்புறுத்தினால் நான் நரகத்தில் இருப்பேன்! அங்கு வந்து சந்திக்கச் சொல்' என்றார் வால்டேர்.

ஆதாரம்: உலக அறிஞர்கள்
தகவல்: சத்தியமூர்த்தி



# உங்கள் வயது என்ன?

நாடோடி

உங்களைத்தான் கேட்கிறேன், உங்கள் வயது என்ன?

''உங்கள் வயது என்ன?'' என்று இந்தக் காலத்தில் யாரைக் கேட்டாலும் உண்மையான பதில் வருமா என்பது சந்தேகந்தான். ஸ்திரீகளைப் பார்த்து இந்தக் கேள்வியைக் கேட்கக் கூடாது. அப்படிக் கேட்டாலும் அவர்கள் பதில் சொல்ல மாட்டார்கள், அப்படிச் சொன்னாலும் உண்மையான பதில் வராது. ''தம் நிஜ வயதைச் சொல்லுகிற ஸ்திரீகளை நம்பக் கூடாது. அவர்கள் எதையும் சொல்லுவார்கள்'' என்று கூறுகிறார் ஆஸ்கார் ஒயில்ட் என்னும் ஆங்கில ஆசிரியர்.

அதிலும் கல்யாணமாகாத பெண்களைப் பார்த்து இந்தக் கேள்வியைக் கேட்டால் நிச்சயமாக அவர்கள் சொல்ல மாட்டார்கள். தவறு, தவறு. சொல்வார்கள்: ஆனால் பதினெட்டுக்கு மேல் நெடுங்கணக்கு இருப்பதாக அவர்களுக்குத் தெரியாததால் என்றும் பதினாறாக இருக்கும் மார்க்கண்டேயனைப் போல அவர்கள் என்றும் பதினெட்டுத்தான்! ஒரு வேளை, இன்று ஒன்று சொல்வது, நாளை ஒன்று சொல்வது என்று அவர்கள் வைத்துக் கொள்ளாததுதான் இதற்குக் காரணமாக இருந்தாலும் இருக்கலாம்.

இந்தச் சமயம் நான் எப்பொழுதோ படித்த ஒரு விஷயம் ஞாபகம் வருகிறது. இரண்டு பெண்கள் தங்களிடையே பேசிக் கொண்டார்கள். ஒருத்தி சொன்னாள்: 'நான் இருபத்தைந்தாவது வயது வரும் வரை கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போவதில்லை' யென்று. ஆனால் இன்னொருத்தியோ, ''எனக்குக் கல்யாணம் ஆகும்வரை எனக்கு இருபத்தைந்து வயது ஆகப் போவதில்லை'' யென்று.

ஆகவே, வயதைத் தங்கள் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கும் ஸ்திரீகளை, ''உங்கள் வயது என்ன?'' என்று கேட்பதற்குக் கேட்காமலேயே இருக்கலாம்.

ஸ்திரீகள் விஷயத்தில் ஆளைப் பார்த்து வயதைக் கண்டுபிடித்து விடலாம் என்பதும் முடியாது. டாரதி சேயர்ஸ் என்னும் ஒரு மேல்நாட்டு ஆசிரியை கூறுகிறார்: ''பெண்களைச் சூரிய வெளிச்சத்தில் பார்த்தால் நாற்பத்திரண்டு வயதாகத் தோன்றும். விளக்கு வெளிச்சத்தில் பார்த்தால் முப்பத்தைந்தாகத் தோன்றும். அவளையே அரங்கமேடையில் பார்த்தால் இருபத்தைந்தாகத் தோன்றும்.''

ஆகவே, இந்த ஸ்திரீகளைப் பற்றிப் பேசி மூளையைக் குழப்பிக் கொள்வதை விடுத்து, ஆண்களைப் பற்றியே பேசுவோம்.

சமீபத்தில் பல அறிஞர்களின் கருத்துக்கள் அடங்கிய ஒரு புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்தேன். அப்பொழுது திடீரென்று ஓர் எண்ணம் தோன்றியது. எந்தெந்த வயதில் மனிதர்கள் எப்படி இருப்பார்கள் என்பதைப் பற்றி, பல அறிஞர்கள் பல இடங்களில் கூறியிருந்தார்கள். இவற்றை ஒன்று திரட்டி வெளியிட்டால், ருசிகரமாக இருக்குமே என்று ஒன்று திரட்டியிருக்கிறேன்.

இதைக் கொண்டு, தங்கள் வயதுக்கு என்ன சொல்லியிருக்கிறது என்று தெரிந்து கொள்ளுகிறவர்கள் தெரிந்து கொள்ளலாம். தங்கள் வயது தெரியாதவர்கள் சொல்லப்பட்டிருக்கும் விஷயத்தைக் கொண்டு தங்கள் வயதைக் கண்டுபிடிக்கலாம்.

ஆனால் இதில் தவறாகச் சொல்லியிருந்தால் அதைப் பற்றிக் கவலைப்படத் தேவையில்லை. தினசரிப் பத்திரிகைகளில் வெளியாகும் ராசி பலன்களைப் படிக்கும் நாம், பலன்கள் நல்லதாகப் போட்டிருந்தால் ஜோசியம் உண்மை என்றும், கெடுதலாகப் போட்டிருந்தால் ஜோசியம் பொய் என்றும் கொள்கிறோமல்லவா, அப்படியே இது விஷயத்திலும் கொள்ளலாம்.

**20**

இருபதில் அழகாக இல்லாதவன் பின் அழகாகவே இருக்கமாட்டான்.

—ஜார்ஜ் ஹெர்பர்ட்

இருபதில் மனிதன் மயில்.

—பால்தஸார் கிரேஸியன்

இருபதில் மன உறுதி ஓங்கியிருக்கிறது.

—பிராங்ளின்

**30**

முப்பதில் உடல் திடகாத்திரமாக இல்லாதவன் பின் திடகாத்திரமாகவே இருக்கமாட்டான்.

—ஜார்ஜ் ஹெர்பர்ட்

முப்பதில் மனிதன் சிங்கம்.

—பால்தஸார் கிரேஸியன்

முப்பதில் புத்தி ஓங்கியிருக்கிறது.

—பிராங்ளின்

முப்பதாவது வயது வரையில் பெண்களைக் கவரும் வகையில் ஆடை அணிய வேண்டும்.

—வில்லியம் ஷென்ஸ்டோன்

முப்பதாவது வயது வரையில் மனிதனுக்கு எந்த ஸ்திரீயும் கண்ணுக்கு அழகாகத்தான் தோன்றுவாள். — பைரன்

முப்பதாவது வயதில் மனிதன் தான் அசடா என்று சந்தேகிக்க ஆரம்பிக்கிறான். — யங்

முப்பதாவது வயதில் ஆண்களுக்கு இளமையும், உற்சாகமும் போய் விடுகின்றன. — எமர்சன்



35

முப்பத்தைந்தாவது வயதுக்குப் பிறகு நம் அறிவுத் திறன் குன்றய ஆரம்பிக்கிறது. — ஷேஸன்ஹார்

முப்பத்தைந்தாவது வயதில்தான் மனிதன் ஸ்திரீகள் விஷயத்தில் தன் சிந்தனையை உபயோகிக்கிறான். அதுவரையில் அவன் உணர்ச்சிவசத்தில்தான் இருந்தான்.

— ஆஸ்டின் ஓ. மல்லி

38

முப்பத்தெட்டாவது வயது ஆபத்தானதும் கெடுதல் ஆனதுமான வயது. அநேக கஷ்டங்களையும், வியாதிகளையும் அது கொடுக்கிறது. — மார்டின் லூதர்

39

இது மிக நல்ல வயது. எல்லாப் பொருள்களின் சரியான தரத்தை நிர்ணயிக்க மனிதன் அப்பொழுதுதான் கற்றுக் கொள்கிறான். —ஓர் அறிஞர்

40



மனிதன் நாற்பது வயதை அடைந்தும் கூட இருப்பவர்களால் ஒதுக்கப்படுவானுனால் கடைசிவரையில் அப்படித்தான் இருப்பான். — கன்ப்யூஷஸ்

நாற்பதில் மனிதன் தான் அசடு என்று தெரிந்து கொள்ளுகிறான். — யங்

நாற்பதில் விவேகம் மேலோங்கியிருக்கிறது —பிராங்ளின்

நாற்பதில் பணம் இல்லாதவன் என்றுமே பணத்தோடு இருக்க மாட்டான். ஜார்ஜ் ஹெர்பர்ட்

நாற்பதில் மனிதன் ஒட்டகம். —பால்தஸார் கிரேஸியன்

நாற்பது வயதுக்கு மேல் சாமர்த்தியமாகப் பழகாதவன் ஒன்று மூளையற்றவன்; அல்லது மேதை. — லின் யு டாங்

நாற்பது வயதுக்கு மேலும் பிறர் சொல்வதற்கெல்லாம் தலையை ஆட்டுகிறவன் அயோக்கியன். — பெர்னர்ட் ஷா

45

நாற்பத்தைந்து வயதிலிருந்து அநேகர் வெகு அலட்சியமாக வாழ ஆரம்பித்து விடுகிறார்கள், இனி தங்களை எதிர்நோக்கி இருப்பது சாவும் அழிவும்தானே என்று.

—ஜோஸப் கொன்ராட்

46

நாற்பத்தாறுவது வயதிலிருந்துதான் கிழப் பருவம் ஆரம்பிக்கிறது என்பது பொதுப்படையான கருத்து. —சிசெரோ

50




மனிதனுக்கு ஐம்பது வயது ஆனதும் அவனைக் கெட்டிக்காரன் என்று சொல்லி ஏமாற்றலாம். ஆனால் அழகன் என்று சொல்லி நீ ஏமாற்ற முடியாது. — ஹேரா

ஐம்பதாவது வயதில் ஓய்வெடுத்துக் கொள்ளாத தொழிலதிபர், என்னுடைய கருத்துப்படி, வாழ்க்கையின் தத்துவத்தைப் புரிந்துகொண்டவர் அல்ல. — லின் யு டாங்

ஐம்பதாவது வயதில் மக்காக இருப்பவனை இனி மாற்ற முடியாது. அவன் அத்தனை உறுதி பெற்று விட்டான்.

— நதானியல் காட்டன்

ஐம்பதில் அறிவில்லாதவன் இனி அறிவுடன் விளங்க மாட்டான். — ஜார்ஜ் ஹெர்பர்ட்.

ஐம்பதில் மனிதன் பாம்பு. — பால்தஸார் கிரேஸியன்

ஐம்பதாவது வயதில் தான் இன்னும் சரியான வழியில் செல்லவில்லை என்று மனிதன் மாறப் பார்க்கிறான். ஆனால் கடைசியில் ஒரு மாறுதலும் இன்றி இறக்கிறான். — யங்

60

அறுபது வயதான பிறகு ஒரு மனிதனால் விளையும் தீங்குகள் எல்லாம் அவன் மூளையினால்தான் உண்டாகின்றன. —ஹோரா

அறுபது வயதுக்கு மேற்பட்டவர்களால் ஒரு பயனும் இல்லை யென்பதுதான் என் அபிப்பிராயம். வர்த்தகம், அரசியல், தொழில் முதலிய எந்தத் துறையில் பார்த்தாலும் மனிதன் இந்த வயதில் வேலை செய்வதை நிறுத்துவதுதான் நல்லது.

—சர் வில்லியம் அஸ்டர்

அறுபது வயதில் மனிதனை ஓய்வெடுத்துக் கொள்ளச் சொல்வது மடத்தனம். அறுபது வயதுக்கு மேல் மனிதன் புதிதாக ஒன்றும் கண்டுபிடிக்காமல் இருக்கலாம். ஆனால் ஏற்கனவே தெரிந்ததை எந்தப் புது வழிகளில் பயன்படுத்த முடியும் என்று அவனால் கண்டுபிடிக்க முடியும்.

ஆல்பிரட் நார்த் வைட்ஹெட்

70

உலகத்தின் அறிவெல்லாம் இந்த வயதில் அசட்டுத்தனமாகத் தோன்றுமானால் எழுபதாவது வயது வரையில் உயிருடன் இருப்பது நல்லதல்ல. — கத்தே

75

என்னுடைய வியாதிகளாவன: சுவாச நோய், உடல் வீக்கம், குணப்படுத்த முடியாத எழுபத்தைந்தாவது பிராயம்.

— சாமுவேல் ஜான்ஸன்

77

எழுபத்தேழாவது வயது வந்து விட்டதா! இனி பொறுப்பாக நடந்து கொள்வது நல்லது. —சாமுவேல் ஜான்சன்

எழுபத்தேழு வயதுக்கு மேற்பட்டவர்களைப் பற்றி ஓர் அறிஞரும் ஒன்றும் சொல்லியிருப்பதாகத் தெரியவில்லை. ஒருவேளை அவர்கள் எப்படி இயங்குவார்கள் என்பது இவர்களுக்கே புரியாதிருக்கலாம்.

....ஆமாம், என்ன கேட்கிறீர்கள்? என் வயது என்னவென்று? என் வயதை யாருக்கும் சொல்லக் கூடாதென்று என் மனைவி சரசு கண்டிப்பான தடை உத்தரவு போட்டிருக்கிறாள். ஏனெனில் அதைக் கொண்டு தன் வயதை எல்லாரும் ஓர் உத்தேசமாகக் கண்டுபிடித்து விடுவார்கள் என்கிற பயம் அவளுக்கு இருக்கிறது.

உங்கள் காதோடு ஒன்று சொல்லி வைக்கிறேன். என் மனைவியைப் ''பாட்டி'' என்று அழைக்க ஒரு வயதுப் பேரன் இருக்கிறான். அதிலிருந்து இந்தத் தாத்தாவின் வயது எவ்வளவாக இருக்கும் என்று நீங்களே ஊகித்துக்கொள்ளுங்கள்!

—இது முழுக்க முழுக்க ஆதாரக் கட்டுரை

# கரடியும் டாக்ஸியும்

அரங்கில் ஒரு தூண். அதில் ஒரு டெலிபோன் தொங்குகிறது. திடீரென சூட், தொப்பி போட்ட, மார்ஸ் என்ற கரடி ஏதோ அவசர ஜோலி இருப்பது போல் வேகமாக வருகிறது. டெலிபோனைக் கண்டதும், உடனே எண்ணைச் சுழற்றி யாரிடமோ என்னவோ பேசுகிறது. சில நிமிடங்களில் ஒரு டாக்ஸி, பழைய மாடல் கார் வருகிறது. கரடி கதவைத் திறந்து டிரைவர் பக்கத்தில் உட்கார, அதன் நாலு சக்கரங்களும் கழன்று நாலு பக்கமும் சிதறுகின்றன. 'ரேடியேட்டர்' கட புட என்று சத்தம் செய்யவே, டிரைவர் கரடி குளிர்ந்த தண்ணீர் கொண்டுவர டப்பாவை எடுத்துக் கொண்டு ஓடுகிறது. திடீரென்று மோட்டாரின் இன்ஜின் வெடித்து, ஒரே வெள்ளைப் புகை எழும்புகிறது.

இதை யெல்லாம் பார்த்த 'மார்ஸ்' கரடி சும்மாயிருக்கவில்லை. சக்கரங்களை அதனதன் இடத்தில் பிணைக்கிறது. டயருக்குக் காற்று அடிக்கிறது. 'பானட்டை'த் திறந்து பார்க்கிறது. ஏதாவது கோளாறு இருக்கிறதா என்று கண்டுபிடிக்க. ரேடியேட்டருக்குக் குளிர்ந்த தண்ணீரை ஊற்றுகிறது. இருப்பினும் கார் நகருவதாகத் தெரியவில்லை. மார்ஸ், டிரைவர்க் கரடியுடன், காரைத் தள்ள முயலுகிறது. ஊஹூம். கார் நகரவில்லை.

மார்ஸ் கரடி, கோட்டுப் பையிலிருந்து கர்ச்சீப்பை எடுத்து முகத்தைத் துடைத்துக் கொள்கிறது. மறுபடியும் டெலிபோனில் ஏதோ பேசுகிறது. உடனே ஒரு குதிரை வருகிறது; டிரைவர் கரடிக்குக் கைகாட்டி விட்டுக் குதிரையில் ஏறிச் செல்கிறது மார்ஸ்!

இவையெல்லாம் நடப்பது மாஸ்கோ சர்க்கஸில்தான். இந்தக் கரடிகளை மிக அருமையாக நடிக்கப் பழக்கியவர் வாசிலிகானின் என்பவர். 'இவ்வளவு அருமையாக நடிக்கும் என் கரடிகளை என் குழந்தைகளைவிட மிக அருமையாக வளர்க்கிறேன்' என்று பெருமையுடன் கூறுகிறார் வாசிலிகானின்.

ஆதாரம்: என். ஐ. பத்திரிகா, அலகாபாத்

தகவல்: கவிதா.

நாயனம் கந்தசாமிப்பிள்ளை சாப்பிட்டு விட்டு, கை கழுவ, செம்பில் தண்ணீருடன் வாசல் திண்ணைக்கு வந்தார். அவருக்குப் பிடித்தமான முருங்கைக்காய்க் குழம்பும், கத்திரிக்காய்த் துவட்டலும் இருந்தபடியால் சற்று அதிகமாகவே சாப்பிட்டு விட்டார். வயிறு நிறைந்துவிட்ட திருப்தியுடன், ''ஏவ்'' என்று சத்தமாக ஏப்பம் விட்டுக் கொண்டே கை கழுவி விட்டுச் செஷயப்பிள்ளை



கதிர்வேலு கொடுத்த துண்டினால் கையைத் துடைத்துக் கொண்டார். தெருவில் வெயிலின் கொடுமையால் அதிக ஆள் நடமாட்டமே இருக்கவில்லை. குப்பைத் தொட்டிக்கருகே கண்ணை மூடியபடி படுத்திருந்த சொறி நாய்கூடக் கண்ணைத் திறந்து பார்த்துவிட்டு எச்சில் இலை எதுவும் விழாமல் பிள்ளை சளசளவென்று கை கழுவிய தண்ணீர் மட்டும் உடம்பில் படவே, எழுந்து ஒரு முறை உடம்பை உதறிக் கொண்டு பிள்ளையைக் குரோதமாகப் பார்த்துவிட்டுத் தெருவோரத்தில் இருந்த முருங்கை மரத்தின் கீழ் முடங்கிக் கொண்டு மறுபடியும் கண்ணை மூடிக் கொண்டது. கனீர் என்ற வெயிலும், இடையே புழுதியைப் பரப்பிக் கொண்டு வீசிய அனல் காற்றும் கோடையின் வெப்பத்தைத் தெளிவுபடுத்தின. தெரு வீடுகளில் எல்லாம் வாசல் திண்ணையில் மூங்கில் தட்டி போட்டு மறைத்து, அதில் குளிர்ந்த நீரைத் தெளித்து, ஓரளவு வெயிலில் இருந்து தப்ப முயன்று கொண்டிருந்தார்கள் ஜனங்கள். விதியே என்று ஒன்று இரண்டு கூடை வியாபாரிகள் மட்டும் தொண்டையிலிருந்து குரல் கிளம்பாமல், தங்கள் கூடையில் இருக்கும் பொருள்களின் பெயரை இலேசாக முனகியபடியே நடந்து போய்க் கொண்டிருந்தார்கள்.

இரண்டு நிமிஷ நேரம் திண்ணையில் நின்று தெருவைப் பார்த்துவிட்டுப் பிள்ளை வீட்டுக்குள் வந்து கட்டிலில் உட்கார்ந்தவாறே, ''ஏண்டாலே, கதிர்வேலு! அந்தத் தவில் ஆடியபாதத்தின் வீட்டுக்குப் போய் அவரை வரச் சொல்லு. மதுரைல கச்சேரி முடிஞ்சா அடுத்த கச்சேரி வரையிலே இந்தப் பக்கமே எட்டிப் பார்க்கிறதில்லே'' என்றார். கதிர்வேலு வெற்றிலைப் பெட்டி, விசிறி எல்லாவற்றையும் கொண்டு வந்து கட்டிலருகே இருந்த ஸ்டூலில் வைத்தான். ஒரு தட்டில் மாம்பழத்தைத் துண்டுகளாக நறுக்கிக் கொண்டு வந்த பிள்ளையின் மனைவி சிவகாமி, ''இந்த வெயிலிலே கதிர்வேலுவை எங்கே அனுப்புறீங்க? காலையிலேயிருந்து இதுவரையில் அந்தப் பிள்ளை பலகாரம்கூடச் சாப்பிடல்லே; எல்லாம் சாப்பிட்டுவிட்டு வெய்யில் ஆறின பின்னால் போகட்டும், போதும். டேய், கதிரு! நீ போய்ச் சாப்பிடுடா'' என்றாள்.

தமக்குக் குழந்தைகள் இல்லையே என்று பிள்ளைப் பாசத்தை யெல்லாம் தமது செஷயப்பிள்ளையின் மேல் சொரிந்த தம் மனைவியை ஒரு முறை ஏறிட்டுப் பார்த்தார் பிள்ளை. அவள் முகத்திலிருந்த சாந்தத்தைப் பார்த்த பிறகு அவருக்கு எதுவும் பேசத் தோன்றவில்லை. ''சரி, அவனே சோம்பேறி. உன் செல்லம் அவனை முழுச் சோம்பேறியாக்கி விடுகிறது. வேறென்ன? எப்படியாவது போங்கள்'' என்று மனைவி மடித்துக் கொடுத்த வெற்றிலையை வாயில் போட்டுக் கொண்டார். உண்ட களைப்பும்,

இதமாக மனைவி பனை ஓலை விசிறியால் வீசிய காற்றின் இன்பமும் சேர்ந்து அவருக்குத் தூக்கம் கண்ணைச் சுழற்றியது. அரைக் கண் மூடியபடி தூணில் மாட்டியிருந்த உறை போட்ட நாயனத்தைப் பார்த்தபடி படுத்திருந்தார் பிள்ளை.

தடதட வென்று யாரோ நடந்து வரும் காலடி ஓசை கேட்டுக் கண்ணை விழித்த பிள்ளையிடம் இரண்டு தபால் உறைகளைக் கொடுத்தான் கதிர்வேலு. ''பட்டணத்திலிருந்து கடுதாசி வந்திருக்குதுபோல் இருக்குது'' என்றபடி, மூக்குக் கண்ணாடியை மாட்டிக் கொண்டு பிள்ளை முதல் கடிதத்தைப் பிரித்தார்.

அவர் முகத்தில் தோன்றிய மகிழ்ச்சிக் குறியைப் பார்த்து விசிறுவதைக்கூட நிறுத்திவிட்டுச் சிவகாமி, கணவன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். பிள்ளை தமக்குத் தாமே சிரித்துக் கொள்வதும், பிறகு புருவத்தை உயர்த்தி யோசிப்பதுமாகக் கடிதத்தில் மூழ்கியிருந்தார்.

''அண்ணே, நமஸ்காரம். நேற்றே உங்களை வந்து பார்க்கணும் என்று நினைச்




சேன். ஏதோ வேலை குறுக்கிட்டது. இப்போ மூக்குப் பொடி வாங்கப் பெட்டிக் கடைக்கு வந்தேன். தபால்காரர் வந்துவிட்டுப் போனதைப் பார்த்தேன். சரி, ஏதாவது விஷயம் இருக்கும், விசாரிக்கலாம் என்று வந்தேன். அப்பாடா, என்ன வெய்யில்! ஆளையே, கொளுத்துகிறது. டேய், கதிர்வேலு! சில்லென்று ஒரு குவளைத் தண்ணியிலே சிவகாமி அண்ணியிட்டே கேட்டுக் கொஞ்சம் மோரை ஊற்றி வாங்கிக்கிட்டு வா. தொண்டை உலருகிறது. ஆமாம், கடிதம் எங்கேயிருந்து வந்திருக்கிறது? பட்டணத்திலேயிருந்து வந்திருக்குதோ? ஏதாவது கச்சேரி விஷயம்....'' என்று மடமடவென்று மூச்சு விடாமல் பேசினார் தவில் ஆடியபாதம். 'உம்' என்றார் பிள்ளை அழுத்தமாக.

எல்லோரும் மூச்சைப் பிடித்துக்கொண்டு பிள்ளை சொல்லப் போகும் கடித விஷயத்தைக் கேட்கக் காத்திருந்தனர். இடையே, 'மடக் மடக்' என்று கதிர்வேலு கொடுத்த மோர்த் தண்ணீரைக் குடித்து முடித்தார் ஆடியபாதம். கடிதத்தை மடித்து வைத்துவிட்டு, ''இந்தக் கடிதம் பிரபல சினிமா நடிகை வசுமதிதேவியின் மானேஜரிடமிருந்து வந்திருக்கிறது. வசுமதிதேவியின் தங்கைக்குக் கல்யாணமாம். நாயனம் வாசிக்க நம்மைக் கூப்பிட்டிருக்கிறாங்க. 'மணியார்டராக' முன் பணம் அனுப்பியிருக்கிறேன்; எட்டாம் தேதி கல்யாணம். ஏழாம் தேதி புறப்பட்டு வந்து விடுங்கள். ஸ்டேஷனுக்குக் காருடன் வருகிறேன். பண்ணையார் பாலுசாமிதான் உங்களைப் பற்றிச் சொன்னார்' என்று எழுதியிருக்கிறார்'' என்று நிறுத்தினார் கந்தசாமிப் பிள்ளை. அவருக்குப் பெருமை பிடிபடவில்லை.

''என்டா, கதிரு. போன வாரம் சினிமாவுக்குப் போனோமே, அந்தப் படத்திலே வந்தவங்கதானே, இந்த வசுமதிதேவி? அவங்க தங்கைக்குத்தான் கல்யாணமா?'' என்று கேட்டாள் சிவகாமி ஆவலை அடக்க முடியாமல்.

''அவுங்களேதான் அம்மா. இப்போ ரொம்பப் பிரபலமா பட உலகிலே இருக்கிறவங்க வசுமதி தேவிதான்'' என்றான் கதிர்வேலு அடக்கத்துடன். ஆடியபாதம் வெற்றிலைத் தட்டைத் தம் பக்கமாக நகர்த்திக் கொண்டே, ''இது ரொம்ப நல்ல சான்ஸுங்க. கடவுளாகக் கொடுத்திருக்கிறாரு. பரவாயில்லை; அப்போ ஏழாம் தேதி ராத்திரி வண்டிக்கே கிளம்ப வேண்டியதுதான். தவுலுக்குக்கூடப் புதுத் தோல்

போட்டு வார் பிடித்து ஜம்மென்று வைத்திருக்கிறேன்'' என்றார் குஷியுடன். இதற்குள் இரண்டாவது கடிதத்தைப் படித்த பின்னே, ''அடடா.... இப்படி வந்து சேர்ந்திருக்கிறதே, என்ன செய்வது? இந்தக் கச்சேரி வந்தால் இரண்டும் ஒரே நாளில் வந்து விடுகிறது. நம்ப வாழியூர் அம்மன் கோயில் தர்மகர்த்தா இந்தக் கடிதம் எழுதியிருக்கிறார். கோயில் திருவிழா எட்டாம் தேதி; வழக்கம் போல் நீங்கள் வந்து நாயனம் வாசித்துத் திருவிழாவைச் சிறப்பிக்க வேண்டும் என்று. இந்த நிலையில் நான் எப்படிப் போக முடியும்? பணம் வேறு குறைச்சலாகத்தான் தர முடியும், இந்த வருஷம் திருவிழாவுக்குப் பணமே அதிகம் செலவிட வழியில்லை என்றும் குறிப்பிட்டிருக்கிறார்'' என்றார்.

வாசல் திண்ணைக்குப் போய், புகையிலைச் சாற்றை உமிழ்ந்து விட்டு வந்த ஆடியபாதம் ''நீங்க பட்டணத்துக்குப் போவதாகத் தானே, முடிவு பண்ணினீங்க அண்ணே?'' என்றார். சிவகாமி இடையே புகுந்து, ''அதெப்படிங்க, அவ்வளவு சீக்கிரம் முடிவு பண்ணிவிட முடியும்? மாரியம்மன் கோயிலிலே வருஷா வருஷம் வாசிக்கிறது வழக்கமாச்சே'' என்று நிறுத்தினாள்.

''அதெல்லாம் பார்த்தால் முடியாது சிவகாமி. கோயில்லே வாசிச்சா, அந்த ஊரோடு சரி. சினிமா நடிகை வீட்டுக் கலியாணத்திலே எத்தனையோ பெரியவங்க வெளி ஊர்களிலேயிருந்து வந்திருப்பாங்க. பத்திரிகையிலே போட்டோ வந்தாலும் வரும். நமக்கும் விளம்பரம் கிடைக்கும். இந்தக் காலத்திலே முன்னுக்கு வரக் கலை மட்டும் இருந்தால் போதாது. ஓரளவு விளம்பரமும் வேண்டித்தான் இருக்கிறது. இந்தச் சந்தர்ப்பத்தை விட்டு விட்டால் பிறகு கிடைக்காது. கோயிலுக்கு அடுத்த வருஷம் போய்க் கொள்ளலாம். எதுக்கும் நான் ஒரு முடிவுக்கு வந்திட்டேன். கதிர்வேலு மாரியம்மன் கோயில் திருவிழாவிலே வாசிக்கட்டும். கூடச் சுந்தரம் தவுல் வாசிக்கட்டும். நாம்ப பட்டணம் போகலாம். இது விஷயமாக நான் கோயில் தர்மகர்த்தாவுக்கு எழுதி விடுகிறேன். இன்னிக்குத் தேதி ஆறு. இன்னும் இரண்டு நாள்தான் இருக்கு'' என்று கந்தசாமிப் பிள்ளை நிறுத்தினார்.

''ரொம்ப சரியான யோசனை, அண்ணே! உங்க புத்திசாலித்தனம் யாருக்கு வரும்? இரண்டு கச்சேரிகளுக்கும் வழி செய்து விட்டீர்கள். இந்தக் கதிர்வேலுப் பயதான், 'நான் இதுவரையில் தனியாக வாசிச்சதில்லே. பயமாக இருக்கு' என்று ஜாடையாக என்கிட்டே சொல்றான். டேய், கதிரு. தைரியமாய் வாசி. ஒண்ணும் பயப்படாதே. எல்லாம் பிரமாதமாக இருக்கும். அப்போ நான் கிளம்பறேன், அண்ணே; நாளை ராவு ஊருக்குக் கிளம்பணுமே. சட்டைத் துணி எல்லாம் கொஞ்சம் தோச்சுப் போடறேன். வரட்டுமா? அண்ணி வர்றேன்'' என்று விடைபெற்றுக் கொண்டார் ஆடியபாதம்.

**கா**லை நீட்டிக் கொண்டு தலையணையில் தலையை வைத்து வசதியாகப் படுத்தாலும், கந்தசாமிப் பிள்ளைக்கு அதன் பிறகு தூக்கமே வரவில்லை. மனசில் அப்படி ஒரு மகிழ்ச்சி. நினைத்திருக்காத வகையில் அதிருஷ்டம் தம்மைத் தேடி வந்திருப்பதாகவே அவர் நினைத்தார். அதே சமயம், தமது வாத்தியாருடன் பட்டணம் போய்க் கச்சேரி வாசிக்கிற சாக்கிலே சினிமா நடிகையைப் பார்க்கலாம் என்ற எண்ணத்துக்கு இடமில்லாமலும், தனியாக மாரியம்மன் கோயிலில் வாசிக்க வேண்டுமே என்ற இரண்டுவித கவலைகளில் மூழ்கியிருந்தான் கதிர்வேலு.

சிவகாமி அம்மாள், ''இதோ, பாருங்கள். பட்டணம் போனும் போனேன், வந்தேன் என்று இருக்காதீர்கள். வரும் போது எனக்கு இரண்டு பட்டுப் புடவை வாங்கிக் கொண்டு வாருங்கள். முடிந்தால் அந்த நடிகையுடன் நின்று ஒரு போட்டோவும் எடுத்துக் கொள்ளுங்கள். நம் வீட்டுக் கூடத்தில் சட்டம் போட்டு மாட்டி வைத்தால் நன்றாக இருக்கும்'' என்றாள். பிள்ளை கட்டிலிலிருந்து எழுந்து உட்கார்ந்து கொண்டு, ''அதெல்லாம் சரி, ஜரிகை வேஷ்டி, அங்கவஸ்திரம் எல்லாம் சலவைக்குப் போயிருக்கிறது. கதிர்வேலுவை அனுப்பி வாங்கி வரச் சொல்லு. இப்பத்தான் நினைவு வருகிறது. என் தங்க செயின் அறுந்து கிடக்கிறதே, அதைப் பத்தரிடம் கொடுத்துச் சரி செய்யச் சொல்லியிருந்தேன். இந்த மூதேவிப் பயல் அதைக் கவனிக்கலே இல்லே. நான் பட்டணத்திலே நாயனம் வாசிக்க மூளிக் கழுத்தோட உட்கார வேண்டியதுதான். பொறுப்பில்லாதவங்களோட அவஸ்தைப்படறது சொல்லி முடியாது. இனி மேலே பொழுதும் இல்லே. என்ன செய்யலாம்?'' என்றார்.

அவர் கோபக் குரலைக் கேட்டு மெதுவாகக் கதிர்வேலு, ''நேற்றுக்கூடப் பத்தர் வூட்டுக்குப் போயிருந்தேனுங்க. அவரு ஊருக்குப் போயிருக்கிறாராம்'' என்றான் பணிவாக.

பிரச்னைக்கு ஒரு முடிவு சொன்னவள் சிவகாமிதான். ''ஒண்ணும் கவலைப்படாதீங்க. மெல்லிய பட்டு நூலாலே கட்டி வச்சிடலாம். அவசியத்துக்குப் போட்டுக்கலாம். ஒண்ணும் ஆகாது. பிறகு வாசித்து முடித்ததும் ஞாபகமாகச் சங்கிலியைக் கழற்றி வைத்து விடுங்கள்'' என்றாள். ஒருவிதத்தில் பிள்ளையும் அதை ஒப்புக் கொண்டார்: ஏன் என்றால் முல்லையூர் ஜமீந்தாரால் பரிசளிக்கப்பட்ட தங்கப் பதக்கம், சுமார் நாலு சவரன் கொண்டது; அந்தச் சங்கிலியில் தொங்கிக் கொண்டிருந்தது; தம் வாசிப்புக்கு விளம்பரமாக இருக்கும் என்பது தான் காரணம்.

**ம**று நாள் இரவு மெயிலில் முதல் வகுப்புப் பெட்டியில் வெள்ளி கூஜா, வெள்ளி வெற்றிலைச் செல்லம், பெட்டி படுக்கை முதலியவைகளுடன் சில்க் சட்டை, வைரக் கடுக்கன், ஜரிகை வேஷ்டி, ஜவ்வாதுப் பொட்டு என்று வெகு ஆடம்பரமாக அமர்ந்திருந்தார் நாயனம் கந்தசாமிப்பிள்ளை. இரவெல்லாம் அவருக்கு ஒரே யோசனை. பைரவி ராகத்தை ஆலாபனை பண்ணிப் பல்லவி வாசிக்கலாமா? அல்லது ஷண்முகப்பிரியாவை

எடுத்துக் கொள்ளுவோமா என்று. சினிமா நடிகையின் வீடாயிற்றே; சினிமாப் பாட்டு ஏதாவது வாசிக்கச் சொல்லுவார்களோ என்ற நினைவும் தலைதூக்கியது. மறுகணம், 'அதெல்லாம் அப்படியொன்றும் கேட்கமாட்டார்கள்; கம்பீரமாகக் கர்நாடக பாணியிலே வாசிக்க வேண்டியதுதான்' என்று தம்மைத் தாமே தேற்றிக் கொண்டார்.

''அண்ணே, எழுந்திருங்க. கார் வந்திடிச்சு. மானேஜர் ஐயாவும் உங்களைத் தேடிக்கிட்டு வந்திருக்கிறாரு'' என்ற ஆடியபாதத்தின் குரலைக் கேட்டு, பின்னை வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தார். ''நமஸ்காரம்! வாருங்கள். கார் தயாராக இருக்கு. நாம்ப காப்பி சாப்பிட்டுவிட்டு நேரே கிளம்பிடலாம். ஒன்பது மணிக்குத்தான் முகூர்த்தம்..'' என்றார் மானேஜர். கப்பல் போன்ற பளபளக்கும் பெரிய காரில் உட்கார்ந்து, பட்டணத்து ரோடு வழியே போவது ஆடியபாதத்துக்கு மிகவும் பிடித்திருந்தது.

ஒரு பெரிய ஹோட்டல் முன்னால் காரை நிறுத்திவிட்டு மானேஜர் ''வாருங்கள், காப்பி சாப்பிட்டுவிட்டு வரலாம்'' என்று அழைத்தார். ''கல்யாண வீட்டில் காப்பி பலகாரம் என்று வைத்துக் கொள்ளாமல் ஏன் அண்ணே ஹோட்டலுக்குப் போகிறோம்?'' என்று ஆடியபாதம் ரகசியமாகக் கேட்டதற்கு, ''பேசாமல் இரும். நாம்ப போகிறது பெரிய இடம். எனக்கே விஷயம் ஒன்றும் புரியல்லே'' என்றார் பிள்ளை. காப்பி சாப்பிட்டுவிட்டு மறுபடியும் காரில் பிரயாணம். டவுனைவிட்டு, தோப்பு துரவுகளைத் தாண்டி வண்டி ஓடிக் கொண்டிருந்தது. விஷயம் புரியாத பிள்ளை, ''மானேஜர், ஐயா! நாம்ப இப்போ எங்கே போகிறோம்?'' என்று கேட்டார்.

''அடடா! நான் உங்களிடம் சொல்லவே மறந்துவிட்டேன். நம்ப வசுமதி அம்மாவின் குலதெய்வமான மாரியம்மன் கோவிலிலே தான் கலியாணம் நடக்கிறது. அப்படி அவங்களுக்குப் பிரார்த்தனை. நாளை மாலை சென்னையில் வரவேற்பு. அதற்கு நாட்டிய நட்சத்திரம் தாராதேவியின் நாட்டியம் ஏற்பாடாகியிருக்கிறது. வசுமதி அம்மா கல்யாண மாப்பிள்ளை அவங்க சொந்தக்காரங்க எல்லாரும் முன்னாடியே போயாச்சு. எட்டுக் கார் போயிருக்கிறது. அங்கே ஒரு வீடு ஏற்பாடு செய்திருக்கிறேன். நீங்க சீக்கிரம் குளிச்சிட்டுக் கோயிலுக்கு வந்திடுங்க. இதோ. ஊரும் வந்தாச்சு. இறங்குங்க'' என்று ஒரு வீட்டு வாசலில் காரை நிறுத்திவிட்டுக் கார் கதவைத் திறந்து விட்டார் மானேஜர். கந்தசாமிப்பிள்ளைக்கு அந்த ஊரைப் பார்த்ததும் 'திக்'கென்றது. எந்த ஊருக்கு வர முடியாது என்று தம் சிஷ்யனை அனுப்ப முடிவு செய்திருந்தாரோ, அதே மாரியம்மன் கோவில் இருக்கும் ''வாழியூர்'' தான் அது. எதுவும் பேசத் தோன்றாமல் குளித்து உடை மாற்றிக் கொண்டு கோயிலுக்கு மானேஜருடன் விரைந்தார் அவர்.

கோயிலின் வாசலில் வரிசையாக ஏழெட்டுக் கார்கள் நின்று கொண்டிருந்தன. இரண்டு மூன்று போலீஸ் வண்டிகளும், நிறை



''இந்த இரண்டு வீட்டுக்கும் மத்தியிலே ஒரு வீடு இருந்ததே, எங்கே சார் காணோம்?''

''வீட்டைக் காலிபண்ணச் சொல்லி வீட்டுக்காரர் வக்கீல் நோட்டீஸ் அனுப்பினாராம். குடித்தனக்காரர் காலி பண்ணிக்கொண்டு போய்விட்டார்!''

---

யப் போலீஸ்காரர்களும், முன்னமே வந்து அணிவகுத்து நின்று, நடிகையைப் பார்க்க வந்த கும்பலைக் கட்டுப்படுத்திக் கொண்டிருந்தனர். நடிகைகளையும், மாப்பிள்ளை வீட்டுக்காரர்களையும் தவிர அதிகமாக யாரையும் கோயிலுக்குள் அனுமதிக்கவில்லை. மானேஜர் ஓடி ஆடி வேலை செய்து கொண்டிருந்தார். ''கோயில் மண்டபத்தருகே நாயனக்காரரை உட்கார வையுங்கள். வாசிக்கச் சொல்லுங்கள்'' என்று ஒரு பிரமுகர் சொல்லக் கந்தசாமிப்பிள்ளை நாயனம் வாசிக்க ஆரம்பித்தார். முதலில் ''பிலஹரி'' ராகம் சற்று வாசித்துவிட்டு ஒரு கீர்த்தனையை ஆரம்பித்தார். கும்பலினாலும், உஷ்ணத்தினாலும் அவர் உடல் வியர்த்தது. அங்கிருந்தவர்களில் யாரும் நாகஸ்வர இசையைக் கவனித்ததாகவே தெரியவில்லை. போலீஸ்காரர்கள் உட்பட எல்லோரும் நடிகையைப் பார்க்கும் ஆவலில் மூழ்கியிருந்தார்கள். இடையே கழுத்தில் தங்கச் சங்கிலி இருக்கிறதா என்பதைக் கடைக்கண்ணால் கவனித்துக் கொண்டார் பிள்ளை. 'கிளிக், கிளிக்' என்று மண மக்களையும், நடிகைகளையும் போட்டோ எடுத்தபடி இருந்தார்கள் பத்திரிகைக்காரர்கள். ''கோயிலுக்குள்ளே இந்த நாதஸ்வர இசை ரொம்ப முழங்குகிறது. பேசுவதுகூடக் காதிலே விழல்லே. இதற்குத் தான் டேப் ரிக்கார்டரிலே சத்தத்தைக் குறைத்து நாதஸ்வர இசையைப் போடலாம் என்றேன். இவங்க கேக்கல்லே. இப்போ பேசிப் பேசித் தொண்டை கட்டிவிட்டது'' என்று குறைப்பட்டுக் கொண்டார் ஒரு சில்க் சட்டை ஆசாமி. இந்த வார்த்தைகள் கந்தசாமிப் பிள்ளைக்கு வேதனையை அளித்தன. பந்தல் நிறையப் பத்திரிகையாளர்களும்

நடிகைகளும் பிரமுகர்களும் நிரம்பியிருக்க, நாத இசைவெள்ளம் பொழிந்து பல பாராட்டுக்களைப் பெறலாம் என்று எண்ணியதற்கு மாறாக இப்படிச் சின்னஞ்சிறு கோயில் முற்றத்தில் ஓரமாக உட்கார்ந்து யாரும் கவனியாமல் இருக்க, நாயனம் வாசிக்க வேண்டிய நிலையை நினைத்து மனம் கலங்கினார் பிள்ளை. இதை ஒன்றும் கவனியாமல், தடதடவென்று தவுலில் தம் கைவரிசைகளைக் காட்டிக் கொண்டிருந்தார் ஆடியபாதம். ''கெட்டி மேளம்; கெட்டி மேளம்'' என்று மானேஜரும் புரோகிதரும் கத்தியது கூட அவர் காதில் விழவில்லை. பின்னைதான் 'ஆடியபாதம், கெட்டி மேளம் வாசி' என்று சொன்னார்.

சுமார் இருபது நிமிஷங்களில் கலியாணம் முடிந்து பெண்ணும் மாப்பிள்ளையும் உடன் வந்திருந்த நடிகை நடிகர்களும், காரில் சென்னைக்குக் கிளம்பி விட்டார்கள். பளபளவென்று வைரத்திலும், பட்டிலும் ஜரிகையிலும் ஜொலிக்கும் நடிகைகளில் யார் வசுமதி தேவி என்பதுகூடப் பிள்ளைக்குத் தெரியவில்லை. அநேகமாகக் கோயிலில் இருந்தவர்களை யெல்லாம் அனுப்பிவிட்டு வந்த மானேஜர், ''பிள்ளைவாள், உங்களுக்கும் 'வேன்' தயாராக இருக்கிறது. வாத்தியங்களுடன் ஏறிக் கொள்ளுங்கள்'' என்றார். மறு பேச்சுப் பேசாமல் காரில் உட்கார்ந்து கொண்டு துண்டால் வியர்வையைத் துடைத்துத் தம்மை ஆசுவாசப்படுத்திக் கொண்டார் பிள்ளை.

''அண்ணே! இருபது நிமிஷங்கள்தான் நமக்கு வேலை. கவனிச்சீங்களா? அந்தக் கீர்த்தனையைக்கூட முடிக்கல்லியே. அதிசயமாயிருக்கு. சாதாரணக் கலியாணத்திலே நாலு மணி நேரமாவது வாசிக்கணும். அது போகட்டும். அதோ மானேஜர் வாராரு. அவருகிட்டே பணத்தைக் கேளுங்களேன். போகிற போக்கைப் பார்த்தா நம்பளை நேரே ஸ்டேஷனுக்கே அனுப்பிச்சிடுவாங்க போலிருக்கு!'' என்று கிசுகிசுத்தார் ஆடியபாதம். மேல் பேச்சுக்கு இடம் வைக்காமல் மானேஜரே வண்டி அருகே வந்து, ''பிள்ளைவாள், கொஞ்சம் வர்றீங்களா? பணத்தைத் தந்து விடுகிறேன். வேலை முடிந்ததும், எல்லாருக்கும் பணத்தைக் கொடுத்து விடு என்று அம்மா சொன்னாங்க. வாங்க வீட்டுக்குள் போகலாம்'' என்று கூப்பிட்டார்.

ஆயிரம் உபசார வார்த்தைகளுக்கிடையே பணத்தைப் பெற்றுக் கொண்டார் கந்தசாமிப்பிள்ளை. பணத்தைப் பத்திரமாகக் கைப்பைக்குள் வைத்துக் கொண்டார். வாசலுக்கு வந்து பார்த்ததும் வண்டியைக் காணாமல் ''என்னங்க, கார் எங்கே காணோம்?'' என்றார் பதற்றத்துடன். ''நான்தான் உங்கள் ஆட்களை வாத்தியத்துடன் வேனில் அனுப்பி விட்டேன். நெருக்கி அடித்துக் கொண்டு நீங்களும் வேனில் உட்கார்ந்து போவானேன்? என்னுடன் காரில் போகலாம். சற்று உட்காருங்கள். பக்கத்துக் கிராமத்தில் மாப்பிள்ளையின் சொந்தக்காரர்கள் யாரோ இருக்கிறார்களாம். அவர்களைப் பார்த்துவிட்டு வர வேண்டிய வேலை இருக்கிறது. ஓர் அரை மணி நேரத்தில் வந்து விடுகிறேன். நீங்கள் சற்று ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். டேய், முத்து' ஐயாவை ஜாக்கிரதையாகக் கவனிச்சுக்க. காப்பி கொண்டு வந்து கொடு. ஜமுக்காளத்தைப் போடு. பிறகு பன்னீர்ச் செம்பு, சந்தனக் கிண்ணம் வெள்ளித் தட்டுக்கள், பூக்கூடைகள் எல்லாவற்றையும் சரி பார்த்து எடுத்து வை'' என்றார் மானேஜர்.

வெளியே கார் கிளம்பும் சத்தம் கேட்டது.

கந்தசாமிபிள்ளை 'அப்பாடா' என்று ஜமுக்காளத்தில் உட்கார்ந்து வெற்றிலை போட்டுக் கொள்ள ஆரம்பித்தார். அரை மணி; ஒரு மணி என்று பகல் பன்னிரண்டு மணியாகியும் மானேஜர் வரவில்லை. முத்து சாப்பாடு வாங்கி வந்தான். சாப்பிட்டு விட்டு ஜமுக்காளத்தில் படுத்துக் கொண்ட பிள்ளை நன்றாகத் தூங்கி விட்டார். மாலை ஐந்து மணிக்குத்தான் கண்ணை விழித்தார். முத்துவும் கூடத்தில் படுத்துக் குறட்டை விட்டுக் கொண்டிருந்தான். வெயிலில் தூங்கி எழுந்த பிள்ளைக்கு உடல் எல்லாம் வியர்த்தது. பின்பக்கம் இருந்த கிணற்றைப் பார்த்ததுமே குளிக்க வேண்டும் என்று தோன்றியது. ஜில்லென்று இரண்டு வாளி தண்ணீரை இறைத்து உடம்பில் கொட்டிக் கொண்டார். அது வெகு இதமாக இருந்தது. இன்னும் ஒன்று, இரண்டு என்று ஏழெட்டு வாளி தண்ணீர் கொட்டிக் கொண்டு மறுபடியும் ஒரு தொட்டித் தண்ணீருக்காக வாளியைக் கிணற்றில் விட்டார். திடீரென்று அவர் கழுத்திலிருந்து 'தங்க செயின்' டாலருடன் அறுந்து கிணற்றில் விழுந்தது. பிள்ளை 'ஐயோ' என்று வாய்விட்டுக் கத்திவிட்டார். குரலைக் கேட்டு முத்து எழுந்து வந்தான். பிள்ளை உடல் பதற விஷயத்தைச் சொன்னார். இதற்குள் விஷயம் தெரிந்து பக்கத்து வீடுகளிலிருந்து நாலைந்து பேர்களும் வந்தார்கள். கிணற்றில் இறங்கத் தெரிந்த ஒருவன் கிணற்றில் இறங்கித் தண்ணீருக்கு அடியில் முழுகி ஒரு மணி நேரம் தேடிவிட்டு, ''இது பழைய கிணறுங்க. தண்ணீர் இறைத்துச் சுத்தம் செய்தே ரொம்ப நாள் ஆகியிருக்கும் போலிருக்கிறது; ஒரே சேறாக இருக்கிறது. கையிலே ஒன்றும் கிடைக்கலீங்க'' என்றபடி கிணற்றுக்கு வெளியே வந்தான். வந்தவர்கள் எல்லாரும் ஒவ்வொரு விதமாகச் சமாதானம் சொல்லி விட்டுப் போய் விட்டார்கள். பிள்ளை கவலையுடன் ஈர உடையை மாற்றிக் கொண்டார்.

பொழுது ஏறி இலேசாக இருள் பரவ ஆரம்பித்துவிட்டது. முத்துகூட, ''கவலைப்படாதீங்க, ஐயா! இந்த வீட்டின் சொந்தக்காரரை நம்ப மானேஜர் ஐயாவுக்கு ரொம்ப நன்றாகத் தெரியும். கிணற்றை இறைத்து நகையை எடுத்துக் கொடுக்கச் சொல்லுவாரு. இன்னும் அவரு வரல்லியே என்றுதான் யோசிக்கிறேன்; இந்த ஊரு மாரியம்மன் கோயில்லே, அதாவது காலையிலே கலியாணம் நடந்ததே, அதே கோயில்லேதானுங்க இன்னிக்குத் திருவிழாவாம். ஏழு மணிக்கெல்லாம் சாமி கிளம்புதாம்; யாரோ வெளியூரிலேருந்து நாயனம் வாசிக்க வர்றாங்களாம். நான் போய்ப் பார்த்துட்டு வர்றே

ளுங்க'' என்று வெளியே கிளம்பிவிட்டான். கந்தசாமிப் பிள்ளைக்கு ஒரு குரல் அழவேண்டும் போல் இருந்தது. கைவிட்டுப் போன நகை இனிமேல் கிடைக்காது என்றே தோன்றியது அவருக்கு. 'எத்தகைய நஷ்டம்? அம்மன் சந்நிதியில் வாசிக்காமல் பணத்துக்கு ஆசைப்பட்டு வேறு இடத்தில் வாசிக்க வந்ததன் பலன்தான். இப்படி ஆயிற்று. காலையில் சரியாக வாசிக்கவும் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. கிடைத்த பணத்தை விட நஷ்டமும் ஏற்பட்டு விட்டது. இது கண்டிப்பாகப் பராசக்தியின் சோதனைதான். இனிமேலாவது ஊர்வலத்தில் வாசிக்கலாம் என்றால், வாத்தியமும் காரில் ஆடியபாதத்துடன் பட்டணத்துக்குப் போய்விட்டது. இன்று நான் வாசிப்பதில் அம்மனுக்கு விருப்பம் இல்லை போலிருக்கிறது.'

தூரத்தே அம்மன் ஊர்வலம்கிளம்பி விட்டதற்கு அறிகுறியாக மேள சத்தமும், வாண வேடிக்கையும், காஸ் விளக்குகளும் தெரிந்தன. மல்லிகைப் பூவினால் அலங்கரித்த பல்லக்கில் ரோஜாப்பூ பாவாடை அணிந்து கொண்டு, கருணை கண்களில் மிளிர, அபய கரத்துடன் அன்னை பவனி வந்து கொண்டிருந்தாள். தர்மகர்த்தாவும், மற்ற ஊர்ப் பிரமுகர்களும், கையில் சந்தனம், வெற்றிலை பாக்கு, இவைகளுடன் பல்லக்கின் முன் நடந்து வந்து கொண்டிருந்தார்கள். ஜனக் கும்பலுக்கு நடுவே கதிர்வேலு நாயனம் வாசித்துக் கொண்டிருந்தான். ''ஜனனீ நின்னுவினு'' என்ற கீர்த்தனை அவன் குழலிலிருந்து கிளம்பித் தேனாக ஒலித்தது. ரசிகர்கள் மெய் மறந்து ஆகாகாரம் செய்தார்கள். தவில் சுந்தரமும் வெகு அழகாக வாசித்துக் கொண்டிருந்தான்.

பக்கத்துத் தெருவிலிருந்து கிளம்பிய ஊர்வலம் பிள்ளை இருக்கும் வீட்டு வாசலுக்கு வந்ததும் துண்டை இடுப்பில் கட்டிக் கொண்டு பிள்ளை தெருவில் இறங்கி வந்து, ''தாயே, பராசக்தி, என்னை மன்னித்துவிடு. எனக்கு இந்தத் தண்டனை போதும்'' என்று என் சாண்கிடையாகப் பல்லக்குக்கு எதிரே தரையில் விழுந்து வணங்கினார். திடீரென்று கந்தசாமிப் பிள்ளையைப் பார்த்த தர்மகர்த்தா, ''பிள்ளைவாள் வந்துவிட்டீர்களா? எனக்கு அப்பவே தெரியும், எது எப்படி இருந்தாலும், நீங்கள் அம்மன் காரியத்தை விட்டு விட மாட்டீர்கள் என்று. உங்கள் சிஷ்யப் பிள்ளையும் பிரமாதமாக வாசிக்கிறான்'' என்றார் மகிழ்ச்சியுடன்.

ஒரு பிரமுகர் சந்தனத்தைப் பிள்ளையின் மார்பில் பூசினார். எதிரே திடீரென்று தன் குருநாதரைக் கண்டதும் கதிர்வேலு ஒரு கணம் திகைத்து நின்று விட்டான். பட்டணத்தில் இருக்க வேண்டியவர் எப்படி இங்கு வந்தார் என்பதே அவனுக்குப் புரியவில்லை. மறு கணம், ''ஐயா, இந்தாருங்கள்'' என்று வாத்தியத்தை அவர் முன் நீட்டினான்.

பிள்ளை அழுத்தமாக ''வாசியடா பயலே! இன்று நீயே வாசி. அந்தப் பாட்டின் சரணத்தை நிரவல் பண்ணு'' என்றார்.

''என்ன இருந்தாலும், பிள்ளைவாள், உங்கள் குணம் யாருக்கு வரும்! சிஷ்யனை வாசிக்கச் சொல்லிக் கேட்டு மகிழும் தங்கமான குணம் உங்களுடையது'' என்று புகழ்ந்தார். இந்தப் புகழ்மாலையைக் கேட்டு வெட்கித் தலை குனிந்து கொண்டார் பிள்ளை.

கூட்டத்தை விலக்கிக் கொண்டு வந்த மானேஜர், ''ஐயா, ரொம்ப மன்னிக்கணுங்க. போன இடத்திலே கார் ரிப்பேரா யிடுச்சு. மெக்கானிக்கைக் கூட்டிக்கிட்டு வந்து வண்டியைக் கிளப்ப இத்தனை நேரம் ஆச்சு. வாங்க, போகலாம்'' என்று கூப்பிட்டார். ''நான் வரவில்லை ஐயா, தயவு செய்து நீங்க என் நாதசுரத்தைத் தவில்காரரிடம் கொடுத்து மற்ற வாத்தியக்காரர்களையும் உடனே இங்கே அனுப்பி வையுங்க. நாளைக்கு நான் இந்தக் கோயில்லே வாசிக்கப் போறேன். இது என் காணிக்கை'' என்றார்.

''ஆகா, பரா சக்தியின் அருளே அருள். இதோ பாருங்கள், பிள்ளைவாள்! இந்த வருஷம் திருவிழாவுக்குப் போதிய பணம் சேரவில்லையே, எப்படி நாயனம் வைத்து ஊர்வலம் நடத்தப் போகிறோம் என்று கலங்கிக் கொண்டிருந்தோம். தேவியின் விருப்பப்படி ஒரு நாயனத்துக்கு இரண்டு நாயனமாக, இரண்டு நாளைக்கு நாயனம் அமைந்து விட்டது. இதிலிருந்து எனக்கு ஒன்று புரியுது. பராசக்தியின் திருவிழாவுக்கு என்று நாம் சிரமப்பட வேண்டியது இல்லை. அம்பாளே செய்து கொள்ளுகிறாள். நாம் நடத்துகிறோம் என்ற எண்ணம் அம்மன் விஷயத்தில் தவறு! அப்படித்தானே பிள்ளைவாள்?'' என்றார் தர்மகர்த்தா பக்தியுடன்.

''சந்தேகமில்லை. அப்படியேதான். குற்றம் புரிந்தவனைத் தண்டிக்கவும், குற்றம் உணர்ந்து மன்னிப்புக் கேட்பவனை மன்னித்து விடவும் அம்பிகையைப் போல் யாராலும் முடியாது'' என்றார் பிள்ளை. நாயனத்திலிருந்து இசை பொழிந்து கொண்டிருந்தது. மலர் மாலைகளுக்கு நடுவே பராசக்தியின் சாந்த முகம், ''உன்னை மன்னித்து விட்டேன்'' என்று சொல்வது போலிருந்தது கந்தசாமிப் பிள்ளையின் அந்தராத்மாவுக்கு.

---

## ஹனுமான் இன் லண்டன்!

ராஜ்கபூர் தம் 'சங்கம்' படத்தை ஐரோப்பிய நாடுகளில் எடுத்ததைத் தொடர்ந்து, தற்போது அநேக இந்திப் படாதிபதிகள் தங்கள் படங்களை அயல் நாடுகளில் எடுத்து வருகிறார்கள். வெளிநாடுகளில் படமெடுப்பதே வட இந்தியாவில் பட நாகரிகமாகி விட்டது. ஒரு படாதிபதி ராமாயணக் கதையை 'ஹனுமான் இன் லண்டன்' என்ற தலைப்பில் லண்டனில் எடுக்க உத்தேசித்துள்ளார். —கி.கி.



ஆதாரம்: 'ஸினி அட்வான்ஸ்.'

---




* 'தாசில்தார் ஆட்சி!'
* நல்ல படைப்பு
* அறிவிப்பினால் வந்த வினை
* சைவப் பெரியார்

"'பர்மிட் வந்தது'' என்ற கதையில் பரமசிவன் 4 குவிண்டால் அரிசி பெங்களூருக்கு அனுப்ப இந்தத் தாசில்தார் ராஜ்யத்தில் பர்மிட் வாங்கப் போய் ஒன்றரைக் குவிண்டாலுக்காவது ஓரளவு சுலபமாய்ப் பர்மிட் வாங்கிவிட்டார். ஆனால் இந்த பர்மிட், லைசென்ஸ் ராஜ்யத்தில் மாகாணத்துக்குள் ஜில்லாவிட்டு ஜில்லா அனுப்புவதற்கே பிரதப் பிரயத்தனம் செய்ய வேண்டியிருக்கிறது. 6 குவிண்டால் அனுப்ப ஆறு மாத காலம் அலைந்த அநுபவம் என்னை இவ்வாறு எழுதத் தூண்டுகிறது. என்றுதான் இந்தத் 'தாசில் தார் ஆட்சி'க்கு முடிவோ, தெரியவில்லை.

பொள்ளாச்சி
8-7-1966 சுரேஷ்

இக்கதையின் நகல்கள் பலவற்றை சம்பந்தப்பட்ட அரசாங்க அதிகாரிகள் அனைவருக்கும் அனுப்பினால் என்ன?

நாகப்பட்டினம் வி. ராமசாமி
12-7-66 மற்றும் அவரது நண்பர்கள்

● 'பர்மிட் வந்தது' என்ற ''சிறு கதை'' குறித்துப் பாராட்டியும், பர்மிட் லைசென்ஸ் கோட்டா முறைக்குக் கண்டனம் தெரிவித்தும் ஏராளமான கடிதங்கள் வந்துள்ளன. கடிதம் எழுதிய அனைவருக்கும் நன்றி. — ஆசிரியர்

கல்கி 10-7-66 இதழில் 'கலைவாணம்' எழுதிய ''எதை நினைத்து அழுதான்?'' அருமையான படைப்பு. பாராட்டுக்குரியது.

கல்கியில் இது போன்ற நல்ல கதைகளை நான் எதிர்பார்க்கிறேன். இந்தக் கதையை நான் படித்தபோது என் மனப் போராட்டம் அடங்கச் சில விநாடிகள் பிடித்தன.

லால்குடி
8-7-66 சிறுதைநூர் தேவராசன்.

ரேடியோவில் விலைவாசி பற்றிச் சொன்னதால் எங்கள் ஊரில் குறைந்த விலைக்கு விற்றவர்கள் கூட அதிக விலைக்குப் பொருள்களை (ரேடியோவில் சொன்ன பிறகு) விற்கிறார்கள்.

ரேடியோவில் சொன்ன விலை: உருளைக் கிழங்கு ஒரு கிலோ ரூ. 1.00; கடலை எண்ணெய் ஒரு லிட்டர் ரூ. 4.10; துவரம் பருப்பு ஒரு லிட்டர் ரூ. 1.10. ஆனால் இதற்கு முன் தினம் நான் வாங்கிய விலை: உருளைக் கிழங்கு ஒரு கிலோ ரூ. 0.80; கடலை எண்ணெய் ஒரு லிட்டர் ரூ. 3.90; துவரம் பருப்பு ஒரு லிட்டர் ரூ. 0.90. ரேடியோவில் விலையைக் கேட்டதும் கடைக்காரர் அன்றே விலையை அதிகம் செய்துவிட்டார். சென்னையில் விலை அதிகமிருக்கலாம். அதற்காக நாங்களும் அதிக விலை கொடுத்து வாங்குவது என்ன நியாயம்?

சேலம்.
18-6-66 வி. எம். லட்சுமிநாராயணன்

சைவ சித்தாந்த சாஸ்திரத்தில் இன்று நிபுணர்களாக விளங்குகிறவர்கள் விரல்விட்டு எண்ணக்கூடிய ஒருசிலரே. அவர்களில் திரு க. வச்சிரவேலு முதலியார் அவர்கள் குறிப்பிடத்தக்கவர். சில ஆண்டுகளுக்கு முன்னால் காசி, அலகாபாத் ஆகிய பல்கலைக் கழகங்களில் அவர் சைவ சித்தாந்தம் பற்றி ஆற்றிய ஆங்கில உரைகளை அண்ணாமலைப் பல்கலைக் கழகம் புத்தகமாக வெளியிட்டது.

ஓட்டம் சாட்டமும், ஆரவாரப் பகட்டும் நிறைந்த இன்றைய உலகில் அவர் அமைதியாகத் தொண்டாற்றி வருபவர். சித்தாந்த சிகாமணி, சைவ சித்தாந்த ஞானபானு போன்ற பட்டங்களைப் பெற்றவர். காஞ்சி பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளியின் தலைமை ஆசிரியர் பதவியிலிருந்து இவ்வாண்டு அவர் ஓய்வு பெறுகின்றார். உயர்நிலைப்பள்ளி ஆசிரியர்களுக்கான தேசிய விருதைச் சென்ற ஆண்டு அவர் பெற்றார். ''கே.வி.'' என்ற பெயரிலே மாணவர்களது பக்திக்கும், வியப்புக்கும் பாத்திரமாகியுள்ள திரு முதலியாரிடம் கல்வி பயிலும் பாக்கியம் பெற்ற ஆயிரக்கணக்கான மாணவர்கள் இன்று நாடெங்கும் பரவலாயிருக்கிறார்கள்.

கடந்த முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாகச் சமயத்துக்கும், கல்விக்கும் அரும்பணி ஆற்றி வரும் அவருடைய மணிவிழாவை இன்னும் இரண்டொரு மாதங்களில் சிறப்பாகக் கொண்டாட நம் நாட்டின் பல பகுதிகளையும், இலங்கையையும் சார்ந்த பிரமுகர்கள், அறிஞர்கள் ஆகியோர் அடங்கிய மணிவிழாக் குழு ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. விழாவின் போது அவருக்குப் பொற்கிழி ஒன்று அளிக்கவும், மணிவிழா மலர் ஒன்று வெளியிடவும் குழுவினர் முடிவு செய்துள்ளனர். அவரது அன்பர்களும் பழைய மாணவர்களும் தாராளமாக நிதி வழங்கி விழாவைச் சிறப்பிக்க வேண்டும் என்று மணிவிழாக் குழுவினர் சார்பில் கேட்டுக் கொள்கிறேன். நன்கொடைகளைக் கீழ்க்காணும் விலாசத்துக்கு அனுப்பி உதவலாம்:

வி. ஆர். கோபாலகிருஷ்ணன் (செயலாளர்)
பொருளாளர் திரு க. வச்சிரவேலு
முதலியார் அவர்கள் மணிவிழாக்குழு,
ஸ்ரீ ராமா வாட்ஜ், பெரிய காஞ்சிபுரம்

காஞ்சிபுரம்
6-6-66 வி. ஆர். கோபாலகிருஷ்ணன்

Edited printed & published by T Sadasivam on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Kalki Press Kilpauk Madras 10




# இளமையிற் கல்

சமையல் பயிலும் சிறுமி, அவளே வருங்காலக் குடும்பத் தலைவி. கற்றுக்கொடுங்களேன் ஒரு நாள். எவ்வளவு விரைவில் கற்றுக்கொடுக்கிறீர்களோ அவ்வளவுக்கு அவ்வளவு மேல்.

உங்கள் குழந்தைகளுக்கு நீங்கள் இப்போதே கற்றுக்கொடுக்க வேண்டிய மற்றொரு பாடம், பற்களையும் ஈறுகளையும் ஒழுங்கு தவறாமல் பராமரிப்பதே. பற்சிதைவும் ஈறு நோய்களும் வராமல் பாதுகாத்த உங்கள் உதவிக்காகப் பிற்காலத்திலே நன்றி செலுத்துவார்கள் அவர்கள்.

போர்ஹான்ஸ் பற்பசைகொண்டு பற்களையும் ஈறுகளையும் பாதுகாத்துக்கொள்ள இன்றே பழக்குங்கள் உங்கள் செல்வங்களை. அது ஒரு பல் வைத்தியரின் தயாரிப்பாகும்; ஈறுகளின் நலனுக்காக டாக்டர் போர்ஹான்ஸ் தயாரித்த விசேஷத் துவர் மருந்துகள் அடங்கிய பற்பசை உலகில் இதுவொன்றே. தவறாமல் உபயோகித்துவந்தால் பளிச்சென்ற வெண் பற்களையும் பாங்கான உறுதிவாய்ந்த ஈறுகளையும் பெற்று விளங்குவது திண்ணம்.

"CARE OF THE TEETH AND GUMS" என்ற சிறிய வண்ணப் புத்தகத்தை இலவசமாகப் பெற, தபால் செலவுக்காக 10 பைசா தபால் வில்லைகளை இணைத்து எழுதவும், மானேர்ஸ் டென்ட்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை நம்பர் 10031, பம்பாய்.




## COUPON

K.6

Please send me a copy of the booklet
"CARE OF THE TEETH AND GUMS"

*Name* ................................................................

*Address* ................................................................

................................................................

உயரிய பண்போடு உபயோகிக்கவும் உதவவும் உகந்தது பனாமா

# பனாமா

இழுக்க இழுக்க
இன்பம் இறுதிவரை




